அனைத்திந்திய நூல்வரிசை

# பன்கர்வாடி

வெங்கடேஷ் மாட்கூல்கர்

தமிழாக்கம் :

உமாசந்திரன்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# முன்னுரை

'பன்கர்வாடி' முதன் முதலில் 1954 இல் ஒரு மராட்டி வாரப் பத்திரிகையின் தீபாவளி மலரில் வெளி வந்து, மறு வருடமே புத்தக வடிவில் பிரசுரமாகியது. விரைவிலேயே இந்தப் படைப்பு மராட்டி வாசகர்களுக்கு மிகவும் பிடித்தமானதாகிவிட்டது. எல்லா விமரிசகர் களும் இதைப் புகழ்ந்து எழுதினார்கள். மிகவும் நவீனமான 'வெகுண்ட தலைமுறை' கூட யுத்த காலத்திய கிராமச் சமுதாயத் தைச் சரியாகவும் உள்ளது உள்ளபடியும் சித்திரிக்கும் நூல் என்று இதைப் புகழ்ந்து பேசியது. 1958ஆம் ஆண்டில் இந்த நாவல் 'தி விலேஜ் ஹேட் நோ வால்ஸ்' ( The Village Had No Walls ) என்ற தலைப்புக் கொண்ட ஆங்கில மொழிபெயர்ப்பின் வாயிலாக நம் நாட்டிலும் வெளி நாடுகளிலும் பரந்த அளவில் வாசகர்களின் பாராட்டுதலைப் பெற்றது. ஆங்கில மொழி பெயர்ப்பின் இரண்டாம் பதிப்பு இப்போது விரைந்து விற்பனையாகி வருகிறது. டேனிஷ் மொழியிலும் இது வெளிவந்திருக்கிறது. இந்நூலின் பகுதிகள் அமெரிக்க இலக்கியத் தொகுப்புகளில், முக்கியமாக 'எ ட்ரெஷரி ஆஃப் ஏஷியன் ஷார்ட் ஸ்டோரீஸ் (A Treasuary of Asian Short Stories ), 'ட்வென்டியத் ஸெஞ்சுரி ஏஷியா' ( Twentieth Century Asia) முதலியவற்றில் இடம் பெற்றுள்ளன. உண்மையில், சமாதான வாதிகள், சமுதாய இயல் வல்லுநர்கள், மற்றும் இந்தியக் கிராம வாழ்க்கை பற்றி அறிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வமும் உற்சாகமும் கொண்டு நம் நாட்டுக்கு வருபவர்கள், இவர்களிடையே இந்த நாவலுக்கு விசேஷமான வரவேற்பு இருக்கிறது.

'பன்கர்வாடி'யின் உயிரோட்டத்துக்கு முக்கியமான காரணம் அதன் இயற்கையான கதைப் போக்குக் கொண்ட நடை. கிராம மக்களின் காதல் சித்திரங்களோ அல்லது கிராமிய இயல்பு பற்றிய மிகையான வர்ணனைகளோ இதில் கிடையா. பிராம்மணக் குடும் பத்தைச் சேர்ந்த இளைஞனை கதாநாயகன் பிழைப்புக்காகப் பள்ளி ஆசிரியனாக நியமனம் பெற்று முதல் தடவையாகப் 'பன்கர்வாடி' என்னும் ஆடு மேய்ப்பவர் கிராமத்துக்கு வந்து கொஞ்ச காலம்

தங்குகிறான். பள்ளிக்கூடம் என்பது பலநோக்குக் கூடமாகக் கவனிப் பாரில்லாமல் புழுதியும் பறவைகளின் எச்சமும் நிறைந்து அசுத்த மாகக் கிடந்தது. அரைகுறைச் செழிப்பு வாய்ந்த சுதேச சமஸ் தானத்தின் கல்வித்துறை, தேவையான பெஞ்சு-பலகைகளோ, மற்ற கல்விச் சாதனங்களோ கூட அந்த மேய்ப்பவருக்குக் கிடைக்க வகை செய்யவில்லை. அந்த மேய்ப்பவர்களும் தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்புவதற்குப் பதிலாக ஆடுகளை மேய்த்து வருவதற்கு அனுப்பிக் கொண்டிருந்தனர். எனவே அந்தக் கிராம மக்களிடையே கல்வியில் ஆர்வம் பிறக்கும்படி செய்து பள்ளிக்கு வரத்தகுந்த வயது டைய சில பிள்ளைகளை ஒன்று திரட்டிக் கல்வி போதிக்க ஆரம்பிப்பது தான் அந்தப் பள்ளி ஆசிரியனின் முதல் கடமையாக இருந்தது. கிராமத்தில்செல்வாக்குள்ள நாட்டாண்மைக்காரர் அவனுடைய நண் பராகி அவனுக்கு அவனுடைய பணியில் ஒவ்வொரு வகையிலும் உதவியளிக்கிறார். பள்ளி ஆசிரியன் அந்தக் கிராம மக்களுடன் ஒன் றிப்போய் அவர்களுடைய சுகதுக்கங்களில் பங்குகொள்ளத் தொடங் குகிறான். கிராம மக்களின் உதவியுடனும் ஒத்துழைப்புடனும், தனது சொந்த முயற்சியாலும் கிராமத்தில் ஒரு விளையாட்டுக்கூடம் நிறுவுகிறான். சமஸ்தானத் தலைவர் அதைத் திறந்து வைக்கிறார். இதனால் கிராம மக்கள் மனத்தில் மகிழ்ச்சி பொங்குகிறது. பள்ளி ஆசிரியனை கதாநாயகன் கிராமத்தில் நடைபெறும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும்—ஆடு வளர்ப்பு, பயிர் வேலை, பருவ காலத்தின் முறையான மாறுதல்கள், பிறப்பு இறப்பு, சண்டை சச்சரவுகள், ஒருவருக்கொருவர் மன வேறுபாடுகள், கடைசியில் நீடித்த பஞ்சத் தால் தோன்றிய அழிவு—எல்லாவற்றையும் உடனிருந்து நேரில் பார்க்கிறான். அவன் உள்ள நெகிழ்ச்சியுடன் நடு நிலைமையில் நின்று வாசகர்களின் மனஎழுச்சிகளையும், வெளியார்கள் கிராம வாழ்க்கையைப் புரிந்துகொள்வதற்கான சக்தியையும் தூண்டி விடுகிறான். திரு வேங்கடேஷ் மாட்கூல்கர் தம்முடைய ஆன்மா வின் உணர்வுகளை இயல்பாகவே கிராமத்து வாழ்க்கையில் இரண்டறக் கலந்து விட்டிக்கிறார். 'பன்கர்வாடி'யின் வெற்றிக்கு இதுதான் காரணம்.

உண்மையில் இந்த நாவல் குணச் சித்திரங்களின் தொகுப்புப் போன்று அமைந்திருக்கிறது. ஒவ்வொரு குணச் சித்திரத்துக்கும் தனிப்பட்ட முறையில் முக்கியத்துவம் உண்டு. எனினும் ஒரு பரந்த, வண்ணக் கலவை மிளிரும் ஓவியத்தின் உறுப்பாகவே அது இடம்

பெற்றிருக்கிறது. இதில் வழக்கமான மரபில் வார்க்கப்பட்ட கதா நாயகனே, போக்கிரி நாயகனே கூடக் கிடையாது. போக்கிரியின் பாத்திரப் படைப்பு. அதில் மறைந்திருக்கும் மனிதத் தன்மை யையும் பிரதிபலிப்பதாக உள்ளது. வேரோடிய குற்ற மனப்பான் மையை அடிப்படையாகக் கொண்டதாக அது இல்லை. திருடன் சாப்பாட்டுக்காகத் திருடுகிறான்; ஆனால் பிடிபட்டதும் தன்னுடைய குற்றத்தை ஒப்புக்கொண்டு விடுகிறான். கட்டற்ற, வரம்பு மீறிய காமக்கிளர்ச்சிக்கு இதில் இடம் கிடையாது. ஆனால் ஏற்கனவே மணமாகி மனைவியுடன் இருக்கும் ஷேகூவை மயக்கத் தயங்காத இளம் பெண் அஞ்ஜி, கடைசியில் ஒரு வாலிபனை ஆட்டுக்கார னுடன் ஓடிவிடும் நிகழ்ச்சி, ஜகன்யா ராமோஷி பக்கத்துக் கிராமத் தைச் சேர்ந்த ஓர் அழகிய விதவையைக் கடத்திக் கொண்டுபோக முயற்சிசெய்து அதில் தோல்வி அடையும் நிகழ்ச்சி ஆகியவை இதில் இயற்கையான இடத்தைப் பெற்றுச் சுவையாகச் சித்திரிக்கப் பட்டிருக்கின்றன.

'பன்கர்வாடி' என்னும் ஓவியத்தை எந்த மரபுச் சட்டத்திலும் பொருத்த முடியாது. இதன் கதாபாத்திரங்கள் பட்டணத்து வாழ்க் கையால் உருமாறியவர்கள் அல்ல. அவர்களுடைய பேச்சு, நட வடிக்கை, அவர்களுடைய முழுமையான குணச்சித்திரம் எல்லாமே கிராம வாழ்க்கையில் இழையோடி ஒன்று கலந்தவை. அவர்களு டைய இயற்கைக்கு மாறுபட்டதாக எதுவுமே அவர்களிடம் காண முடியாது. எனவே ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும், நல்லவனாக இருந்தாலும் கெட்டவனாக இருந்தாலும் எல்லாருமே முற்றிலும் உயிரோட்டமுள்ள பாத்திரங்களாகக் காட்சியளிக்கிறார் கள். எத்தனையோ துன்பங்களைத் தாங்க நேர்ந்தும் அவர்கள் கவலை யற்றுத் தங்கள் வாழ்க்கை நிகழ்ச்சிகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்களுடைய சீர்குலைவு ஏதோ கண்கூடான காரணகாரியத் தொடர்பின் விளைவாக இல்லாமல் எல்லாக் காலத்துக்கும் பொருந் தக் கூடியதாக உள்ளது.

கிராமிய மொழியில் உரையாடுவது அவர்களுடைய பிறவியிலி ருந்தே, அவர்கள் பிறந்த மண்ணின் மணத்தோடு இணைந்தது. நாவலாசிரியர் வேண்டுமென்று ஒரு சூழ்நிலையை உருவாக்குவதற் காக கிராமிய மொழியைக் கையாளவில்லை. எங்கே இன்றியமை யாத தேவையோ, எங்கே பாத்திரங்களை உயிரோட்டத்துடன் சித்தி ரிப்பதற்கு அவசியமோ, அங்கேதான் கிராமிய உரையாடல் கையா

ளப் பட்டிருக்கிறது. இம்மாதிரி உரையாடலுக்காக ஆசிரியர் அவச ரம்கொண்ட ஆர்வமெதுவும் காட்டவில்லே. கிராமிய மரபுச் சொற் களேச் செப்பனிட்ட வடிவிலும், சில இடங்களில் நன்கு புரியக்கூடிய சம்ஸ்கிருதச் சொற்களேயும் சொற்றெடர்களேயும் பயன்படுத்திக் கையாள்வதற்கு ஆசிரியர் தயங்கவில்லே. சாமானிய மக்கள் சமூகங் களிடையே நிலவும் எழுதாத சட்ட திட்டங்கள் இயற்கையின் ஏற் றத் தாழ்வுகளுடன் முற்றிலும் இணைந்து, மனித வாழ்வின் நன்மை தீமைகள் எல்லாவற்றுடனும், கிராம வாழ்க்கையின் பெருந் தன்மை, பொறுமை, இரக்கம் ஆகியவற்றைப் பிரதிபலிப்பனவாக விளங்குகின்றன. இயற்கையின் உள்ளார்ந்த கடுமையான சட்ட திட்டங்களும் அவற்றேடு இணைந்த மனித நியதியின் விசித்திரங்க ளும் 'பன்கர்வாடி' நாவலில் வரும் பல நாடக பூர்வமான திருப் பங்கள் மூலம் தெளிவாக்கப்பட்டிருக்கின்றன.

1935ம் ஆண்டிலிருந்து மராட்டிய நாவல் மாறுதலே இல்லாமல் ஒரே போக்கிலேயே போய்க்கொண்டிருந்தது. இந்தப் போக்கி லிருந்து மாறுபட்டதாகப் 'பன்கர்வாடி' உருவாகியிருந்ததால்தான் வாசகர்கள் இதை வரவேற்றூர்கள். 'வேத்கர்' என்ற நாவலாசிரி மராட்டியரின் 'ரனன்கன்' போன்ற வெகு சில நாவல்களேத்தவிர மற்றப் பெரும்பாலான நாவல்கள் நடுத்தர அல்லது உயர் நடுத் தரக் குடும்பங்களேச் சேர்ந்த பட்டணவாசிகளின் கனவுலக ஆசை அபிலாஷைகளேயே சித்திரிப்பனவாக அமைந்து வந்தன. இம் மாதிரி நாவல்களுக்கு ஆரம்பத்தில் நல்ல வரவேற்பு இருந்தது. ஆனுல் நாளடைவில் வாசகர்களுக்கு இவற்றில் அலுப்பு ஏற்பட்டு விட்டது. கதாநாயகனும் மற்றக் கதாபாத்திரங்களும் நாவலாசிரி யனின் கைப்பாவைகளாகத்தான் காணப்பட்டனர். மராட்டி நாவலின் ஊற்றே வறண்டுவிட்டதுபோல் தோன்றியது. ஒரு வரம் புக்குள் கட்டுண்டது போல் காட்சியளித்தது. புதுமை காணவேண்டு மென்ற ஆர்வத்துடன் புதிய பாதையைத் தேடிக் கொண்டிருந்த புதிய தலேமுறை எழுத்தாளர்கள் பழைய போக்குக்கு எதிராகத் தீவிரக் கிளர்ச்சி செய்தனர். இதுகாறும் புறக்கணிக்கப்பட்ட, கால நிலேக்குப் பொருத்தமான உயிர்த்துடிப்புள்ள விஷயங்களேத் தேர்ந் தெடுத்தனர். இந்த நோக்குடன்தான் அவர்கள் பல்வேறு புறப் பகுதிகளில் வாழும் பிற்பட்ட சமூகத்தைச் சித்திரிக்கத் தொடங் கிஞர்கள். நாளடைவில் இம்மாதிரி புறப்பகுதி வாழ்க்கையைச் சித்திரிப்பது ஒரு 'ஃபாஷ'ஞகவே ஆகிவிட்டது.

இந்தக் காலத்து மராட்டி நாவல்களில் பட்டண வாழ்க்கையில் பிற்பட்ட வர்க்கத்தினர், பல்வேறு கிராம இனத்தவர், மற்றும் வளர்ச்சியடையாத சமுதாயத்தினர் பற்றிய வர்ணனை இடம் பெற்றிருந்தது. பட்டணத்தில் வாழும் எழுத்தாளர் இந்த மக்களைப்பற்றிச் சித்திரிக்கும்போது மிகையான அனுதாபத்துடன் அதைச் செய்கிறார்கள். ஆனால் வெறும் அனுதாப மிகையால் மட்டும் உயர்ந்த இலக்கியங்களைப் படைத்துவிட முடியாது. விபாவரீ, ஸிருகர், தோகல், திதே போன்ற எழுத்தாளர்கள்இயற்கைக்கு மாறுபட்டு வரம்புமீறியதாகத் தோன்றும் கிராம வாழ்க்கையின் கற்பனைச் சித்திரங்களைப் புனைந்திருக்கிறார்கள். ஆனால் நாவல்களில் விவரிக்கப்படும் வாழ்க்கை உயிரோட்டமுள்ள பாத்திரங்களுடையதாக அமைய வேண்டும். எனவே நாவலாசிரியர் வேறு எந்தத் தீவிரப் பிடிவாதக் கொள்கையையும் விட்டுவிட்டு இயல்பான, இயற்கையான சூழ்நிலையைச் சித்திரிக்கும் படைப்புகளைத் தந்தால் வாசகர்கள் அந்தக் கிராம சமுதாயங்களுடன் இதயம் கலந்த ஒருமை உணர்வைப் பெற முடியும்.

'பன்கர்வாடி'யில் சித்திரிக்கப்படும் ஆடு மேய்ப்பவர்களின் வாழ்க்கை அசுத்தம் நிறைந்ததாயும், துன்பம் நிறைந்ததாயும், அச்சமளிப்பதாயும் உள்ளது. பட்டணக்கரையின் நாகரிகம், பண்பாடு இவற்றால் தீண்டப்படாத வாழ்க்கை அது. மேய்ப்பவர்களின் துன்பங்கள், அச்சமின்மை, ஏழைமை, அறியாமை, கல்வியில் ஈடுபாடின்மை, இயற்கையின் சோதனை, சீர்குலைவு, மனிதத்தன்மை, புல்லும் கோரையும் வேய்ந்த கூரைக் குடிசைகள் - இவற்றின் பெயர்தான் 'பன்கர்வாடி'; இவையனைத்தும்தான் இந்த நாவலில் விரிவாகச் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன.

வேங்கடேஷ் மாட்கூல்கர் எழுதிய முதல் நாவல் 'பன்கர்வாடி' என்றாலும். கிராம வாழ்க்கையை ஆதாரமாகக் கொண்ட உயிரோட்டமுள்ள நடைச்சித்திரங்களைத் தீட்டும் சிறந்த எழுத்தாளர் என்ற முறையில்தான் அவர் பிரசித்தி பெற்றிருக்கிறார். காந்திஜியின் மரணத்துக்குப் பிற்காலத்தியப் பிரச்னைகளுடன் தொடர்புடைய அவரது இரண்டாவது நாவலான 'வனதால்' அவ்வளவாக வெற்றி அடையவில்லை. பின்பு அவர் கட்டுரைகள், சிறுகதைகள் எழுதுவதில் ஈடுபட்டிருந்தார். கதை சொல்லும் கலையில் அவருக்குள்ள திறமையும் தேர்ச்சியும்தான் 'பன்கர்வாடி'யின் சிறப்புக்குக் காரணம் என்று சொல்லாம். மாட்கூல்கர் மட்டுமின்றி

அவருடன் சமகாலத்தவரான எஸ். என். பேந்த்ஸே, ஹர்னயீ, முருத், தடோலி முதலிய நாவலாசிரியர்கள் மேற்குப்புறப் பகுதி மக்களின் வாழ்க்கையைத் தங்கள் நாவல்களில் வடித்திருக்கிறார்கள். பேந்த்ஸேயின் பாத்திரங்கள் கிராமத்து அடித்தரமக்களாக இல்லாமல் முக்கியமாக மத்தியதரக் குடும்பங்களைச் சேர்ந்த பிராம்மணர்கள். அவருடைய 'ஹத்பார்' என்ற நாவல் 'பன்கர்வாடி'யைப் போலவே ஒரு பள்ளி ஆசிரியரின் வாழ்க்கையைச் சித்திரிக்கிறது. ஆனால் வெறும் கதாபாத்திரமாக இல்லாமல் நாவலின் கதாநாயகனாகவே சித்தரிக்கப்பட்டிருக்கிறது. இந்த நாவலில் மற்ற ஆண் - பெண் பாத்திரங்கள் சமுதாயத்தின் முன்னேற்றத்துக்காகப் பாடுபடுகிறார்கள். அவர்கள் கிராமத்திலிருந்து சிறுநகருக்கும் சிறுநகரிலிருந்து பட்டணத்துக்கும் செல்கிறார்கள்.

கடந்த பதினைந்து ஆண்டுகளில் கிராமப் புறப்பகுதிகளிலிருந்து விலகி, வேகமாக முன்னேறிக்கொண்டிருக்கும் பட்டண வாழ்க்கையை நோக்கிப் படைப்பாளிகளின் பார்வை திரும்பியிருக்கிறது. நகரத்தின் அடித்தளத்தில் குடிசைப்பகுதிகளில் வாழும் மக்களின் வாழ்க்கையை அநேக இளம் நாவலாசிரியர்கள் தங்கள் நாவல்களில் சித்திரித்திருக்கிறார்கள். இம்மாதிரி நாவல்களில் ஜயவந்த் தல்வியின் 'சக்ர', எம். எம். கார்ணிக் எழுதிய 'மஹிம்சீ காதி', பாஉ பாதேயின் 'வஸானக்' ஆகியவை முக்கியமானவை. நகரத்தின் சாரமற்ற, இதயமற்ற வாழ்க்கை முறை, அழியும் நிலையில் உள்ள மதிப்பீடுகள், ஒழுக்க நெறிகளின் வீழ்ச்சி ஆகியவற்றை இந்த நாவலாசிரியர்கள் சித்திரித்துள்ளனர். மேல்நாட்டு நாவல்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி இந்நாவல்கள் மனப்புழுக்கத்தையும் நிராசையையும் சித்திரிக்கின்றன. ஆனால் இந்த நாவலாசிரியர்கள் இந்திய நகரவாழ்க்கையையும் அதன் பிரச்னைகளையும் அதன் மத்தியிலிருந்தவாறே தங்கள் படைப்புகளில் கொணர்ந்திருக்கிறார்கள். இந்தவகை நாவல்களில் முக்கியமானவை பாலசந்திர நேம்தேயின் 'கோஸல்', பாஉ பாதேயின் 'பாரிஸ்டர் அனிருத்த கோபேசுவர்கர்.'

தற்கால மராட்டி நாவல்களில் வேறு ரகங்களும் உள்ளன. கவிதை, கதை இலக்கியத்தைப்போலவே மராட்டி நாவல் இலக்கியமும் இரண்டாவது உலக யுத்தத்துக்குப் பிறகு, தேய்ந்த குறுகிய பாதையிலிருந்து விலகிச் சென்றிருக்கிறது. அர்த்தமற்ற காதற் கற்பனை புரியும் இயல்புக்கு முடிவு ஏற்பட்டு, புதிய திசைகளில் அது

திரும்ப ஆரம்பித்திருக்கிறது. எல்லாவற்றையும் இலக்கிய சிருஷ்டி களாக ஏற்றுக் கொள்வதென்பது கடினம்தான்; அவற்றில் அனுபவ மும் ஆழ்ந்த நோக்கும் குறைவுதான்; இருந்தாலும் மராட்டி இலக்கிய கர்த்தாக்கள் விழிப்புடன் இருக்கிறார்கள். மொத்தமாகப் பார்க்கும்போது படைப்பு, திறனாய்வு ஆகியவற்றில் முன்னேற்றம் ஏற்பட்டிருப்பது போலவே நாவல் இலக்கியமும் கணிசமான முன்னேற்றம் அடைந்திருக்கிறது. மராட்டி நாவல் தனது ஒன்றேகால் நூற்றாண்டு வளர்ச்சியில் நன்கு மலர்ந்து வளம்பெற்று உயிர்த்துடிப்பு உள்ள இலக்கியமாகத் திகழ்கிறது. இந்த வளர்ச்சிப் பாதையில், கிராம வாழ்க்கையைச் சித்திரிக்கும் நாவல் என்ற வகையில், 'பன்கர்வாடி' சிறப்பு வாய்ந்த படைப்பு என்பதில் சந்தேகமில்லை.

# 1

உணவுப் பையைத் தோளில் மாட்டிக்கொண்டு நான் பன்கர் வாடியை நோக்கிப் புறப்பட்டிருந்தேன்.

இதற்குள் நாற்புறமும் நன்ருக இருள் சூழ்ந்து விட்டிருந்தது. தாரகைகள் கண் சிமிட்டிக்கொண் டிருந்தன. எதிரே வளைந்து வளைந்து செல்லும் ஒற்றையடிப் பாதை மங்கலாகத்தான் பார்வைக்குப் புலனாகிக் கொண்டிருந்தது. இராப்பொழுது எவ்வளவு கழிந்துவிட்டது ; இன்னும் எவ்வளவு நேரத்திற்குப் பின் வெளிச்சம் தோன்றும் என்பதை நிச்சயமாக ஊகிக்க முடியாத நிலை. நான் அவசரப்பட்டுச் சீக்கிரமாகவே புறப்பட்டுவிட்டேனே என்ற சந்தேகம் அடிக்கடி என் மனத்தில் எழுந்து கொண்டிருந்தது. என்னுடைய காலடிச் சத்தமே என் காதுகளுக்கு உரக்க ஒலிப்பது போல் தோன்றியது. இடைவிடாமல் சிள்வண்டுகளின் ரீங்காரம் வேறு. சில்லென்ற ஊதற்காற்று என் செவிகளில் மோதி இரைச்சலிட்டுக் கொண்டிருந்தது. நெடுநேரம் நடந்துகொண்டே இருந்ததனால் உடலின் உறுப்புக்கள் ஒருவிதத் தாளக்கட்டுடன் இயங்கிக் கொண்டிருந்தன.

இதற்கு முன்பு என்றுமே நான் பன்கர் வாடிக்குச் சென்றதில்லை. எனவே, வழி தவறிவிடுமோ என்ற பயம் ஒரு பக்கம் உறுத்திக் கொண்டிருந்தது. அந்தக் கிராமம் எப்படி இருக்கும், என்ன நிலையில் இருக்கும், அங்குள்ள மக்கள் என்னிடம் எப்படி நடந்து கொள்வார்கள், அங்கே போய்ச் சேர்ந்து நான் எங்கே தங்கப் போகிறேன் இவ்வாறு பல கேள்விகளை என்னை நானே கேட்டுக் கொண்டிருந்தேன். இரண்டு நாட்கள் அங்கே தங்கி அங்குள்ள நிலவரத்தைப் புரிந்துகொண்டு திரும்ப வேண்டியிருந்தது. நிரந்தரமாகத் தங்குவதென்ருல் கூடவே வேண்டிய சாமான்களை எடுத்துச் செல்ல நேர்ந்திருக்கும். ஆனல் இன்று இரண்டொரு மாற்று உடைகளும் போர்வையும் மட்டுந்தான் எடுத்துச் சென்று கொண்டிருந்தேன்.

அதே மேட்டுநிலத்தில் குளிர்ந்த காற்று உடம்பில் ஊசி குத்துவதுபோல் வீசத் தொடங்கியது. நட்சத்திரங்களின் மினுமினுப்பு மங்கிவிட்டது. நட்சத்திரங்களின் ஒளியும் இல்லாமல், பொழுதும் சரியாக் விடியாமல், இரண்டுங்கெட்டான் நிலைமையாயிருந்தது.

பழக்கப்பட்ட மரம் செடிகளின் மணம் மனத்துக்கு இதமளித்தது. பாதையில் படிந்திருந்த புழுதி, பாதங்களுக்குத் தண்ணென்று இதமாக இருந்தது.

திடீரென்று இருள் மறைந்தது. பார்வை தெளிவாகியது. மரம் செடிகள், கற்கள் முதலியவற்றின் வடிவம் புரியத் தொடங்கியது. உடுக் கணங்கள் மறைந்துவிட்டன. சிள்வண்டுகளின் ரீங்காரம் நின்றுவிட்டது. துயில் நீங்கிய காகங்கள் 'கா கா' என்று உரத்துக் கரையத் துவங்கின.

மேட்டின் மறைவிலிருந்து பொன்மயமான கதிரவன் தலை தூக்கினன். பசுமையான காட்சிப் படலம் பொன்முலாம் பூசியது போல் பளபளத்தது. இலந்தைப் புதர்களில் அமர்ந்திருந்த கவுதாரிகள் கண்விழித்தன. வால் இறகுகளைச் சிலிர்ப்பிவிட்டுக் கொண்டு கத்த ஆரம்பித்தன. இறக்கைகளைக் குவித்துக் கொண்டு புதர்களில் உட்கார்ந்திருந்த காடைப் பறவைகள் எழுந்து குரல் கொடுத்தன. காகங்கள் இங்குமங்கும் பறக்கத் துவங்கின.

அந்த மேட்டுநிலத்தில் படர்ந்து காய்ந்து போயிருந்த புல்வெளியில் கதிரவனது முதல் கிரணங்களின் சூடு பரவியதும், அதனடியே குடிகொண்டிருந்த பூச்சிகள் உலகில் சுறுசுறுப்புத் தோன்றியது. எறும்புகள் சாரிசாரியாகச் செல்ல ஆரம்பித்தன. வெட்டுக்கிளிகள் துள்ளிக் குதித்தன. ஓணன் சரசரவென்று ஓடியது. பூமியில் குழி பறித்துக்கொண்டு வாழும் பிள்ளைப்பூச்சி நழுவிவிழும் புழுக்களைத் தின்பதற்காகத் தன்மேல் புழுதியைப் போர்த்துக்கொண்டு தயாராகக் காத்திருந்தது. புதரடியில் அப்பிக் கிடந்த பளபளப்பான பச்சை நிறமுள்ள வண்டுகள் புதரின் துவர்ப்பான இலைகளைச் சாப்பிட ஆரம்பித்தன. மேட்டுநிலத்திலிருந்த வளைகளுக்குள்ளிருந்து உடும்புகள் தலைகளை வெளியே நீட்டின. கழுத்துக்குக் கீழேயுள்ள பகுதியை ஆட்டியவாறு அவை தம் நாவுக்கு எட்டக்கூடிய பூச்சிகளை எதிர்பார்த்துக் காத்திருந்தன.

காடைகள் மரங்களைவிட்டுப் பூமியில் இறங்கித் தமது அழகிய கழுத்தை அசைத்துக் கொண்டு புழுதியில் விழுந்திருந்த புல்மணிகளைப் பொறுக்கிச் சாப்பிட ஆரம்பித்தன. சமதரையான புழுதி மண்ணில் சித்திர வேலைப்பாடு செய்ததுபோல் அவற்றின் கால்களின் முத்திரைகள் பதிந்து கொண்டிருந்தன.

முதுகில் மாட்டியிருந்த பையைக் கைக்கு மாற்றி எடுத்துக் கொண்டு நான் விரைவாக நடக்க ஆரம்பித்தேன். என் வெறும்

கால்கள் பட்டுப் புழுதி பறக்க ஆரம்பித்தது. என்னுடைய பைஜாமாவின் 'படக் படக்' என்ற சத்தத்தைக் கேட்டு மிரண்ட காடைகள் உயரப் பறக்க ஆரம்பித்தன. நான் நீண்ட அடிவைத்து நடந்து கொண்டிருந்தேன். நடந்து நடந்து என் வயிறு உள்ளுக்கு ஒட்டிக்கொண்டது. பையிலிருந்த பராட்டா, உள்ளிப்பூண்டுச் சட்னி, பொரித்த பூசணி வடகங்கள் ஆகியவற்றின் வாசனை என்னைக் கவர்ந்திழுத்தது. ஆனால் நான் மன உறுதியுடன் சளைக்காமல் நடந்து கொண்டிருந்தேன். கால்விரல்களின் இடுக்கி லிருந்தெல்லாம் புழுதி மேலெழுந்து வந்து கொண்டிருந்தது. பாதங்களில் புழுதிப் பாளங்கள் படிந்து கொண்டிருந்தன. பைஜாமா அழுக்காகிக் கொண்டிருந்தது. பாதையோ முடிவு இல்லாமல் நீண்டுகொண்டே போயிற்று.

சுற்றிலும் மஞ்சளும் வெண்மையுமான பரம்பு வெளிதான் பரவிக் கிடந்தது. எங்கே பார்த்தாலும் வெட்ட வெளியான மேட்டு நிலம். ஏற்கனவே தகதகவென்றிருந்த அந்தப் பரம்பு வெயிலின் காரணமாக இன்னும் தகதகவென்று தோன்றியது. சில தணிவான பகுதிகளில் குட்டை மரங்களும் புதர்களும் செறிந்திருந்த பசுமை யான திட்டுகள் தென்பட்டன. மற்றப்படி நாற்புறமும் கல்லும் கரளையும் நிறைந்த பரம்புதான். பல வகையான குத்துச்செடிகள் புதர்புதராக அங்கங்கே பரவிக் கிடந்தன. அவற்றினூடே புழுதி யும் கற்களும் நிறைந்து மேடு பள்ளமான வண்டிப்பாதை சில இடங்களில் அகன்றும், சில இடங்களில் குறுகலாகவும் அமைந் திருந்தது.

மெல்ல மெல்லச் சூரியன் உயரே ஏறினான். காலைப் பொழுதில் கண்ணுக்கு இனியதாகத் தோன்றிய பரம்பு நிலம் இப்பொழுது கண் கூசும்படியாகக் காட்சி யளித்தது. பறவைகளின் கலகலப்புக் குறைந்துவிட்டது. ஒன்றிரண்டு புழுதி நிறமான பரம்புக்குருவிகள் உயரப் பறந்து பின்பு சட்டென்று அம்புபோல் வேகமாகக் கீழே பாய்ந்தன. இறங்கும்போது அவை எழுப்பிய கீச்சொலி தனிமை யுணர்வை மிகைப்படுத்துவதாயிருந்தது. ஒரு பருந்து கீழே பார்த்தவாறு தணிவாகத் தரையோடு ஒட்டி மிதப்பது போல் பறந்து செல்லவும் மற்றப் பறவைகள் '*கீச் கீச்*' என்று கூச்ச லிட்டன.

இப்போது அணிமையில் கருமையாகவும் சிவப்பாகவும் இருந்த சில நிலப்பகுதிகள் உழுது பண்படுத்தப்பட்டவையாகத்

தோன்றின. உழப்படாத தரிசுநிலம் வெயிலின் கடுமை தாங்காமல் பொரிந்து பொலபொலத்திருந்தது. சிற்சில இடங்களில் முழங்கால்வரை பதியும்படியான பள்ளங்கள் எதிர்ப்பட்டன. இம் மாதிரி நிலப்பகுதிகள் தென்பட்டு விட்டதால் கிராமம் சமீபத்தில் வந்து விட்டதென்ற நம்பிக்கையுடன் நான் அடிக்கொருதரம் தொடுவானத்தின் திசையில் பார்வையை ஓடவிட்டுக் கொண்டிருந்தேன். ஆனால் வீடுகளோ மரம் செடிகளோ எங்கும் தென்படவில்லை.

வெயில் மிகவும் சுள்ளென்று அடித்தது. காலையில் குளுமையான சுண்ணும்புக் கலவை போலிருந்த புழுதிமண் இப்போது கொதிக்கத் தொடங்கியது. என் தலைக்கு மேலே நாற்புறமும் ஈக்களின் கூட்டமொன்று 'ஙொய்' என்று இரைச்சலிட ஆரம்பித்தது. அந்த இடையீடில்லாத இரைச்சல் என்னைச் சலிப்புறச் செய்தது. தலையிலிருந்த தொப்பியை எடுத்து நான் என்னைத் துரத்திவந்த அந்த ஈப் படையை விரட்ட முயற்சி செய்தும் பலனில்லை. நூறு இருநூறு ஈக்கள் என் தலைக்கு மேலே கூடி இரைச்சலிட்டவாறு என் கூடவே பறந்து வந்து கொண்டிருந்தன. நிறைய மனிதர்கள் வாழும் இடத்துக்குத்தான் இந்த மனிதன் சென்று கொண்டிருக்கிருன். இவனுக்குத் திசை நன்ருகத் தெரியும். இவன் கூடவே சென்ருல் நாமும் குறிப்பிட்ட இடத்துக்குப் போய்ச் சேரலாம். சேறும் சாக்கடை நீரும் நிறைந்த அந்த இடத்தை நாமும் அடைந்து விடலாம் என்ற நம்பிக்கையுடன் அந்த ஈக்கள் என் தலைக்குமேலே நாற்புறமும் ரீங்காரம் செய்தவாறு என் கூடவே பறந்து வந்தன.

## 2

நாற்புறமும் வெட்ட வெளியான பரம்பு நிலம், சிவந்த கம்பங் கொல்லைகள். இவற்றுக்கு நடுவே வகை தொகையில்லாத மூட்டைகள் போல் முப்பது முப்பத்தைந்து வீடுகள்—இதுதான் பன்கர்வாடி என்னும் கிராமம். பெரும்பான்மையான வீடுகள் மண் சுவர்களைக் கொண்டவை. புற்களால் வேயப்பட்ட கூரைகள் மண் குழைத்துப் பூசப்பட்ட கூரையைத் தாங்கிய வீடுகளும் சில

இருந்தன. ஒவ்வொரு வீட்டுக்கு முன்பும் திறந்த முற்றம் இருந்தது. கழிவுநீர் பாய்ந்ததால் வேப்ப மரமும் பூவரச மரமும் தழைத்து வளர்ந்திருந்தன. வீட்டுக்குக் கொல்லைப்புறத்தில் ஆடுகளை அடைத்துப் போடுவதற்காகக் கருவேலமுள் படல்களைக் கொண்ட பட்டி அமைந்திருந்தது. உடைந்து போன வண்டிச் சக்கரம் ஓரிடத்தில் சுவரோடு சார்த்தி வைக்கப்பட்டிருந்தது. எல்லாம் எப்போதும் போலவே இருந்தன. கிராமத்தில் தெரு என்று எதுவும் இல்லை. வீடுகளைக் கட்டிய பிறகு மிஞ்சியிருந்த இடம் நடமாடு வதற்குப் பயன்பட்டு வந்தது, அவ்வளவுதான்! பல வீடுகளின் கதவுகள் பூட்டப்பட்டிருந்தன. இரண்டு மூன்று சிறுவர்கள் ஒரு வீட்டுக்கு முன்னால் விளையாடிக் கொண்டிருந்தார்கள். வீடுகளின் நிழல்கள் புழுதி படிந்த பாதையில் தெரிந்தன. நிழலில் எங்காவது ஒரு நாய் அல்லது வெள்ளையும் கறுப்புமான கோழிகள் கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்தன.

வலது பக்கமும் இடது பக்கமும் வீடுகள் இருந்தன. அவற்றி லிருந்து பெண்கள் எட்டிப் பார்த்தார்கள். குழந்தைகள் உள்ளே ஓடினார்கள். கொஞ்ச தூரம் நடந்த பிறகு ஒரு பெரிய வேப்ப மரத்தை ஒட்டினாற் போல் மைதானம் இருந்தது. ஒரு பெரிய மேடை வேப்ப மரத்தைச் சுற்றி அமைக்கப்பட்டிருந்தது. குளிர்ந்த நிழலைப் பார்த்ததும், வெப்பத்தில் வதங்கிய சேவலைப் போல் நான் அதில் போய் உட்கார்ந்து கொண்டேன். தொப்பியைக் கழற்றிவிட்டு வியர்வையைத் துடைத்துக் கொண்டேன். பாதங்களை ஒன்றோ டொன்று அடித்துப் புழுதியைத் தட்டிவிட்டுக் கொண்டேன். குளிர்ச்சியான நிழலில் வியர்வை அடங்கி இதமான உணர்வு ஏற் பட்டது.

நல்ல பசி, ஆனால் தண்ணீருக்கு எங்கே போவதென்று புரிய வில்லை. கேட்டுத் தெரிந்து கொள்ளும்படியாக அந்தச் சுற்று வட்டாரத்தில் ஆள் யாரும் தென்படவில்லை. தண்ணீர் இல்லாமலே சாப்பாட்டை முடித்துக் கொள்ளலாமா என்று கூட நினைத்தேன். ஆனால் பசி எவ்வளவு இருந்ததோ அவ்வளவு தாகமும் இருந்தது. நாவு உலர்ந்து போயிருந்தது. வாயெல்லாம் உப்புக் கரித்தது. அந்தக் குளிர்ந்த நிழலைவிட்டு எழுந்திருக்கவும் மனம் வரவில்லை. குத்துக்காலிட்டவாறு இரண்டு முழங்கால்களையும் கைகளால் வளைத்துப் பிடித்துக் கொண்டு அப்படியே உட்கார்ந்திருந்தேன். அக்கம் பக்கத்தில் எவ்வித ஒலியும் இல்லை. என் தலைக்கு மேலே

இருந்த வேப்பங் கிளையில் ஒரு ஜோடி காகங்கள் உட்கார்ந்திருந் தன. ஆனால் அவைகூடக் கத்தாமலிருந்தன.

சற்றுப் பொறுத்து, நான் வந்த வழியாகவே ஒரு மனிதன் வரு வதைக் கண்டதும் எனக்கு நிம்மதி ஏற்பட்டது. அந்த மனிதன் கூப்பிடு தூரத்தில் வந்ததுமே அவனைக் கூப்பிடுவோமா, வந்திருக் கும் நோக்கத்தைக் கூறுவோமா, தண்ணீர் கொண்டுவரச் சொல்லிச் சாப்பாட்டைச் சாப்பிடுவோமா — இவ்வாறெல்லாம் நான் எண்ண மிட்டுக் கொண்டிருந்தபோதே அந்த் இளைஞன் கிராமத்துக்குள் பிரவேசித்து என் எதிரேயும் வந்து நின்று விட்டான்.

தலையில் சிவப்பு நிறமுள்ள தலைப்பாகையும் உடம்பில் சட்டை யும் அணிந்திருந்தான் அவன். வேஷ்டியின் நுனியுடன் சேர்த்து ஒரு நீளமான ஈட்டியையும் அவன் கரத்தில் பிடித்திருந்தான். அவன் முகம் பரந்ததாகவும் நீள வாக்காகவும் இருந்தது. கன்னத்து எலும்புகள் புடைத்திருந்தன. மூக்கு நேராயிருந்தது. மீசையின் உரோமங்களில் கறுப்பும் வெளுப்பும் சாம்பல் நிறமும் கலந்திருந்தன. சற்றும் தயங்காமல் அவன் தன்னுடைய செவ்வரி படர்ந்த கண்களால் என்னைக் கூர்ந்து பார்த்துவிட்டு, மீசையை விரல்களால் வருடியவாறு எச்சிலைப் புழுதியில் துப்பினான். அது என் முகத்தில் தெறித்தது போன்று உணர்ந்ததும் நான் சற்று அருவருப்புடன் நகர்ந்து கால்களைக் கீழே தொங்கவிட்டுக் கொண்டு இங்குமங்கும் பார்த்தேன்.

''ஏண்டா, முட்டைக்காரனா நீ?'' என்று அவன் அதட்டும் குரலில் கேட்டான்.

என்னைச் சவுக்காலடிப்பது போலிருந்தது அந்தக் கேள்வி. அவனுக்கு என்ன பதில் சொல்வதென்று புரியாமல் கணநேரம் திகைத்தேன். என்னுடைய புழுதி படிந்த பைஜாமாதான் ஒரே யடியாக என்னைக் கீழே இறக்கி கிராமங்களில் முட்டை வாங்கு வதற்காகக் காசு மூட்டையுடன் திரியும் முஸ்லிமாகக் காட்சியளிக்கச் செய்திருந்தது. நான் திகைத்துத் தடுமாறினேன். அசட்டுச் சிரிப்புச் சிரித்துக்கொண்டே, தொங்கப் போட்டிருந்த கால்களை மடக்கி வைத்துக்கொண்டு, ''இல்லை. நான் ஆசிரியன்!'' என்று கூறினேன்.

இந்த விளக்கத்தைக் கேட்ட பிறகும் அந்த ஆசாமிக்கு, தான் தவறாகப் பேசிவிட்டோம் என்ற உணர்வு தோன்றியதாகத் தெரிய

வில்லே. இடது காலை ஊன்றி நின்ற நிலையை வலது காலுக்கு மாற்றியவாறு அவன் கேட்டான்: ''ஆசிரியனா?''

அவனுக்கு நம்பிக்கை ஏற்படவே இல்லே. அழுக்குப் பைஜாமாவும் வீட்டில் சலவை செய்த கோடு போட்ட சட்டையும் அணிந்திருக்கும் இந்த முழங்காலளவுச் சிறுவன் எப்படி ஆசிரியனாகயிருக்க முடியும்? கோவணத்தைக் கட்டிக்கொண்டு பள்ளிக்குப் போக வேண்டிய பையன், எச்சிலைத் துப்பி மெழுகி ஸ்லேட்டைத் துடைத்துக்கொள்ள வேண்டிய சிறுவன் – இவனை யார் ஆசிரியன் என்று சொல்வார்கள்? சொன்னாலுந்தான் யாரேனும் ஒப்புக் கொள்வார்களா? சீ! அர்த்தமற்ற பிதற்றல்!

எனக்கு என்னுடைய சிறுவயதைப் பற்றியும், வேஷ்டியும் கோட்டும் அணியாததைப் பற்றியும் தாழ்வு உணர்ச்சி தோன்றியது. தொண்டையைச் செருமிவிட்டுக் கொண்டு கூறினேன்: ''ஆமாம், நான் புதிதாக வேலையில் சேர்ந்திருக்கிறேன். இன்றிலிருந்து நான் இங்கே ஆசிரியனாக நியமனம் பெற்று வந்திருக்கிறேன்.''

கையில் மறைவாக வைத்திருந்த ஈட்டியை அவன் கொடியை ஊன்றுவது போல் எதிரே ஊன்றிவிட்டு அலட்சியமாகக் கூறினான்: ''ஹ்ம் ! இங்கே ஆசிரியனுக்கு என்ன வேலே? பள்ளிக்கூடம் எங்கே நடக்கிறது? கிராமத்தில் பிள்ளைகள் ஏது? சர்க்காருக்கு இதெல்லாம் தெரியாதா? வெறும் வெட்டி விவகாரம்!''—இவ்வாறு கூறிவிட்டுத் தலைப்பாகையைச் சரியாகப் பதிய வைத்தவாறு அவன் அங்கிருந்து சென்றுவிட்டான். போகும் போதே இன்னொரு முறை புழுதியில் துப்பிவிட்டுப் போனான். அந்தக் குறுகலான தெரு வழியே அவன் சென்று மறையும் வரை அந்தத் திசையில் பார்ப்பதற்கே எனக்குத் துணிவே ஏற்படவில்லே. எனக்கு மிகவும் வெட்கமாயிருந்தது. கிழிந்த நிக்கர் போட்டுக் கொண்டு பள்ளிக்கூடம் சென்ற நாட்களில் எப்படி வெட்கந்தால் உயிர் போவது போல் இருக்குமோ அப்படி இருந்தது. என்னுடைய துணிச்சல், நம்பிக்கை, உற்சாகம் எல்லாமே இந்த ஒரு நிகழ்ச்சியால் கரைந்து போய் விட்டது போல் தோன்றியது. வந்த காலோடு திரும்பி விட்டாலென்ன! இந்த வேலையை விட்டு விடுவோம். இதை என்னால் சமாளிக்க முடியாது. இங்காவது பள்ளிக்கூடம் நடத்துவதாவது! பிள்ளைகள் படிக்க வர மாட்டார்கள். ஆசிரியர், பள்ளிக்கூடம், படிப்பு எதற்குமே இங்கே ஒரு பயனும் கிடையாது – இவ்வாறெல்லாம் எண்ணினேன். இன்னும்

வருத்தம் தோய்ந்த முகத்துடன் அந்த வேப்ப மரத்து மேடையில் உட்கார்ந்திருந்தேன். முன்பு என்னை வாட்டிய பசி தாகத்தைக் கூட நான் மறந்துவிட்டேன். வெயிலில் வறுபடும் இந்த கிராமத்துக்கு இந்த வேளையில் ஏன் வந்தோம் என்ற கழிவிரக்கம் தோன்றியது. நான் இங்கே தன்னந்தனியன் என்ற உணர்வு ஏற்பட்டது.

அந்தச் சமயத்தில், மீசை நரைத்துப் போன ஒரு கிழட்டு ஆள் தடியை ஊன்றி நடந்தவாறு வயற்காட்டுப் பக்கத்திலிருந்து வருவதைக் கண்டேன். அந்த ஆசாமியினுடைய புருவங்கள் கூட நரைத்துப் போயிருந்தன. தோளில் போட்டிருந்த முரட்டுக் கம்பளியை அவன் தனது வெள்ளிக் காப்புப் போட்ட கரங்களால் உறுதியாகப் பிடித்துக் கொண்டிருந்தான். ஜோடு அணிந்திருந்த கால்களைத் தரையில் தேய்த்து இழுத்தவாறு நடந்து வந்த அவன் என் எதிரே நின்றான். அவன் என்னைக் கூர்ந்து நோக்கினான். வழி தப்பி அலையும் செம்மறி ஆட்டை அடையாளம் கண்டு கொள்ள முயல்வது போலிருந்தது அந்தப் பார்வை.

''ஏண்டா குழந்தே, இங்கே ஏன் உட்கார்ந்திருக்கிறப?'' என்று கேட்டான் அவன்.

''நான் ஆசிரியன். இன்றிலிருந்து இங்கே எனக்கு நியமனம் ஆகியிருக்கிறது'' என்றேன்.

''அடே! ஆசிரியன் என்றால் இங்கே ஏன் உட்கார்ந்திருக்கிறாய்? பள்ளிக்கூடத்தில் போய் உட்காரேன்!''

கிழவனின் இந்தப் பேச்சு எனக்குச் சிறிது தெம்பை ஊட்டியது. முதலில் பார்த்த ஈட்டி இளைஞன் மாதிரி இவன் இல்லை என்ற தைரியம் தோன்றியது.

''பள்ளிக்கூடக் கட்டிடம் எங்கே இருக்கிறது என்பது கூட எனக்குத் தெரியாதே!''

எதிரே தெரிந்த நீண்ட விசாலமான சாவடியைத் தன் கைத் தடியால் சுட்டிக் காட்டினான் கிழவன். ''அதோ இருக்கிறதே! சாவடியின் இரண்டு பகுதிகளைப் பாடசாலைக்காக ஒதுக்கியிருக்கிறோம்!''

''அதுவா?''

''ஆமாம். அங்கே போய் உட்கார்.''

''தனியாக உட்கார்ந்து என்ன செய்வது? பிள்ளைகள்...?''

''பிள்ளைகள் ஆடு மேய்க்கப் போயிருக்கிறார்கள். திரும்பி வந்து விடுவார்கள். காட்டிலேயே தங்கி விடுவார்களா என்ன?''

''ஆனால் பள்ளிக்கூடம் நடத்துவதற்குப் போதுமான பிள்ளைகள் இருப்பார்களா?

'' இல்லாமலென்ன? மந்தை மந்தையாக இருக்கிறார்கள். மேலும் உண்டாவார்கள். வருஷா வருஷம் பத்து இருபது கலியாணங்கள் நடக்கத்தானே செய்கின்றன! புதிய குழந்தைகள் பிறப்பார்கள். நீ படிப்புக் கற்றுக்கொடுக்கும் பணியைத் தவறாமல் செய், போதும்!''

இதைக் கேட்டு எனக்குச் சிரிப்பு வந்தது. மேடை மீதிருந்து கீழே குதித்து என் பையைத் தூக்கிக்கொண்டேன். ''தண்ணீர் எங்கே கிடைக்கும், சொல்லுங்கள். சாப்பாட்டை முடித்துக் கொள்கிறேன். கையோடு பராட்டாக்கள் கொண்டு வந்திருக்கிறேன்.''

'' இந்தக் கிராமத்தில் தண்ணீருக்குத்தான் தட்டுப்பாடு. கோடைக்காலத்தில் அசல் பாலைவனம் தான்! அதோ பார், அங்கே ஒரு ஓடை இருக்கிறது.''

நான் தெருவுக்கு அப்பால் நோக்கினேன். கிராமத்துக்கு வெளியில் கல்லும் சுண்ணாம்பும் கொண்டு கட்டப்பட்ட கைப்பிடிச் சுவர் கொண்ட ஓர் ஓடை தென்பட்டது.

'' ஆட்டிடையர்களான எங்கள் வீட்டுத் தண்ணீர் உனக்கு ஏற்கும் என்றால் தருகிறேன்.''

'' ஏற்காமலென்ன?'' என்றேன் நான். ''ஆனால் நான் பாத்திரம் எதுவும் எடுத்து வரவில்லை. ஒரு செம்பு இருந்தால்...''

கிழவன் நின்றவாறே குரல் கொடுத்தான்.

''அடீ அஞ்சே! ஒரு செம்பில் தண்ணீர் எடுத்து வா, நம் மாஸ்டருக்காக!''

தூரத்தில், அந்தத் தெருவின் ஒரு வீட்டிலிருந்து ஒரு பெண் வெளியே எட்டிப் பார்த்தாள். கிழவன் மறுபடியும் முன்பு கூறியதையே உரக்கக் கத்திக் கூறினான். நாங்கள் இருவரும் பள்ளிக்கூடத்தின் அருகே சென்றோம். தாலுகாவின் தலைமை ஆசிரியர் என்னிடம் சாவியைக் கொடுத்திருந்தார். அவர் என்னிடம் கூறியிருந்தார்: ''சார்ஜ் கொடுப்பது போன்ற எந்த வேலையும் கிடையாது. பிள்ளைகளே இல்லாதபோது அங்கே பள்ளிக்கூடம் எப்படி இருக்கும்? இந்தச் சாவியைப் பெற்றுக் கொண்டு போ. சார்ஜ் ஒப்படைத்து விட்டதாக நான் ரிப்போர்ட் எழுதி விடுகிறேன்.''

பூட்டைத் திறந்து நான் அந்தப் பள்ளிக்கூடத்தைத் திறந்து விட்டேன். குப்பென்று மடிசல் வாடை வீசியது. தரை மேடுபள்ள

மாகவும் பல இடங்களில் பெயர்ந்துபோயும் காணப்பட்டதுடன் புழுதியும் பறவைகளின் எச்சமும் நிறைந்திருந்தன.

தோளிலிருந்து கம்பளியை எடுத்து அதனாலேயே அந்தக் குப்பையைத் தட்டினான் அந்தக் கிழவன். அந்தத் தூசியினால் எனக்கு இருமலும் தும்மலுமாக வந்து விட்டது.

சிறிதளவு இடம் சற்றுச் சுத்தமானதும் கிழவன் அங்கே கம்பளியைப் போட்டான். விரித்துப் போடவில்லை. அப்படியே போட்டு விட்டுச் சொன்னான்: ''உட்கார்.''

பின்பு கையைக் கீழே ஊன்றிக்கொண்டு அவனும் உட்கார்ந்தான். கைத்தடியை ஒரு பக்கமாக வைத்துவிட்டு அவன் கூறினான்: ''சரி, பராட்டாக்களைச் சாப்பிடு. அந்தக் குட்டி இப்போதே தண்ணீர் கொண்டு வந்து விடுவாள்.''

நான் பையைப் பிரித்தேன். பழைய துண்டு ஒன்றில் கட்டி வைத்திருந்த பராட்டாக்களைப் பிரித்தேன்.

''நீங்களும் சாப்பிடுகிறீர்களா, தாத்தா?''

சுருக்கம் விழுந்த முகத்தில் புன்முறுவல் தோன்ற அந்தக் கிழவன் கூறினான்: ''நாங்கள் இந்நேரம் வரைக்கும் சாப்பிடாமல் இருப்போமா? இரண்டு பொழுது ஆகிவிட்டது. இப்போது மூன்றாவது வேளை நெருங்கிக் கொண்டிருக்கிறது. நீ சாப்பிடு.''

எனக்குக் கொஞ்சம் தயக்கமாயிருந்தது. ஆனால் பசியின் எதிரே தயக்கம் பறந்து போயிற்று. கன்னங்கறேலென்ற ஒரு பெண் வந்து வெளியிலிருந்தவாறே வாயிற்படியில் செம்புத் தண்ணீரை வைத்த பிறகு என்னை ஒரு பார்வை பார்த்துவிட்டு ஓடிவிட்டாள்.

முழங்காலிட்டு அமர்ந்திருந்த கிழவன் இடுப்பிலிருந்து புகையிலைப் பையை உருவி அதனுள் விரல்களை விட்டுத் துழாவினான்.

அளவு கடந்த பசி. நான் அவசர அவசரமாகச் சாப்பிட ஆரம்பித்தேன். சாப்பிட்டுக் கொண்டே அந்தக் கிழவனை நோட்டம் விட்டேன். தலையிலிருந்த தலைப்பாகை, இடுப்பில் அணிந்திருந்த அரைவேட்டி இரண்டைத் தவிர அவன் உடம்பில் வேறு எதுவும் இல்லை. நாள் முழுவதும் எந்த மண்ணில் அவன் செம்மறியாடுகளின் பின்னால் சுற்றிக் கொண்டிருப்பானோ, அந்த மண்ணைப் போலவே, அந்த ஆடுகளைப் போலவே, அவனுடைய நிறமும் அட்டைக்கரியாயிருந்தது. ஒற்றைநாடி உடம்பு. கல்லிலும் முள்ளிலும் நடந்த வெறும் பாதங்களில் வெண்மையான சிராய்ப்புகள்

தென்பட்டன. பழுத்த கிழவன். புருவின் பாதங்களைப் போன்ற புருவங்கள், நரைத்த இமைகள், கொத்துமீசை, அங்குல அளவுக்கு வளர்ந்திருந்த வெண்மையான தாடி, மார்பில் வெள்ளிக் கம்பிகள் போன்ற சுருள்முடி-வயதை நிர்ணயிப்பது கடினமா யிருந்தது. ஆனால் கிழவன் மிகவும் களைத்துப் போயிருந்தான். முகத்தில் வலைவலையான சுருக்கங்கள் பின்னிக் கிடந்தன. கைகால்களின் நரம்புகள் புடைத்திருந்தது மட்டுமல்ல, அங்கங்கே முடிச்சுகள் நிரம்பியிருந்தன.

புகையிலையை வாயில் அடக்கிக்கொண்டு, பையைச் சரியாகக் கட்டியவாறு அவன் கேட்டான்: ''உன்னுடைய கிராமம் எங்கே இருக்கிறது ?''

'' பக்கத்திலேயேதான்...விபூத்வாடி'' என்றேன்.

தொடர்ந்து என் குடும்பத்தைப் பற்றி விசாரித்தான். நான் தேவையான தகவலைக் கொடுத்தேன். உடனே கிழவன் தனக்குத் தெரிந்த யார்யாரைப் பற்றியெல்லாமோ சொன்னான். '' அப்படியானால் நீ நம்மைச் சேர்ந்தவன் தான்!'' என்று கூறி அவன் என் முதுகில் தட்டிக் கொடுத்தான். பின்பு துப்புவதற்காக உட்கார்ந்தவாறே நிலைவாயிலை நோக்கி நகர்ந்து சென்றான்.

எனக்கு நல்ல துணிச்சல் ஏற்பட்டு விட்டது. ஆடு மேய்ப்பவர்களின் இந்தக் கிராமத்தில் நான் தன்னந்தனியன் அல்லன், என்னை நெருங்கி உரையாடுபவன், சொந்தம் கொண்டாடுபவன் ஒருவனாவது இருக்கிறான், இதே போன்று ஐந்து-பத்து பேர்கள் கிடைத்து விட்டால் அங்கே என் வாழ்க்கை சகித்துக் கொள்ளக் கூடியதாகத்தான் இருக்கும் என்று தோன்றியது,

சிறிது நேரம் கழித்துக் கிழவன் என்னிடம் விடைபெற்றுக் கொண்டு வயலை நோக்கிச் சென்றுவிட்டான். நான் திரும்பவும் தனியனாகி விட்டேன். பள்ளிக்கூடத்தின் உத்திரங்களில் எனக்கு முந்தைய ஆசிரியர்கள் தனித்தனியாகப் பழமொழிகளைக் கரிக்கட்டியால் எழுதி வைத்திருந்தனர். கிழக்கு மேற்கு இரு பக்கங்களிலும் அவர்களுடைய பெயர்களைக் கொண்ட வண்ணத் தாள்கள் ஒட்டி வைக்கப்பட்டிருந்தன. கூரையிலிருந்து பிசின் மரத்தின் ஒரு கிளை தொங்கவிடப் பட்டிருந்தது. அதன் மேல் மாட்டு-ஈக் கூட்டங்கள் மொய்த்திருந்தன. கூரை இடுக்குகளில் எங்கெங்கே இடம் அகப்பட்டதோ அங்கெல்லாம் பறவைகள் கூடு கட்டியிருந்தன. அந்தக் கூடுகளிலிருந்து சணல் நூல்களும் துரும்புகளும் தொங்கிக்கொண்

டிருந்தன. குருவிகள் இங்குமங்கும் சிறகடித்துப் பறந்து கொண்டு கசமுசவென்று கத்திக் கொண்டிருந்தன. ஒரு மேஜை, ஒரு நாற் காலி, ஒரு பலகை—இவ்வளவுதான் அங்கிருந்த பொருள்கள். மேஜையை ஒட்டினாற்போல் ஒரு மரப்பெட்டி இருந்தது. அதைத் திறந்து பார்த்தேன். பலகை துடைக்கும் துணி, ரூல் கழி, பழைய ரிஜிஸ்டர், வருகைப் பதிவேடு, காலியான சாக்பீஸ் பெட்டிகள், மைக் கூடு, பேனா, இத்தியாதி...

பையிலிருந்து நான் கொண்டு வந்திருந்த துப்பட்டியை வெளியே எடுத்துக் கீழே விரித்தேன். சிறுசிறு கொசுக்களின் ஆக்ரமிப்பிலிருந்து என்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காகத் தலை யில் ஒரு வேட்டியைச் சுற்றிக்கொண்டு படுத்தேன். இவ்விதம் தனியே படுத்துக் கிடப்பது பெரிதாகத் தோன்றவில்லை. ஆனால் சொந்த மனிதர்களே இல்லாது, வெயிலில் பொரிந்து கொண்டிருக் கும் இந்தக் கிராமமும், காலியாய்க் கிடந்த இந்தப் பள்ளிக்கூடமும் என் தனிமையுணர்ச்சியை அதிகப்படுத்தின. பறவைகள் 'காச்சமூச்' என்று கத்தியவாறு இருந்தன. ஓரிரண்டு குருவிகள் கத்தினால் கேட்பதற்கு இதமாக இருக்கும். ஆனால் பத்துப் பதினைந்து குருவிகள் இடைவிடாமல் சிறகடித்துக் கொண்டும் கத்திக்கொண்டும் இருந்தால் சகிக்கவே முடியாது. ஆனால் இந்தத் தொல்லைக்கு முடிவு எதுவும் இல்லை. கதவை மூடினாலும் சுவருக்கு மேலே இருந்து உள்ளே வருவதற்கு வழி இருந்தது. நான் கண்களை மூடிக்கொண்டு படுத்துக் கிடந்தேன். நடந்த களைப்பு, உண்ட மயக்கம், நிழலின் சுகம்—எல்லாம் சேர்ந்து என்னை ஆழ்ந்து தூங்கச் செய்தன.

## 3

அந்த அயர்ந்த தூக்கத்திலிருந்து நான் கண் விழித்தேன். படுத்த நிலையிலிருந்தே திறந்த வாயில் வழியாக நான் எதிரே பார்த் தேன். அப்போது பொழுது முற்றிலும் சாய்ந்து விட்டிருந்தது. காட்டிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்த செம்மறி ஆடுகளின் இரைச்சல் கேட்டது. நீண்ட நேரம் நான் தூங்கியிருந்துங் கூட எனக்கு எழுந்திருக்கவே மனமில்லை. என் கால்களிரண்டும் அவ் வளவு நொந்து போயிருந்தன. இரண்டு கைகளையும் தலைக்கு அடி

யில் கொடுத்து உத்திரங்களைப் பார்த்தவாறு அப்படியே படுத்திருந்தேன்.

வெளியே ஆடுகளின் இரைச்சல் இருக்க இருக்க அதிகரித்துக் கொண்டே இருந்தது. ஆடு மேய்ப்பவர்களின் உரத்த குரல்கள் அருகிலும் தூரத்திலும் ஒலித்தவாறு இருந்தன. அவர்களின் நாய்கள் குரைத்துக் கொண்டிருந்தன. சேவல்கள் கூவிக் கொண்டிருந்தன. மனிதர்களின் பேச்சுக்குரல்களும் நடுநடுவே கேட்டன. பறவைகளும் காகங்களும் எழுப்பிய ஒலி காதைத் தொளைத்தது. சற்று நேரத்துக்கு முன்பு நடுப்பகலில் ஜீவனற்றுத் தோன்றிய கிராமம் திடீரென்று உயிர் பெற்று விட்டது, விந்தையான சுறுசுறுப்புடன் இயங்க ஆரம்பித்திருந்தது.

நான் வெளியே வந்தேன். மைதானத்தில் வந்து நின்று கொண்டேன். நான் வந்த வழி, அந்த ஈட்டி இளைஞன் வந்த வழி, அந்தக் கிழவன் வந்த வழி, எல்லாமே திரும்பி வரும் ஆட்டு மந்தைகளால் நிரம்பி யிருந்தன. தலையைக் குனிந்து கொண்டு அந்தப் பிராணிகள் வேகமாக நடந்து சென்று கொண்டிருந்தன. அவற்றின் குளம்புகளின் ஒலி அடங்கி ஒலித்துக் கொண்டிருந்தது. புழுதி பறந்து கொண்டிருந்தது. தரையில் நூற்றுக்கணக்கான குளம்புகளின் சின்னங்கள் பதிந்து கொண்டிருந்தன. இடுப்புத் துணியை வரிந்து கட்டிக்கொண்டு, தோளில் தாங்கிய கம்புகளுடன், கரிய உருவமுள்ள ஆட்டிடையர்கள் வாயினுல் ஏதேதோ விந்தை ஒலிகளை எழுப்பியவாறு அவற்றின் பின்னேடு சென்றனர். மந்தையில் வெள்ளாடுகள் இருந்தன; சில சடைநாய்களும் இருந்தன.

மேற்குத் திசையில் வானம் சிவந்து தோன்றியது. காற்று கிழக்கு நோக்கி வீசிக் கொண்டிருந்தது. சிறு சிறு வெண்மேகக் குவியல்கள் சிவந்த மேற்றிசையிலிருந்து கருநீலமான கீழ்வானம் வரை பரவலாகச் சிதறுண்டு கிடந்தன. தரையில் நிகழ்ந்து கொண்டிருந்தது போலவே வானிலும் வெண்மையான ஆடுகள் பட்டியில் அடையச் சென்று கொண்டிருந்தன.

சமீபத்தில் குட்டி போட்டிருந்த ஆடுகள் ஓட்ட ஓட்டமாக வந்தன. ஒன்பது பத்து நாட்களே நிரம்பப் பெற்ற அவற்றின் குட்டிகள் வீட்டிலேயே தங்கி விட்டிருந்தன. அவை தள்ளாடும் கால்களில் உடலை ஏந்தியவாறு நடக்க ஆரம்பித்திருந்தன. மெல்லிதான ரோஜா நிறம் கொண்ட நாக்குகளை வெளியே நீட்டிப் பரிதாபமான குரலில் கத்த ஆரம்பித்திருந்தன. தாய் ஆடுகள் கூட்டமாக

வந்ததும், அவை அவற்றின் மடியில் புகுந்து முட்டி முட்டிப் பால் குடிக்க ஆரம்பித்தன.

காட்டிலிருந்து திரும்பிவந்திருந்த ஆட்டிடையப் பெண்கள் வீட்டில் அடுப்பு மூட்டினார்கள். புல் வேய்ந்த கூரைகள் வழியே புகை வானை நோக்கி எழுந்தது. ஆட்டிடையர்கள் ஆடுகளைப் பட்டியில் அடைக்கும் முயற்சியில் ஈடுபட்டனர்.

பார்த்துக் கொண்டிருக்கும் போதே கும்மிருட்டாகி விட்டது, ஆடுகளின் கத்தல், காக்கை குருவிகளின் இரைச்சல், மனிதர்களின் கூக்குரல்கள் எல்லாமே அடங்கி விட்டன.

பாடசாலையின் வெளித் திண்ணையில் நான் கால்களைத் தொங்க விட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தேன். மேலே நட்சத்திரங்கள் கண் சிமிட்டிக் கொண்டிருந்தன. கீழே வீடுகளில் அகல் விளக்குகள் 'மினுக் மினுக்' என்று பிரகாசிக்க ஆரம்பித்தன. குளிர்ந்த காற்று வீசிக்கொண்டிருந்தது.

யாரோ அந்த இருட்டில் வந்து எதிரே ஒரு பக்கமாக இருந்த அனுமார் கோயிலில் விளக்கு ஏற்றிவிட்டுப் போனான். அந்த வெளிச்சத்துக்குச் சென்று சாப்பாட்டை முடித்துக்கொண்டு, அந்தப் பெண் கொடுத்துப் போயிருந்த தண்ணீரில் மிஞ்சியிருந்ததைக் குடிக்கலாமே என்ற எண்ணம் தோன்றியது. ஆனால் உடம்பு ஒத்துழைக்கவில்லை. கம்பத்தின் அடிப்பகுதியில் சாய்ந்து கொண்டு நான் அந்த இருளில் பார்வையைச் செலுத்தியவாறு உட்கார்ந்திருந்தேன்.

இப்பொழுதிலிருந்து அடுத்த மூன்று ஆண்டுகளுக்கு இதுதான் என்னுடைய கிராமமாக இருக்கப் போகிறது. இங்கேதான் நான் இருந்தாக வேண்டும். இங்குள்ள மக்களோடு இணைந்து பழக வேண்டும். இவர்களுடைய நம்பிக்கைக்கும், அன்பிற்கும் பாத்திரமாகி நற்பெயரும் மதிப்பும் பெற வேண்டும். இவற்றையெல்லாம் செய்துகொண்டே, இடிந்து பெயர்ந்து குப்பைமேடாகி, பறவைகளின் எச்சமும் கொசுக்களின் குமைச்சலும் நாற்றமும் நிறைந்திருக்கும் இந்தப் பாடசாலையைச் சீர்ப்படுத்தியாக வேண்டும். பிள்ளைகளை ஒன்று சேர்ப்பது, அவர்களுக்குப் படிப்பில் ஈடுபாடு ஏற்படும்படி செய்வது, இந்தக் கிராமத்தில் என்னை நிலைப்படுத்திக் கொண்டு மக்களிடையே செல்வாக்குப் பெறுவது, இவற்றுக்கெல்லாம் பெரிய தடையாக இருந்தன என்னுடைய இளம் வயதும், மெலிந்த உருவமும். இந்தக் கிராமத்தின் சிறுவர்களில் பத்துப்

பதினைந்து பேர்கூடத் தொடர்ந்து கட்டுப்பாடாகப் பள்ளிக்கூடத்துக்கு வந்தது கிடையாது. இப்படிப்பட்ட பிற்போக்கான பட்டிக்காட்டில் என் திட்டங்களெல்லாம் எப்படி நிறைவேறப் போகின்றனவோ!

எதிரே காலடிச் சத்தம் கேட்டது. அனுமார் கோயில் விளக்கின் மங்கிய ஒளி சிறிது வெளியிலும் விழுந்து கொண்டிருந்தது. அதனூடே ஒரு கரிய உருவம் தெரிந்தது. அந்த இருட்டில் தெளிவாக ஒன்றும் தெரியாவிட்டாலும், யாரோ என் அருகில் வந்ததை மட்டும் நான் புரிந்துகொள்ள முடிந்தது. நான் சற்று நடுங்கினேன்.

'' யார்? மாஸ்டரா உட்கார்ந்திருப்பது?''

கிழத் தாத்தாவின் குரலை நான் சட்டென்று புரிந்து கொண்டேன்.

'' ஆமாம். வாருங்கள்.''

'' சாப்பாடு முடிந்ததா?''

'' இல்லை. இனிமேல்தான்! ''

'' இதோ பால் கொண்டுவந்திருக்கிறேன். ஆட்டுப் பால்.''

திண்ணையில் பால் பாத்திரத்தை வைக்கும் ஒலி கேட்டது. அந்தத் திசையில் கையை நீட்டினேன். பாத்திரம் தட்டுப்பட்டது.

இதற்கு மத்தியில் வேறு யாரோ அந்த இருட்டில் வந்து, இருமிச் செருமியவாறு படியில் உட்கார்ந்து கொண்டான்.

'' யாரது?'' என்று கேட்டார் கிழவர்.

'' நான்தான். நாட்டாண்மை ஐயா. ''

'' ஆனந்தனா?''

''ஆமாம். ''

''அடே ஆக்கங் கெட்டவனே, மாஸ்டர் இருட்டில் உட்கார்ந்திருப்பது தெரியவில்லையா? வீட்டுக்குப் போய்ச் சிமிணி விளக்கை எடுத்து வாயேன்!''

''எந்த மாஸ்டர்?''

கிழவர் ஆரம்பத்திலிருந்து எல்லாம் விவரிக்கும்படி ஆயிற்று. எந்த மாஸ்டர், எதற்காக வந்திருக்கிறார், எப்போது வந்தார், எந்த ஊர் ஆசாமி, எந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்—இம்மாதிரி எல்லாக் கேள்விகளுக்கும் 'நாட்டாண்மை' சொல்லிய பதில்களை ஆனந்தன் கேட்டுக் கொண்டிருந்தான். பிறகு சிமிணி விளக்கு எடுத்துவரச் சென்றான். எனக்கு இன்னும் பல சாமான்கள் தேவையாயிருந்தன. செம்பு, டம்ளர், அகல் விளக்கு, விரிப்பு இவையெல்

லாம் கட்டாயத் தேவைகளாயிருந்தும் நான் கையோடு எடுத்து வரத் தவறிவிட்டேன். அவற்றைப் பற்றிய எண்ணமே தோன்ற வில்லை.

ஆனந்தா ராமோஷி சிமிணி விளக்கு எடுத்து வருவதற்குள் இன்னும் பத்துப் பன்னிரண்டுபேர் அங்கு வந்து அந்தப் புழுதியி லேயே தங்கள் தங்கள் கம்பளியை விரித்துப் போட்டு உட்கார்ந்து கொண்டனர். பேச்சுக் குரலிலிருந்தே அவர்கள் ஒருவரை யொருவர் புரிந்து கொண்டனர். யாரோ ஒருவனுடைய ஆட்டை ஓநாய் அடித்துக் கொன்று விட்டதாம். அதைப் பற்றிய விவரங்கள் அவர்கள் பேச்சில் அடிபட்டன. பெண் ஓநாய் ஒரு புதரில் குட்டி போட்டிருக்கிறது, அங்கேதான் அந்த ஓநாய் தங்கி யிருக்கிறது, இரவோடிரவாகச் சென்று அந்த ஓநாயைக் கொன்று விட்டால் அதன் தொல்லையிலிருந்து விடுதலை கிடைத்து விடும்—இவ்வாறெல்லாம் பேச்சுக்கள் எழுந்தன. ஒருவன் இந்த யோசனையைக் கேலி செய்தான். வனவிலங்கு அவ்வளவு எளிதில் அகப்பட்டு விடாது: அது எப்போதும் சுற்றித் திரிந்து கொண்டே இருக்கும் என்று கூறினன் இன்னொருவன். இதெல்லாம் பேசி முடிந்த பிறகு ஒருவன் புதிய செய்தி யொன்றை அவிழ்த்துவிட் டான். ஆட்டைக் கொன்றது ஓநாயே இல்லையாம்! ஒரு சாதாரண நாய்தானும். அந்த நாய் யாருடையது; அது நிகழ்ந்தபோது யார் பார்த்தார்கள் என்ற விவரமெல்லாம் அவன் கூறினன்.

தலைப்பாகையின் நுனியைக் குறுக்காகப் பிடித்துக்கொண்டு ஆனந்தா ராமோஷி சிமிணி விளக்கை அணையாமல் எடுத்து வந் தான். நான் நினைத்ததற்கும் அதிகமாகவே மனிதர்கள் அந்தப் புழுதியில் உட்கார்ந்திருந்தார்கள் என்பதை நான் அந்தச் சிமிணி விளக்கின் ஒளியில் காண முடிந்தது. அநேகமாக எல்லோரும் உடம்பில் சட்டை அணிந்து கொள்ளாமலே இருந்தனர். ஏறக் குறைய எல்லோரிடமும் முரட்டுக் கம்பளி இருந்தது. அதைச் சுருட்டி மடித்துச் சாய்ந்துகொள்ள வசதியாகப் போட்டுக் கொண் டிருந்தனர் சிலர்; மடித்தவாறே மேலே போட்டுக் கொண்டிருந் தனர் சிலர். இரண்டொருவர்தான் கம்பளியை நன்ருகப் போர்த் துக்கொண்டு உட்கார்ந்திருந்தனர்.

ஆனந்தன் கொண்டு வந்திருந்த சிமிணி விளக்குடன் பள்ளிக் கூடத்துக்கு உள்ளே சென்று அதன் வெளிச்சத்தில் நான் சாப் பாட்டை முடித்துக் கொண்டதும் வெளியே வந்தேன்.

''சாப்பாடாயிற்ரு?'' என்று கேட்டார் நாட்டாண்மை ஐயா.

''ஆயிற்று.''

கூடியிருந்தவர் இன்னும் கலையவில்லை என்பதைக் கனைப்பதும் இருமுவதுமாயிருந்த குரல்களிலிருந்து தெரிந்து கொள்ளமுடிந்தது. உள்ளேயிருந்து சிமிணி விளக்கை எடுத்து வரலாமா என்று தோன்றியது. ஆனல், இந்தக் காற்றுக்கு அது நிற்காது; மேலும் என்னைத் தவிர வேறு யாருக்கும் அது தேவையாயிருந்ததாகவும் தோன்றவில்லை. என் அருகில் உட்கார்ந்து என்னை, ''குழந்தை'' என்று அழைத்து என்னிடம் உரிமையுடன் பேசிக் கொண்டிருக்கும் இந்தப் பழுத்த கிழவர் இந்தக் கிராமத்துக்கு நாட்டாண்மை என்ற உறுதி எனக்கு இதற்குள் ஏற்பட்டிருந்தது. எல்லோரும் அவரை, 'நாட்டாண்மை ஐயா' என்று மரியாதையுடன் அழைத்தனர்.

சிறிது நேரம் பொறுத்து, அந்தக் கண்ணுக்குப் புலனுகாத கூட்டத்தை விளித்து நாட்டாண்மைக் கிழவர் கூறினர்: ''ஏம்பா, ஆசிரியர் வந்திருக்கிருர். நாளையிலிருந்து பிள்ளைகளைப் பாடசாலைக்கு அனுப்பி வையுங்களப்பா!''

யாரோ தொண்டையைக் கனைத்துத் துப்பினுன்.

இன்னொருவன் தன் பக்கத்திலிருப்பவனிடம் கேட்பதுபோல் மெல்லிய குரலில் கேட்டான்: ''கிராமத்தில் பிள்ளைகள் எங்கே இருக்கிருர்கள்?''

நாட்டாண்மை சட்டென்று குரலை உயர்த்தி, ''அப்படியானல் கிராமம் மலடாகி விட்டதா?'' என்று கேட்டார்.

''அப்படி இல்லை. ஆனல் பள்ளிக்கூடத்துக்கு வருவதற்கு வேலையற்ற பிள்ளைகள் இருக்க வேண்டாமா?''

''ஒரு பிள்ளைகூட இல்லையா? அதாவது எல்லாப் பிள்ளைகளும் வேலைக்குப் போவதாக அர்த்தமா?''

''அதுதான், செம்மறியாடு மேய்க்க, வெள்ளாடு மேய்க்கப் போய்விடுகிருர்களே! சும்மா யாரும் இல்லையே!''

சிறிது நேரத்துக்கு ஏறுமாருன கேள்விகளும் கேள்விகளுக்குப் பதில்களுமாக ஒரே இரைச்சலாய் இருந்தது. பிறகு நான் கேட்டேன்: ''ஆறுவயதுக்கு மேல் வளர்ந்த பிள்ளைகள் ஆடு மேய்ப்பதற்குத் தனியாகவா போகிருர்கள்?''

''தனியாக எப்படிப் போவார்கள்? அண்ணன்மார்கள் பின்னேடு காட்டில் சுற்றுகிருர்கள். சிறியவர்களாயிருந்தால் இரண்டு மூன்று பிள்ளைகள் ஒன்ருக ஆடுகளைத் தொடர்ந்து போகிருர்கள்.''

''அப்படியானால் அந்த மாதிரிப் பிள்ளைகளை அனுப்புங்களேன். அவர்களுக்கு எழுதப் படிக்கத் தெரிந்தால் நஷ்டம் எதுவும் கிடையாது. நன்மைதான் ஏற்படும்.''

தூரத்திலிருந்து புகையிலையைக் குதப்பியவாறு ஒருவன் உரத்த குரலில் கேட்டான்: ''அந்தப் பிள்ளைகளின் வயிற்றுக்கு?''

கண நேரத்துக்கு எனக்கு விடை எதுவும் தோன்றவில்லை. பிள்ளைகள் பள்ளிக்கூடத்துக்கு வந்துவிட்டால் அவர்களுடைய வயிற்றுப் பாட்டை யார் கவனித்துக் கொள்வார்கள் என்ற கேள்வி எழும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. பெற்றோரின் வருவாயிலிருந்துதான் சிறிய குழந்தைகளுக்குச் சாப்பாடு நடக்கிறது என்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன். என்னுடைய திகைப்பைப் புரிந்து கொண்டவர் போல நாட்டாண்மைக் கிழவரே அந்தக் கேள்விக்குப் பதில் சொன்னார்: ''அந்தப் பிள்ளைகள் பட்டினியால் சாகும் நிலை ஏற்பட்டால் என் வீட்டுக்கு அழைத்து வரலாம். ஒரு சேர் ஒன்றரைச் சேர் சோளம் உனக்குக் கொடுக்கிறேன். வெட்டிப் பயலே, எந்த நல்ல காரியமானாலும் குறுக்குச்சால் ஓட்டுவதுதான் உன் வேலையாய்ப் போயிற்று! சர்க்கார் நல்ல பள்ளிக்கூடம் கொடுத்திருக்கிறார்கள், ஆசிரியரைக் கொடுத்திருக்கிறார்கள் -- படிப்பதற்கு என்ன கேடு?''

அவ்வளவுதான்! அதன் பிறகு எல்லோருடைய தொனியும் வேறு விதமாக மாறிவிட்டது. யார் யார் பிள்ளைகளை அனுப்ப முடியும் என்பதைப்பற்றி விவாதம் நடந்தது. எங்கள் வீட்டு 'சதா' வருவான், அவர் வீட்டு 'மகாதா' வருவான், உங்கள் வீட்டு 'துகா' வருவான், அந்தப் பையன் வருவான், இந்தப் பையன் வருவான் — இவ்வாறு கூட்டிக் கழித்துக் கணக்கு எடுத்ததில் பத்துப் பன்னிரண்டு பிள்ளைகள் தேறினார்கள்.

''மாஸ்டர், உன் மனசு போல முடிவு ஏற்பட்டுவிட்டதில்லையா? நாளையிலிருந்து வேலையை ஆரம்பிக்கலாம்'' என்று என்னிடம் கூறினார் நாட்டாண்மை.

இந்தச் சர்ச்சை இவ்விதம் முடிவடைந்தது. இதன் மத்தியில் சிலர் வீட்டுக்குப் போய்விட்டுத் திரும்பியிருந்தார்கள். எல்லோரும் இப்போது போய்விடுவார்கள், அப்போது போய்விடுவார்கள் என்று எண்ணியபடி நான் உட்கார்ந்திருந்தேன். ஆனால் பேச்சு எப்படி எப்படியோ வளர்ந்துகொண்டு போயிற்று. மழை, தண்ணீர், மேய்ச்சல் நிலம், ஆடுகள், என் நிலைமை இப்படி, உன் நிலைமை எப்படி...

நான் மெதுவாக நாட்டாண்மையிடம், ''நான் படுக்கப் போக லாமா?'' என்று கேட்டேன்.

''நிம்மதியாகப் படுத்துக்கொள். காலையில் பிள்ளைகள் வருவார்கள், கவலைப்படாதே.''

உள்ளே சென்று போர்வையை விரித்துப் போட்டு, ஒரு வேஷ்டியை எடுத்துப் போர்த்துக்கொண்டு படுத்தேன். சிமிணி விளக்கை அணைத்தேன். வெளியே பேச்சுக்கள் தொடர்ந்து கொண்டிருந்தன. நான் அப்படியே கண்ணயர்ந்து விட்டேன்.

நடுவில் உறக்கம் கலைந்தபோது, வெளியே வானில் வெண்மதி புறப்பட்டிருந்தது. கூடியிருந்தவர்களில் சிலர் சாவடியிலே, சிலர் மைதானத்தில் எங்கே உட்கார்த்திருந்தார்களோ அங்கேயே, கம்பளியை மேலும் கீழுமாகப் போட்டுக்கொண்டு முடங்கிக் கிடந் தார்கள். வானம் நிர்மலமாயிருந்தது. மனோகரமான நிலவு எங்கும் பரவியிருந்தது. வெளியே நான் நீண்ட நேரம் நின்றிருந்தேன். எதிரே கிராமத்தின் எல்லையில் இரண்டு குட்டையான கூரைகள் இருந்தன. அவற்றின் நிழல்கள் தரையில் தெரிந்தன. நடுவி லிருந்த தெருவுக்கு அப்பால் கல்லால் வரம்பு கட்டப்பட்ட நீர்க் குட்டை தென்பட்டது. அதற்கும் அப்பால் காடு; நெடுந்தூரம் பரவியிருந்த காடு. தூரத்தில் மங்கலாகத் தெரிந்த புதர்கள். நான் மத்தியான்ன வெயிலுக்கு ஒதுங்கிய வேப்பமரம் அமைதியாக நின்று கொண்டிருந்தது. அதன் கிளை நுனியில் நான்கு வெள்ளைக் கொக்குகள் சத்தமில்லாமல் அசைவற்று உட்கார்ந்திருந்தன.

## 4

நான் அங்கு வந்து பத்துப் பதினைந்து நாட்கள் ஆகிவிட்டன. அப்படியும் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் வரவில்லை. பள்ளிக்கூடம் நடைபெறவில்லை. என்றாவது எப்போதாவது இரண்டு மூன்று பிள்ளைகள் வந்தாலும் ஒரு மணி நேரம், அரைமணி நேரம் ஆவதற் குள்ளேயே சலிப்படைந்து விடுவார்கள். சிறுநீர் கழிக்கச் செல்வ தாகச் சாக்குச் சொல்லிக்கொண்டு எழுந்து சென்று அப்புறம் திரும்பியே வருவதில்லை. அவர்களிலும் யாராவது ஒழுங்காக வர ஆரம்பித்தால், அந்தப் பிள்ளையின் தகப்பனோ தாயோ வந்து

சாப்பாடு போட அழைத்துச் செல்வதுபோல் அழைத்துச் சென்று ஆடு மேய்த்துவர அனுப்பிவிடுவார்கள். கள்ளப் பாடம் எழுதும் பிள்ளை எதையாவது நான் கண்டித்தால் அந்தப் பையன் அழ ஆரம்பித்து விடுவான். உடனே வீட்டிலிருந்து அவனுடைய அம்மா ஓடி வந்து விடுவாள். ''ஏன்ய்யா? உனக்குப் பிள்ளை குட்டி கிடையாதா? உன் பள்ளிக்கூடம் நாசமாய்ப் போகட்டும்! — நீ வீட்டுக்கு வாடா, கண்ணு!'' என்று சொல்லி, பிள்ளையைக் கையைப் பிடித்து அழைத்துச் சென்று விடுவாள். இவ்விதந்தான் பள்ளிக்கூடம் நடந்து கொண்டிருந்தது.

தினமும் ஊர் மக்கள் சாவடிக்கு எதிரே உள்ள மைதானத்தில் கூடிவிடுவார்கள். அவர்களிடம் இதைப்பற்றிச் சொன்னால், ''இன்னும் குழந்தைகளுக்குப் பழக்கம் படியவில்லை. ஒரு மாதம் இரண்டு மாதம் கழியட்டும்'' என்றுதான் சொல்வார்கள்.

நாட்கள் அவ்விதம் கழிந்து செல்லவிடுவதைத் தவிர நான் வேறு என்னதான் செய்யமுடியும்?

இதன் மத்தியில் நாட்டாண்மைக்காரர் எனக்கு ஒரு சிறிய வீடு கொடுத்திருந்தார். அதில் நான் என்னுடைய குடித்தனத்தை நிறுவிக்கொண்டேன். அதாவது கற்களை அடுக்கி அடுப்புப் போட்டுக் கொண்டேன். ஞாயிற்றுக்கிழமை கிராமத்துக்குப் போய் இரண்டு பாத்திரங்கள் வாங்கி வந்து நானே சமையல் செய்து சாப்பிட ஆரம்பித்தேன்.

ஓர் இரவில் ஈட்டியும் தானுமாகத் தாதூ வந்தான். சிமிணி விளக்கின் வெளிச்சத்தில் நான் படுக்கையில் சாய்ந்தாற்போல் உட்கார்ந்திருந்தேன்.

அவன் வந்து ஜமுக்காளத்தில் காலைப் பரப்பியவாறு உட்கார்ந்துகொண்டான். கையில் இருந்த ஈட்டியை ஒரு மூலையில் வைத்துவிட்டு அவன் கூறினான்: ''உன் பங்குக்கு இந்த இடம் தான் கிடைத்தது என்று சொல்லு!''

இதற்குள் இங்குள்ளவர்களின் வகைதொகை தெரியாத பேச்சு எனக்குப் பழக்கமாகிவிட்டிருந்தது. மரியாதையைக் குறிக்கும் பன்மைச்சொல் இன்னதென்றே அவர்கள் அறியாமல் இருந்தார்கள். போகிறது, ஏதோ அன்பு காரணமாக, அதிகப் பழக்கம் காரணமாக இருந்தால் காதுகளில் அது உறுத்துவதில்லை. ஆனால் முன்பின் தெரியாத எந்த ஆட்டிடையனும் என்னைப் பார்த்து, ''என்னடா வாத்தியார்!'' என்று சொன்னால் எனக்குச் 'சுறுக்'

என்று தைத்தது. முக்கியமாகத் தாதூ அந்த மாதிரிச் சொன்னது தான் மிகவும் வேதனையளித்தது.

சட்டைப் பையிலிருந்து உக்காக் குழாயை எடுத்து அதில் புகையிலையைத் திணித்தான் அவன். பிறகு அது விழுந்துவிடாமல் கால் கட்டைவிரலுக்கும் அடுத்த விரலுக்கும் இடையே வைத்துப் பிடித்துக்கொண்டு கைகளால் சிக்கிமுக்கிக் கல்லை உராய்ந்து உக்காவைப் பற்ற வைத்தான். பிறகு உக்காவை வாயில் வைத்துக் கொண்டு 'பக் பக்'என்று இழுத்துப் புகை மேகமொன்றைப் பறக்க விட்டான். காட்டமான புகை உள்ளுக்கு இறங்கியபோது அவனுடைய கண்களில் நீர் வழிந்தது.

முதல் சந்திப்பிலிருந்தே இந்த ஆளைப்பற்றி என் மனத்தில் ஒரு முடிச்சு விழுந்திருந்தது. மேற்கொண்டு விசாரித்ததில் இந்த ஆசாமி வெறும் அடாவடித்தனத்தினலேயே பிழைத்துக் கொண்டிருக்கிருன் என்பது தெரியவந்தது. கிராமத்து மக்கள்மீது அவன் அதிகாரம் செலுத்தி வந்தான். அந்த வட்டாரத்து அரசாங்க அலுவலர்களுடன் அவன் சரிசமமாகப் பழகிக் கொண்டிருந்தான். அவனுக்கு ஓரளவு எழுதப் படிக்கத் தெரிந்திருந்தது. எனவே கிராம மக்கள் அடிக்கடி அவனிடம் யோசனை கேட்பது வழக்கமாயிருந்தது.

மூக்காலும் வாயாலும் புகையை விட்டவாறு அவன் நானிருந்த அறையை நோட்டம் விட்டான். ''உனக்கு முந்திய மாஸ்டர் இதே அறையில்தான் தங்கியிருந்தான்!'' என்ருன் அவன்.

அந்த மாஸ்டர் கிராமத்தில் ஏதோ தப்புத்தண்டா செய்து விட்டு நன்ருக உதைபட்டிருந்தான், ஊர்வாசிகள் அவனைச் செம்மையாக அடித்து அனுப்பியிருந்தனர் — இவ்வாறெல்லாம் பராபரியாக நான் கேள்விப்பட்டிருந்தேன். அது நினைவுக்கு வந்ததும் என் வயிற்றில் புளியைக் கரைத்தது. இருந்தாலும் முகத்தில் ஒன்றும் காட்டிக்கொள்ளாமல், ''அப்படியா'' என்றேன். ஆனல் என் குரல் பயந்த ஆட்டின் குரலைப்போல் ஒலித்தது.

''ஒழுங்காக வேலை பார்க்காமல் தில்லுமுல்லுச் செய்ய ஆரம்பித்தான். நேரே அடுப்பங்கரை வரையில் போய் விட்டான், எங்கள் வீடுகளில். நான் நாலைந்து தடவை அந்தப் பயலை எச்சரிக்கை செய்தேன். 'எங்கள் வீட்டுப் பெண்களை ஏறெடுத்துப் பார்க்காதே. வம்பில் வந்து முடியும்' என்று சொன்னேன். ஆனல் என் பேச்சை அவன் கேட்கவில்லை. தான் சர்க்கார் ஆள் என்ற

எண்ணம் அவனுக்கு. 'இந்த அறிவில்லாத ஆட்டிடையர்கள் என்னை என்ன செய்துவிட முடியும்?' என்று நினைத்துவிட்டான். அதனால் தான் வீணுக்குச் செம்மை உதை வாங்கிக்கொண்டான் பயல்!''

இவ்வாறு சொல்லும்போது அவனுடைய மேடுபள்ளமான முகம் சந்தோஷத்தினால் பளபளத்தது. சிவந்த கண்களை உருட்டி அவன் என்னைப் பார்த்தான். என்னைப் பயம் பிடித்துக்கொண்டது. ஒரு விதமாகச் சமாளித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தேன்.

மூலையில் சார்த்தியிருந்த ஈட்டியை எடுத்து அவன் தன் பக்கத்தில் வைத்துக்கொண்டான். பின்பு கூறினான்: ''இந்த மாதிரியேதான் அவனும் உட்கார்ந்திருந்தான். இதே மாதிரி இரவு நேரம். நான் உள்ளே வந்து முன்பின் யோசிக்காமல் இந்த ஈட்டியைத் தலைகீழாகப் பிடித்துக்கொண்டு சாத்து சாத்தென்று சாத்தினேன். அந்தப் பயல் கீழே விழும் வரைக்கும் நான் நிறுத்தவே இல்லை. அவன் வேட்டியை ஈரமாக்கிக் கொண்டான். என் காலில் விழுந்து கெஞ்சினான். ஆனால் நான் படுகோபத்தில் இருந்தேன். மேலும் மனம் கொண்ட மட்டும் அடித்துத் தீர்த்தேன். பிணம் மாதிரி அவன் தரையில் விழுந்தவுடன் நான் கூறினேன்: 'மூச்சுக் காட்டாமல் ஒழுங்காகப் பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடு. கில்லாடி வேலையில் இறங்கினாயோ, கொன்று விடுவேன், கொன்று!' ''

சிமிணி விளக்கின் சிவந்த ஒளி அந்தக் கோள்மூட்டியின் எலும்பு துருத்திய முகத்தின்மீது விழுந்து கொண்டிருந்தது. மீசை சிதறிப் போயிருந்தது. பீடிப் புகையினால் கறுத்த உதட்டை அவன் தன்னுடைய சுனைப்பற்களால் அழுத்திக் கடித்துக் கொண்டிருந்தான். என்ன பேசுவது என்று எனக்கு ஒன்றுமே புரியவில்லை. என்னை அறியாமலே 'ஹி ஹி' என்று சிரித்தவாறு நான் வாயிற்புறம் பார்த்தேன். இந்தச் சமயத்தில் யாராவது வரவேண்டுமென்று விரும்பினேன். ஆனால் வெளியே கும்மிருட்டாக இருந்தது.

மீசையை ஒழுங்கு படுத்திக்கொண்டு தாதூ கூறினான்: ''சிரிக்காதே மாஸ்டர்! இது சிரிக்கக்கூடிய விஷயம் இல்லை. நீ புதிதாக வந்தவன். உன் வேலையை ஒழுங்காகக் கவனி. ஊர் விவகாரங்களில் தலையிடாதே. பள்ளிக்கூடத்தில் பிள்ளைகள் வந்தால் அவர்களுக்குப் பாடம் கற்றுக்கொடு. ஊருக்குப் பாடம் கற்றுக் கொடுக்கப் புறப்பட்டு விடாதே!''

தரையில் வைத்திருந்த உக்காக் குழாய், சிக்கிமுக்கி முதலிய வற்றை எடுத்துச் சட்டைப்பையில் வைத்துக்கொண்டு அவன் ஈட்டியைக் கையில் ஏந்தியவாறு நெஞ்சை நிமிர்த்திக்கொண்டு வெளியே சென்றுவிட்டான். உடனே இருளில் மறைந்தும் போனான்.

சிறிது பொழுது நான் சும்மா உட்கார்ந்திருந்தேன். என்னுடைய நெற்றி வியர்வையால் நனைந்திருந்தது. மூச்சு விடுவதற்குக்கூடப் பயமாயிருந்தது. சட்டென்று எழுந்து கதவைச் சாத்திக் கொக்கி போட்டுவிட்டு வரலாமா என்று நினைத்தேன். ஆனால் அதைச் செய்வதற்குக்கூட எனக்குத் திராணி இல்லை. அறையில் நான் குப்புறப் படுத்துக் கொண்டேன்.

சிறிது நேரம் சென்றது. திறந்த வாயில் வழியே யாரோ உள்ளே வந்ததுபோல் தோன்றியது. என் பின்கழுத்து ரோமங்கள் குத்திட்டு நின்றன. பயத்தின் சிலிர்ப்பு முள்ளந்தண்டில் இழையோடியது. சட்டென்று எழுந்து உட்கார்ந்து எதிரே பார்க்க ஆரம்பித்தேன். வெளியே சூழ்ந்திருந்த இருளிலிருந்து இருபது இருபத்திரண்டு வயது மதிக்கத் தகுந்த கட்டைக் குட்டையான ஓர் ஆசாமி உள்ளே வந்து நிலைப்படியருகே சுவரோடு சாய்ந்து உட்கார்ந்து கொண்டான். அவன் எனக்கு அறிமுகமானவன் இல்லை. இன்று வரை அவனை நான் இந்தக் கிராமத்தில் பார்த்ததும் கிடையாது.

கரகரத்த குரலில் நான் கேட்டேன் : ''யாரது?''

''நான்...ஆயபூ...''

எனக்கு ஒன்றும் புரியவில்லை. மழையில் நனைந்த நாய் மாதிரி இப்படி வீட்டுக்குள்ளே நுழைந்து உட்கார்ந்த இந்த ஆயபூ யாரெனச் சட்டென்று என்னால் நிதானிக்க முடியவில்லை. ஆனால் அவன் முழங்கால்களை உயர்த்தி இரு கைகளாலும் பிடித்துக் கொண்டு ஒன்றும் பேசாமல் உட்கார்ந்திருந்தான். பிறகு அவன் முகத்தைத் திருப்பி என்னைப் பார்த்தான். சிமிணி விளக்கின் ஒளியில் அவனுடைய சிறிய கண்களையும் புன்சிரிப்புடன் கூடிய முகத்தையும் நான் பார்க்க முடிந்தது.

''இந்த ஊர்தானா உனக்கு?''

''இல்லை. ஏகத்புர்''

''ஏகத்புரா? ரொம்பத் தூரத்திலிருந்துதான் வந்திருக்கிறாய். யார் வீட்டில் தங்கியிருக்கிறாய்?''

ஆயபூ தன் தலையில் ஒட்டினாற்போல் பதிந்திருந்த தொப்பியை எடுத்துத் தரையில் வைத்துவிட்டு இரண்டு கைகளையும் கட்டிக்

கொண்டு அறையைச் சுற்றுமுற்றும் பார்த்தான். "எனக்கு யாரும் கிடையாது. வயிற்றுக்காகக் கிராமம் கிராமமாக அலைகிறேன். இன்று இந்த ஊருக்கு வந்து சேர்ந்தேன். பள்ளிக்கூடத்துப் பக்கத்தில் சொன்னார்கள். 'மாஸ்டர் தனியாகத்தான் இருக்கிறார், போய் அவருக்குத் துணையாக இரு' என்று. வந்து விட்டேன்."

உடனே எனக்கு அந்த மனிதனைப் பல நாட்களாக, பல வருஷங்களாகத் தெரிந்திருப்பது போன்ற உணர்வு ஏற்பட்டது. உப்பிய கன்னங்களும் சிவந்த மூக்கும் கொண்ட இந்த ஆயபூ ஏன் இப்படித் திரிந்து கொண்டிருக்கிறான். எப்படி உயிர் வாழ்கிறான் என்பதைப் பற்றியெல்லாம் சிந்திக்கத் தேவையிருக்கவில்லை எனக்கு. நீ ஏன் உன் கிராமத்தை விட்டு விட்டாய், நேரே இங்கே எப்படி வந்தாய், என்ன செய்யப் போகிறாய், எங்கே இருக்கப் போகிறாய், மேலே போட்டிருக்கும் துணியைத் தவிர வேறு எதுவும் உன்னிடம் இல்லையே, ஏன்?—இந்தக் கேள்விகளெல்லாம் கேட்கத் தோன்றவில்லை எனக்கு. உடம்பில் 'டார் டா'ராகக் கிழிந்துபோன சட்டையும் முஸ்லிம்கள் அணிவது போன்ற பைஜாமாவும் அணிந்திருந்த இந்த ஆயபூவுக்கும் எனக்கும் இடையே அதிகமாகப் பேச்சுவார்த்தையே நடக்கவில்லை.

காலையில் உண்பதற்காக நான் மீந்து வைத்திருந்த ஒரு சப்பாத்தியை எடுத்து அதன்மேல் கொஞ்சம் மிளகாய்ப்பொடியும் எண்ணெய்யும் தடவி அவனுடைய கையில் கொடுத்தேன்.

எப்படி உட்கார்ந்திருந்தானோ, அந்த நிலையிலேயே அவன் அந்தச் சப்பாத்தியை ஒரு கையால் வாங்கிக் கொண்டு இமைப் பொழுதில் அதைக் காலி செய்துவிட்டான். 'மொச்சு மொச்சு' என்ற சத்தத்துடன் அவன் சாப்பிட்டு முடிந்ததும், செம்பு நிறையத் தண்ணீரை அவன் கையில் கொடுத்தேன். அந்தத் தண்ணீரை நேராகப் பாத்திரத்திலிருந்து குடிக்காமல், உள்ளங்கையைக் குவித்து வைத்துக் கொண்டு அதில் ஊற்றியவாறு குடித்தான். வாயிற்படியிலிருந்து கீழே இறங்கி வாயைக் கொப்பளித்துவிட்டு வந்தான். சுவர் ஓரமாகச் செம்பைக் கவிழ்த்து வைத்த அவன், சட்டைக் கையாலேயே வாயைத் துடைத்துக் கொண்டு ஒரு முறை இங்குமங்கும் பார்த்துவிட்டு மறுபடியும் உட்கார்ந்து கொண்டான்.

நானும் சுருட்டி வைத்திருந்த படுக்கையில் சாய்ந்து கொண்டு முகட்டைப் பார்த்தவாறு சிறிது நேரம் படுத்திருந்தேன்.

ஆயபூவின் கனத்த மூச்சொலி என் காதில் விழுந்தது. உட்கார்ந்த நிலையிலேயே முழங்கால்களில் கழுத்தைச் சாய்த்துக் கொண்டு அவன் தூங்கிப் போயிருந்தான். ஒண்ட இடம் கிடைத்தது, தண்ணீர் குடிக்கும் அளவுக்குச் சாப்பாடும் கிடைத்துவிட்டது. அயர்ந்த தூக்கம் தானுகவே வந்துவிட்டது! நான் அடியிலிருந்த கம்பளியை உருவி அவன் பக்கமாக வீசினேன். அது அவன் உடம்பில் பட்டதும் அவன் விழித்துக் கொண்டான் சொக்கிய கண்களுடன் அவன் ஒருமுறை என் பக்கமும் ஒருமுறை அந்தக் கம்பளி பக்கமும் பார்த்தான். நான் போர்வையை விரித்துக் கொண்டுதான் படுத்திருக்கிறேன் என்பதைக் கண்டுகொண்டதும் அவன் அந்தக் கம்பளியை எடுத்துக் கொண்டான் பாதியைக் கீழே விரித்து மறு பாதியை உடம்பில் சுருட்டிப் போர்த்துக் கொண்டான். பாலும் சாதமும் சாப்பிட்டுவிட்டுப் பூனை எப்படி முடங்கிக் கொண்டு தூங்குமோ அவ்விதமே ஆயபூவும் சுருண்டு படுத்துத் தூங்கி விட்டான். மெள்ள மெள்ளக் குறட்டையும் விட ஆரம்பித்தான்.

அந்த ஈட்டிக்காரப் பயலுக்கு இனிமேல் நான் பணிந்து போவதில்லை என்று உறுதி செய்து கொண்டேன். இயற்கையாகவே நான் கோழை அல்ல. கடந்துபோன என் சிறிதளவு வாழ்க்கையில் நல்லதும் கெட்டதுமான எத்தனையோ அநுபவங்கள் எனக்கு நேர்ந்திருக்கின்றன. சாதாரணமாக என் வயது இளைஞர்களுக்குக் கிடைக்க முடியாத வாழ்க்கையநுபவம் எனக்குக் கிட்டியிருந்தது. ஆனுல் அந்த அநுபவத்திலிருந்து இந்த அநுபவம் வேறுபட்டதாயிருந்ததால் நான் ஒரேயடியாக வெலவெலத்துப் போனேன். ஆனுல் அந்தக் குழப்பத்தின் எதிரிடை உணர்வாக இப்போது எல்லையற்ற துணிச்சல் என்னிடம் ஏற்பட்டுவிட்டது. காற்று வருவதற்காக வாயிலை விரியத் திறந்து வைத்துக் கொண்டு ஆயபூவைப் போலவே கவலையற்ற மனத்துடன் நானும் உறக்கத்தில் ஆழ்ந்து விட்டேன்.

## 5

பன்கர்வாடியில் பெரும்பான்மையான குடியிருப்பு ஆடு மேய்ப்பவர்களுடையதாயிருந்தது. கன்னங்கரேலென்ற நிறமுடைய இந்த இனத்தினர் எப்போதும் திறந்த உடம்புடன்தான் வளைய

வந்தார்கள். வெளியுலகத்தைப்பற்றி அவர்களுக்கு விசேஷமாக எதுவும் தெரியாது. தெரியவில்லை என்ற உணர்வுகூட அவர்களுக்கு இல்லை. அதிகாலையில் எழுந்து இரவெல்லாம் பட்டியில் அடைபட்டிருந்த ஆடுகளை ஒட்டிக்கொண்டு அவர்கள் கிராமத்தை விட்டுப் புறப்பட்டு விடுவார்கள். மூன்று மைல் தொலைவில் மேய்ச்சல் நிலம் இருந்தது. நூறு நூறு ஆடுகளுக்குப் பின்னால் ஒரு மேய்ப்பவனும் கூடவே ஒரு நாயும் செல்வது வழக்கம். கழுத்தை வளைத்து உறுமிய வாறு செல்லும் ஆடுகளின் மந்தை நிற்காமல் ஆடி அசைந்து கொண்டிருக்கும். பலவகையான புற்களின் விதைகள் அந்த ஆடுகளின் ரோமத்தில் ஒட்டிக்கொண்டு பல இடங்களுக்கும் பரவும். அங்கங்கே பரவலாக அவை விழுவதால் அடுத்த ஆண்டில் ஆடுகள் மேய்வதற்கு வசதியாக அவற்றிலிருந்து புதிய புல்தரை தோன்றும். தோளில் கம்பைப் பிடித்துக்கொண்டு மேய்ப்பவன் அந்த ஆடுகளின் பின்னாலேயே அலைவான். பொரியும் வெயிலில் பகற்பொழுதெல்லாம் நின்று கருகியவாறிருப்பான். அவனுடைய நாய்க்குக்கூடச் சலிப்புத் தோன்றிவிடும். துள்ளித்துள்ளிக் குதிக்கும் வெட்டுக்கிளியைத் துரத்துவதும், கரிய ஓணானைத் துரத்திக்கொண்டு பாய்வதும், அர்த்தமில்லாமல் குரைப்பதுமாக ஏதாவது செய்து அது தன்னுடைய அயர்வைப் போக்கிக்கொள்ளப் பாடுபடும். மேய்ப்பவனுடைய நிலையும் இதேமாதிரிதான். சற்றுத் துடியான ஆடு ஏதையாவது தேர்ந்தெடுத்து அதன் கழுத்தில் சதங்கையைக் கட்டுவான். சாப்பிட உட்கார்ந்தால் அதற்கும் சிறிது ஊட்டுவான். சோளப்பயிர் ஏதாவது தென்பட்டால் இரண்டோர் இளம் சோளக் கொண்டைகளைப் பறித்து அதற்குக் கொடுப்பான். இந்தச் சீராட்டலின் காரணமாக அந்த ஆடு நாய் மாதிரி அவன் பின்னோடேயே அலையும். இவ்வளவு தூரம் அதைப் பழக்கிய பிறகு தன் மனமகிழ்வுக்காக அதற்குப் பல வித்தைகள் கற்றுக் கொடுப்பான். கம்பைத் தாண்டுவதற்கும் அவனுடைய கட்டளைப்படி உட்காரவும் எழுந்து நிற்கவும் பழக்குவான்.

அவன் கையில் எப்பொழுதும் ஒரு கோடரி இருக்கும். அதைக் கொண்டு கருவமரத்து விறகை வெட்டி முட்களைச் செதுக்கிவிடுவான். வலை விரித்துவைத்துப் புறாவைப் பிடிப்பதும் அவனுடைய இன்னொரு பொழுதுபோக்காக இருந்து வந்தது. ஆடுகள் மேய்ந்துகொண்டிருக்கும்போது மேய்ப்பவர்களுக்கு இப்படி ஏதாவது செய்துகொண்டிருந்தால்தானே பொழுதுபோகும்!

ஆனால் இந்த மாதிரித் தனிமை வாய்ப்புகள் எப்போதாவது தான் நேரிடும். ஏனென்றால் சாதாரணமாக மூன்று நான்கு மேய்ப்பவர்கள் ஒன்றாகத்தான் தங்கள் மந்தைகளை மேய்ப்பது வழக்கம். நடுப்பகலானதும் ஒவ்வொருவராக முறை வைத்துக் கொண்டு கிணற்றில் குளித்துவிட்டு வருவார்கள். வெயில் ஏற ஏற ஆடுகளும் களைத்துப் போய்த் தண்ணீரை நோக்கிச் செல்ல ஆரம்பிக்கும். வறண்டுபோன கால்வாய்-ஓடைகளில் பச்சைப்பசே லென்று படர்ந்துள்ள பாசிக்கு அடியே இருக்கும் நீரைக் குடித்து விட்டுச் சோர்ந்துபோய் எங்காவது கிடைத்த நிழலில் நின்று கொள்ளும். மேய்ப்பவர்களும் ஏதாவது நிழலைத் தேடிப்போய் ஒன்றாக உட்கார்ந்து சப்பாத்தி சாப்பிடுவார்கள். சாப்பாடு முடிந்த தும் கண்காணிப்புக்காக ஓரிரு மேய்ப்பவர்கள் விழித்திருக்க, மற்ற வர்கள் கம்பளியைச் சுருட்டி மடித்துத் தலைக்கு உயரமாக வைத்துக் கொண்டு தலைப்பாகையின் நுனியினால் முகத்தை மூடியவாறு சிறு துயில் கொள்வார்கள். அவர்களுடைய நாய்கள் தண்ணென்று ஈரமான மணலில் புரண்டு மூச்சு இரைக்கப் படுத்திருக்கும்.

பகற்பொழுது இன்னும் எஞ்சியிருக்கும்போது மேய்ப்பவர்கள் ஆடுகளைக் கிராமத்தை நோக்கி மடக்கி ஓட்டுவார்கள். திரும்பி வரும்போது அந்தப் பரம்பு மேட்டில் தின்பதற்கு எது கிடைக் கிறதோ அதை வாயில் போட்டு மென்றவாறு வார்த்தையாடிக் கொண்டே அவர்கள் கிராமத்தை எட்டுவதற்குள் மாலைப்பொழுது ஆகியிருக்கும். கிராமத்தை நெருங்கியதும் ஒவ்வொரு மேய்ப் பவனும் தனித்தனியே நின்றுகொண்டு தன்தன் ஆடுகளைக் கூவி அழைத்துக்கொள்வான். மறுபடியும் ஒரு மந்தை மூன்று மந்தை களாகப் பிரியும்.

கணவன் ஆடு மேய்க்கப் போனபிறகு வீட்டிலிருந்துகொண்டு ராட்டினத்திலோ, தக்ளியிலோ கம்பளிநூலை நூற்றுக் கொண் டிருக்கும் பெண்கள் ஆடுகள் வருவதையறிந்ததும் பரபரவென்று எழுந்து விடுவார்கள். அடைத்துப் போட்டிருந்த சிறிய ஆட்டுக் குட்டிகளை அவிழ்த்து விட்டுவிட்டு அடுப்பில் நாலைந்து சுள்ளிகளைச் செருகி நெருப்பு மூட்டுவார்கள். எல்லோர் வீட்டிலும் நெருப்புப் பெட்டி இருக்காது. ஆகையால் பெண்கள் அகல் விளக்கை எடுத்துச் சென்று அண்டைவீட்டு அகலில் ஏற்றிக்கொண்டு எடுத்து வந்து அடுப்பை மூட்டிவிட்டுப் புதிதாகச் சப்பாத்தி செய்வார்கள்.

திரும்பி வந்த பிறகு மேய்ப்பவர்களுக்கு ஆடுகளையும் குட்டி களையும் சேர்த்துவைக்கும் வேலை ஒரு மணி, ஒன்றரை மணி நேரத்

துக்கு நீடிக்கும். வீட்டில் தங்கிவிட்ட குட்டிகளும் மேய்ச்சலிலிருந்து திரும்பிய தாய்ஆடுகளும் ஏகமாகக் கத்தி ரகளை செய்துவிடும். தாய்ஆடு குட்டியைத் தேடுவதும், சிறிய குட்டிகள் தாய்ஆட்டை அழைப்பதுமாக 'மே மே', 'பே பே' என்ற கத்தல் காதைத் துளைப்பதாயிருக்கும். பசித்திருக்கும் குட்டிகள் ஏதாவது ஆட்டின் மடியில் புகுந்து பாலூட்டுவதற்காக முட்ட ஆரம்பிக்கும். தாய்ஆடு அந்தப் புதிய ஸ்பரிசத்தைப் புரிந்துகொண்டு துள்ளி வேறு பக்க மாகப் போக முயற்சி செய்யும். அந்தப் படபடப்பில் சிறிய குட்டிகள் உருண்டு மல்லாக்க விழுந்து விடுவதுமுண்டு. குட்டிகளைத் தேடும் வெறியில் இருக்கும் தாய்ஆடுகள் கீழே விழுந்த குட்டிகளின் முகத்திலும் கண்ணிலும் மிதித்து உதைத்துக்கொண்டு முன்னேறும். கிராமம் முழுவதிலும் இதே குழப்பம் நிலவியிருக்கும். ஆயிரம் ஆயிரத்து இருநூறு ஆடுகள், இருநூறு முந்நூறு ஆட்டுக்குட்டிகள் இவற்றின் கத்தல் ஒலித்தவாறு இருக்கும். மேய்ப்பவர்களும் அவர்களின் மனைவியரும் சாதாரணப் பேச்சைக்கூடக் கூச்சலிட்டுத் தான் பேசும்படி இருக்கும். ஆடுகளின் கத்தலுடன் அந்தக் கூச்சலும் கலப்பதாகிவிடும். காற்று வேறு, இரைச்சலுடன் வீசிக் கொண்டிருக்கும். குருவிகள், காகங்களின் கத்தல் வேறு. ஆட்டுப் பிழுக்கைகளும் சிறுநீரும் கிளப்பும் துர்நாற்றம் மூக்கைத் துளைக்கும்.

ஆடுகளின் இந்த நெரிசலுக்குள் நுழைந்துதான் மேய்ப்பவன் தாயையும் கன்றையும் இணைத்துவைக்கும் பணியைச் செய்ய வேண்டியிருக்கும். இதோ, கங்காவோட குட்டி இதுதான்; இந்தப் பழுப்பு ஆட்டின் கறுப்புக் குட்டிகள் இதோ — இவ்வாறு ஒன்று சேர்த்துவிட வேண்டும். வழி தெரியாமல் திண்டாடும் ஆட்டுக்குட்டி களின் பின்னங்கால்களைப் பிடித்து இழுத்துச் சென்று அவற்றின் தாயுடன் கொண்டு சேர்த்து அதன் மடியோடு இணைத்துவிடுவான். இந்த வேலையிலேயே அரைமணிப் பொழுது கழிந்துவிடும். அதன் பிறகு இரைச்சல் அடங்கிப்போகும். பால் குடிக்கும் ஆட்டுக் குட்டிகளின் சப்புக்கொட்டல் தவிர வேறு சத்தம் இருக்காது. குட்டிகளின் புழுதி படிந்த உடலைத் தாய்ஆடுகள் நக்கிக் கொடுக் கும். வெண்மையான கெட்டிப் பாலினால் குட்டிகளின் வாயெல்லாம் நுரைத்துத் தோன்றும்.

சாவடி மேடையினருகே மேய்ப்பவர்கள் ஒருவரையொருவர் சந்திக்கும்போது இதைப்பற்றி விசாரித்துக் கொள்வார்கள்:

''தாயும் குட்டியும் சேர்ந்ததா?''
''ஆமாம். உன்னுடையது?''
''சேர்ந்தது.''

இதன் நடுவில் மேய்ப்பவனின் மனைவி நாலு சப்பாத்திகளைச் சுட்டு வைப்பாள். தொட்டுக்கொள்வதற்குப் பெரும்பயறும் சிறு பயறுமாகக் கலந்த குழம்பு சட்டியில் கொதித்துக் கொண்டிருக்கும். ஆடுகளை ஒருவழியாக ஒன்று சேர்த்துவிட்டு மேய்ப்பவன் வீட்டுக் குள் செல்வான். காலையிலிருந்து அவன் கையோடு இணைந்திருந்த கழிக்கு இப்போது விடுதலை கிடைக்கும். கை கழுவி, வாயைக் கொப்பளித்துவிட்டு அவன் குந்தினாற்போல் உட்கார்ந்துகொண்டு அந்த அறைகுறை வெளிச்சத்தில் சப்பாத்தி சாப்பிட ஆரம்பிப் பான். சோறு, சாப்பாடு என்ற வார்த்தைகளையே அவன் அறி யான். அவனுக்குத் தெரிந்தது சப்பாத்தி சாப்பிடுவதுதான்! சாப்பாடு என்று சொன்னால் அதில் வேறு இரண்டொரு பதார்த் தங்கள் சேர வேண்டுமே, அவை என்னவென்று இந்த மேய்ப்பவர் களுக்குத் தெரியாது. அதற்கு அவசியமும் கிடையாது. இரண்டு வேளை சப்பாத்தி சாப்பிடவேண்டும், அவ்வளவுதான். தொட்டுக் கொள்ளக் கொஞ்சம் போலக் கீரை அல்லது ஒரு வெங்காயம் அல்லது சிட்டிகையளவு துவையல் இல்லாவிட்டால் வெறும் உப்பு இருந்தாலே போதும். நாள் முழுவதும் கடும் உழைப்பு உழைத்து விட்டு இவர்கள் சாப்பிடுவது வெறும் சப்பாத்தி மட்டுமே.

பகல் முழுவதும் அலைந்து திரிந்த மேய்ப்பவனின் கை, கால் களில் அவன் சாப்பிட்ட ரொட்டியின் ஊட்டம் இறங்கிக் கலந்ததும் அவன் திருப்தியடைந்து விடுவான். கம்பளியை எடுத்துக்கொண்டு அவன் வீட்டுக்கு வெளியே செல்வான். கொஞ்ச நேரம் சாவடியில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்துவிட்டு மறுபடியும் பட்டிக்கு அருகே வந்து படுத்துக் கொள்வான். அவனுடைய நன்றியுள்ள நாய் உடலைச் சுருட்டி முடக்கிக் கொண்டு அவன் காலினருகே உட் கார்ந்து கொள்ளும். பட்டியில் ஆடுகள் தூங்கிக் கொண்டிருக்கும். வீட்டில் மேய்ப்பவனின் மனைவி கைக்குழந்தையை அணைத்துக் கொண்டு தூங்குவாள். மேய்ப்பவனோ, பட்டியின் வாயிலருகே தலைப் பக்கம் கைக்கெட்டினாற்போல் கோடரியை வைத்துக் கொண்டு உறங்குவான். மற்றவர்களெல்லாம் அயர்ந்து தூங்கிக் கொண்டிருப்பார்கள். ஆனால் மேய்ப்பவன் அவனுடைய நாயோடு எச்சரிக்கையாக இருப்பான்.

அதிகாலையில் ஆடுகள் கண் விழித்து மேய்ச்சலுக்குப் போகத் துடித்தவாறு பிழுக்கைகளைப் போடுவதும் சிறுநீர் கழிப்பதுமாக இருக்கும். அந்தக் கருக்கலிலேயே மேய்ப்பவனும் விழித்துக் கொள் வான். பட்டியில் ஆடுகளின் கத்தல் தொடர்ந்து ஒலிக்கும். ஆட்டுக் குட்டிகளை அவிழ்த்துவிட்டதுமே அவை மறுபடியும் தாய்ஆடுகளின் மடியில் புகுந்துகொண்டு முட்டிப் பால் குடிக்க ஆரம்பிக்கும். காலைப் பொழுதின் குளிர்ந்த காற்றை நுகர்ந்தவாறு ஆடுகள் அமைதியாக நின்று குட்டிகளுக்குப் பால் ஊட்டும். பட்டி முழுவதும் குவியல் குவியலாகப் பிழுக்கை சேர்ந்து போகும். சிறுநீர் குட்டம் குட்டமா கத் தேங்கி நிற்கும். கையில் துடைப்பத்தை எடுத்துக் கொண்டு மேய்ப்பவன் பட்டி நெடுகிலும் பெருக்கிச் சுத்தம் செய்வான். அந்த விலைபெறுமான உரத்தைக் கூடை கூடையாகச் சுமந்து சென்று ஒரு பக்கம் நிலையாக அமைந்துவிட்ட குவியலில் கொட்டுவான். தானி யக் குவியல்கள் போலக் குவிந்திருக்கும் பிழுக்கைக் குவியல்களை அக்கம் பக்கத்திலுள்ள விவசாயிகள் ஒவ்வோர் ஆண்டு முடிவிலும் வந்து விலை கொடுத்து வாங்கிச் செல்வார்கள்; எனவே மேய்ப்பவன் இது விஷயத்தில் மிகுந்த கவனமாக இருப்பான். இந்த வேலையெல் லாம் முடிவதற்குள் குட்டிகள் வயிறு நிரம்பப் பால் குடித்து முடித் திருக்கும். துள்ளிக் குதித்துக் கொண்டு, சிறிய குட்டையான வால்களை ஆட்டிக்கொண்டு கம்பளிப் பந்துகள் போன்ற அந்த ஆட்டுக் குட்டிகள் இங்குமங்கும் தாவி உருளும். அவற்றையெல் லாம் வளைத்து மடக்கி அடைத்துப் போடுவான் மேய்ப்பவன். பின்பு அவன் மனைவி வாட்டி வைத்திருக்கும் சூடான ரொட்டியை ஆட்டுப் பாலில் ஊறவைத்துக் காலையுணவை முடித்துக் கொள்வான். பகலுணவுக்காக நாலைந்து ரொட்டிகளும் மிளகாய்த்தூளும் முடிந்து வைத்துக் கொள்வான். பிறகு தன் கம்பளியையும் கழியையும் எடுத் துக்கொண்டு ஆடுகளை உசுப்பிவிடுவான். மேய்ச்சலுக்குச் செல்லும் துடிப்பில் இருக்கும் ஆடுகள், உரக்கக் கத்தியவாறு, பட்டியில் அடைபட்டிருக்கும் குட்டிகளிடம் விடை பெற்றுக்கொண்டு புறப் படும். பட்டிக்கு உள்ளேயே ஆட்டுக்குட்டிகளின் கூச்சலும் கும்மாள மும் நடந்து கொண்டிருக்கும். தாய்ஆடுகள் அடிக்கொருதரம் திரும்பிப் பார்த்துக் கொண்டே அங்கிருந்து புறப்படும்.

காலை இளவெயில் கடுமையாவதற்கு முன்பே ஆட்டுப் பட்டிகள் காலியாகிவிடும். தொலைவிலுள்ள வயல்களினூடே மிதித்துத் துகைத்தவாறு மேய்ப்பவர்கள் ஆடுகளை ஓட்டிச் செல்வார்கள்.

இந்த ஆடுகள் புறப்பட்டுச் சென்றதும் கிராமத்தின் கலகலப்பே மறைந்து விட்டதுபோல் தோன்றும். குடியானவர்கள் தங்கள் கால் நடைகளை ஓட்டிக் கொண்டு வயற்காட்டுக்குச் சென்று விடுவார்கள். சிறு பிள்ளைகள் வெள்ளாடுகளை மேய்க்கக் கிளம்பி விடுவார்கள். பெண்கள் கைக்குழந்தைகளை இடுப்பில் வைத்துக் கொண்டோ கூடையில் போட்டு எடுத்துக் கொண்டோ, வயல் வேலைக்குப் புறப் பட்டுச் செல்வார்கள். அவர்கள் பின்னோடு வளர்ப்பு நாய்களும் சென்றுவிடும். உச்சிப் பொழுது ஆவதற்குள் அந்தக் கிராமத்தில் ராட்டினத்தில் கம்பளி நூற்கும் ஸ்திரீகளைத் தவிர வேறு யாரும் கண்ணுக்குத் தென்படமாட்டார்கள்.

# 6

சில நாட்களாகப் பத்துப்பதினைந்து பிள்ளைகள் ஒழுங்காகப் பள்ளிக்கூடத்துக்கு வந்து கொண்டிருந்தார்கள். தினசரி வேலைக் குப்போக முடியாத பிள்ளைகள், வெள்ளாடுகளை மேய்க்க இயலாத பிள்ளைகள் — இம்மாதிரிப் பிள்ளைகள்தாம் பள்ளிக்கூடத்துக்கு வந்து உட்கார்ந்து கொள்வார்கள். நான் அவர்களுக்கு 'அ ஆ' 'க ங' எழுத்துக்கள் மேலேயே எழுதுவதற்குக் கொடுப்பேன்.

பொழுது விடிந்து ஆடுகள் பட்டியிலிருந்து கிளம்பியதுமே பிறந்த மேனியில் பிள்ளைகள் பாடசாலையில் வந்து கூடுவார்கள். முகத்தைக் கழுவிக் கொள்ளாமல், கண்களைத் துடைத்துக்கொள்ளா மல், உடம்பில் மட்டும் சட்டையும் தலையில் சிவப்பு தலைப்பாகையும் அணிந்துகொண்டு பள்ளிக்கூடத்தில் சாணத்தால் மெழுகிய தரையில் வந்து உட்கார்ந்து ஒருவரோடொருவர் சண்டை போட்டுக் கொண்டிருப்பார்கள். பலகைகளில் பலப்பங்களால் கரகர வென்று எழுதும் ஒலி கேட்க ஆரம்பிக்கும். எச்சிலைத் துப்பிப் பலகையைத் துடைக்கும் வேலையும் நடக்கும். அடிக்கொருதரம் யாராவதொரு பையன் ஒற்றை விரலைக் காட்டிவிட்டு வெளியே செல்வான். பள்ளிக்கூடத்தில் பின்பக்கத்துச் சுவரின் கற்கள்மீது சில பிள்ளைகள் பலப்பத்தைக் கூராக்குவதற்காக உரசிக் கொள் வார்கள். இவ்விதம் உரசி உரசி அந்தச் சுவரில் நிறையக் கற்கள் திருநீறு பூசிக் கொண்டதுபோல் காட்சியளிக்கும். பலப்பங்

கள் சீக்கிரமே தீர்ந்துபோகின்றன என்று பிள்ளைகளின் பெற்ருேர் என்னிடம் புகார் செய்வார்கள். வரும்போது முகத்தைக் கழுவிக் கொண்டு வரவேண்டும், பலகையைத் துடைப்பதற்கு ஈரத்துணி எடுத்து வரவேண்டும் என்றெல்லாம் எவ்வளவோ முறை சொல்லியும் பயன் ஏற்படவில்லை. முகத்தைக் கழுவிக்கொண்டு வரச் சொல்லி அனுப்பினுல் அந்தப் பையன் அநேகமாகத் திரும்பி வரமாட்டான். ஈரத்துணி சிறிது நேரத்துக்குள்ளேயே காய்ந்து போய்விடும். மீண்டும் எச்சில் துப்பி அழிக்கும் எளிதான முறையை ஆரம்பித்து விடுவார்கள் பிள்ளைகள்.

பள்ளிக்கூடக் கட்டிடத்தில் கொசுக்களுக்குக் கணக்கே கிடையாது. எனவே எந்தப் பையனுக்காவது கண்வலி வந்துவிடும். அவனேடு சேர்வதால் மற்றவருக்குத் தொற்றிக் கொள்ளும். கண் வலி தாங்காமல் பிள்ளைகள் அழுது துடிப்பார்கள். அவர்களுடைய தாய்மார்கள் அதைச் சரிப்படுத்துவதற்காகப் பஞ்சுச் சுருளைப் பாலில் நனைத்துக் குழந்தைகள் தூங்கும்போது அவர்களுடைய கண்களின் மீது பதியவைப்பார்கள். மாவலி அம்மனுக்கு வேண்டுதல் செய்துகொள்வார்கள்.

காலையில் சீக்கிரமே ஆரம்பமாகும் பள்ளி பத்தரை பதினெரு மணி வரையில் நடக்கும். கத்திக் கூச்சலிட்டவாறு பிள்ளைகள் ஓட்ட ஓட்டமாக வீடுகளுக்கு விரைவார்கள். மீண்டும் மூன்று மணிக்கு ஆரம்பமாகும் பள்ளி ஆறுமணிக்கு முடிவடையும். பிள்ளைகள் கைதிக் கூண்டில் அடைபட்டதுபோல் வாடிப்போவார்கள். இருந்தாலும் மாலையில் பாடசாலையின் எதிரே ‘சடுகுடு’ விளையாடக் கூட்டம் சேர்ந்துவிடும். நிலா இரவுகளில் இந்த விளையாட்டு நெடு நேரம் நடந்து கொண்டிருக்கும். காட்டிலிருந்து திரும்பிய இளைஞர்களும் அதில் பங்கு கொள்வார்கள். அவ்வப்போது என்னையும் விளையாட்டில் சேர்த்துக் கொள்வார்கள். அரிசி மாவு போன்ற வெண்ணிலவில் ‘சடுகுடு’ விளையாட்டு மும்முரமாக நடக்கும். பெரியவர்கள் அநுமார் கோயில் திண்ணையிலும் வேப்பமர மேடையிலும் உட்கார்ந்து வேடிக்கை பார்ப்பார்கள். சில சமயம் சில துடியான இளைஞர்கள் சிலம்ப விளையாட்டில் இறங்குவார்கள். ஒரு மணி, இரண்டு மணி நேரம் சிலம்பங்கள் ஒன்ருேடொன்று மோதி ஒலித்துக் கொண்டிருக்கும். மைதானத்தில் இரண்டு மூன்று கல் குண்டுகளும் உருளைகளும் கிடந்தன. வாலிப முறுக்குடைய இளைஞர்கள் இவற்றைக்கொண்டு தமக்குள் பலப்பரீட்சை நடத்துவார்கள்.

ஒரே கையால் கல் உருளேயைத் தலேக்கு மேலே யாரால் தூக்க முடியும் என்று போட்டி வைப்பார்கள். தலேப்பாகையைக் கையில் சுற்றிக்கொண்டு இளேஞர்கள் உருளேயைத் தலேக்கு மேலே தூக்கிக் கீழே எறிவார்கள். பூமி அதிரும். பெரிய பெரிய மழமழப்பான கல் குண்டுகளே இரு கைகளாலும் தூக்கி நெஞ்சுயரத்துக்குக் கொண்டு சென்று பின்பு தரையில் வீசி எறிவார்கள்.

கிராமத்திலிருந்து அரை மைல் தொலேவில் அமைந்திருந்த குடியிருப்பில் வாழும் பிரா என்ற பெயருள்ள மேய்ப்பவனின் பிள்ளேயான சதா பள்ளிக்கூடத்துக்கு வர ஆரம்பித்திருந்தான். முன்பிருந்த ஆசிரியர் நாலெழுத்து முறையாகக் கற்றுக் கொடுத்திருந்தாராகையால் ஐந்தாறு பிள்ளேகள் சற்று முன்னேறிக் கொண்டிருந்தார்கள். அவர்களில் சதா முதன்மையாயிருந்தான். பன்னிரண்டு பதின்மூன்று வயதான இந்தச் சிறுவன் நன்ருக உயரமும் தாட்டியுமாய் வளர்ந்திருந்தான். மற்றப் பிள்ளேகளிடம் காணப்படாத புத்திக்கூர்மை அவனிடம் இருந்தது. படிப்பில் ஈடுபாடு இருந்தது. பள்ளிக்கூடம் விட்டபிறகுங்கூட அவன் திண்ணேயில் உட்கார்ந்து பாடத்தை உருப்போட்டுக் கொண்டிருப்பான். இல்லாவிட்டால் என் அறைக்கு வந்து கணக்குப் போடுவதில் உள்ள சந்தேகத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்வான். படிப்பில் அவனுக்கு இருந்த இந்த ஆர்வத்தைப் பார்த்து நான் ஒரு முறை அவனிடம், ''எதுவரை பள்ளிக்கூடத்தில் படிப்பதாக எண்ணியிருக்கிருய், சதா?'' என்று கேட்டேன்.

''ஏழாவது பாஸ் செய்யவேண்டும்'' என்ருன் சதா.

''தலேமைப் பள்ளிக்குச் செல்லவேண்டியிருக்குமே!''

''செல்வேன்.''

''அப்பா படிக்கச் சொல்கிருரா?''

''அவரைக் கேட்டால்தானே?''

எழுதப் படிக்கக் கற்றுக்கொண்டால் பிள்ளேகளின் கவனம் விவசாயத்திலிருந்து விலகிச் சென்றுவிடுகிறது, சலவைத்துணி உடுத்துக்கொண்டு வெட்டியாகத் திரிவதைத்தான் விரும்புகிருர்கள். இவ்வாறு கருத்துக்கொண்ட பிரா தன் பிள்ளேயைப் படிக்க விடுவாரு என்பதைப்பற்றி எனக்குச் சந்தேகமிருந்தாலும் நான் சதாவிடம் விசேஷ கவனம் செலுத்தி வந்தேன். இந்தப் பள்ளியிலிருந்து இரண்டு மூன்று புத்திசாலி மாணுக்கர்களேத் தயார் செய்து வெளியே அனுப்ப முடிந்தாலே எனக்குப் போதுமானதாயிருந்தது.

இவ்வாறு செல்லக்கூடிய பையன் இப்போதைக்குச் சதா ஒருவன் தான். இயற்கையாகவே அவன் என் அபிமான மாணுக்கன் ஆகிவிட்டான்.

இந்தப் பத்துப் பன்னிரண்டு பிள்ளைகளைத் தவிர, தினமும் பள்ளிக்கூடத்தில் வந்து உட்காருபவர்கள் இன்னும் மூவர் இருந்த னர்—கசாப்பு ஆயபூ, ஆனந்தா ராமோஷி, ஆட்டுக்கார ராமா.

இந்த மூவரும் பெரும்பாலும் பகலில் கொஞ்ச நேரத்துக்கா வது பள்ளிக்கூடத்துக்கு வந்து சுவரில் சாய்ந்துக்கொண்டு சும்மா உட்கார்த்திருப்பார்கள். ஒன்றும் பேசுவதில்லை ; எதுவும் செய்வ தில்லை ; ஆனல் வருவது மட்டும் தவருது. பிள்ளைகளின் முகத்தைப் பார்ப்பதும் என் முகத்தைப் பார்ப்பதுமாக நிம்மதியுடன் உட்கார்ந் திருப்பார்கள். அவர்களால் எனக்கு எந்த விதமான தொந்தரவும் இருக்காது. ஆனல் வெட்டியாக இவர்கள் இங்கே வந்து ஏன் பொழுதைப் போக்குகிருர்கள் என்று அறியவேண்டும் என்ற ஆவல் இருக்கத்தான் இருந்தது. அவர்களுடைய நோக்கமே வெட்டி யாகப் பொழுதைப் போக்குவதுதான் என்ற விஷயம் பின்புதான் எனக்குத் தெரிந்தது.

அழுக்கு உடம்பும், அழுக்குத் துணியுமாக இருந்த ஆயபூ வேலையில்லாமல்தான் இருந்தான். வேலை செய்யவேண்டிய தேவையே அவனுக்கு இருக்கவில்லை. காரணம் என்னவென்ருல் ஒரு மனிதன் வேலைசெய்வது வயிற்றுப் பாட்டுக்காகத்தானே! ஆயபூ விஷயத்தில் இந்தப் பிரச்னை எளிதாகவே தீர்ந்துபோயிருந்தது. அவன் கசாப்புக்கார இனத்தைச் சேர்ந்தவன் என்ற உண்மை தெரிந்தவுடன் கிராமத்து மக்கள் மிக்க மகிழ்ச்சியுடன் அவனைக் கிராமத்தில் நிறுத்தி வைத்துக்கொண்டு விட்டனர். ஏனென்ருல் சந்தர்ப்பம் வரும்போது ஆடு வெட்டுவதற்குத் தொலைவிலிருந்து கசாப்புக்காரனைத் தருவிக்கும்படி இருந்தது. காலதாமதம் நேர்ந்து வந்தது. இப்போது சிரமப்படாமலே சௌகரியமாக ஆள் கிடைத்துவிட்டான் அல்லவா? இந்த அளவுக்கு ஒண்ட இடம் கிடைத்ததும் ஆயபூ சாப்பாட்டுப் பிரச்னையைத் தானே தீர்த்துக் கொண்டுவிட்டான். உச்சிப் பொழுதானதும் அவன் நாலைந்து வீடுகள் சுற்றி, சுடச்சுட ரொட்டியும் வெஞ்சனமும் தண்டிக் கொண்டு வந்து விடுவான். எங்கேயாவது உட்கார்ந்து அதைச் சாப்பிட்டுத் திருப்தியாக ஏப்பம் விடுவான். வாழ்க்கைத் தொல்லையனைத்தையும் அவன் ஒரு வழியாக ஒழித்து விட்டிருந்

தான். ஆயபூவின் தேவைகள் அதிகம் இல்லை. அவனுக்கு நாலைந்து ரொட்டி வழங்குவது கிராமத்தாருக்குச் சுமையாகவும் இல்லை. படுத்துக்கொள்ளும் இடத்தைப் பற்றியும் அவனுக்குக் கவலை இல்லை. சாவடி இருந்தது; மைதானம் இருந்தது; என்னுடைய அறை இருந்தது. போர்வையோ விரிப்போ அவனுக்கு எப்போதுமே தேவையாக இருந்ததில்லை. கேட்பாரற்ற நாய்கள், காட்டு விலங்குகள் எவ்வாறு தூங்குமோ அவ்வாறே அவன் கிடைத்த இடத்தில் கவலையில்லாமல் தூங்கிவிடுவான். பச்சைத் தண்ணீரின் சில்லிப்புக்கும் அவன் தன் உடம்பைக் கடுமையாக்கிக் கொண்டிருந்தான்.

முப்பத்தைந்து நாற்பது வயதான ஆனந்தா ராமோஷியும் வேலையில்லாமல் வெட்டியாகத்தான் இருந்தான். உருவத்தில் குட்டையான அவனது உடல் உலர்ந்தாற்போல் இருந்தது. முகத்தில் ரோமங்கள் எப்போதும் குத்திட்டவாறிருந்தன. தலை முடியை வளர்த்துவிட்டு, காந்திக்குல்லாய் அணிந்திருந்தான். உடம்பில் வெறும் கோட்டும் இடுப்பில் அரை நிஜாருமாக இதே கோலத்தில்தான் அவன் எப்போதும் காட்சியளிப்பான். கிராமத்தில் ராமோஷி வர்க்கத்தினரின் நாலைந்து வீடுகள் இருந்தன. அவர்களில் இவனும் ஒருவன். இந்த ராமோஷிகள் அனைவருமே எந்த விதத்திலும் உடலை வருத்தி உழைப்பது கிடையாது. அப்படி இருந்தும் அவர்களுடைய வயிற்றுப்பாடு எப்படியோ கழிந்து கொண்டுதான் இருந்தது.

சாப்பாட்டுக் கவலை தோன்றினால் ஆனந்தா ஒரு கம்பளியைத் தோளில் போட்டுக்கொண்டு பிற்பகலில் கிராமத்திலிருந்து வெளியே புறப்படுவான். கிராமத்துக்கு அக்கம்பக்கத்தில் மூன்று நான்கு மைல் தொலைவில் வேறு கிராமங்களைச் சேர்ந்த வயல்கள் இருந்தன. அந்த வயல் வரப்புகள் வழியே அவன் சுற்றிக் கொண்டிருப்பான். வயலுக்குச் சொந்தக்காரன் எதிர்ப்பட்டால், ''எவ்வளவு தூரம், ஆனந்தா?'' என்று கேட்பான்.

''ராமாலிங்கா டேயின் வயல் வரைக்கும்'' என்று கூறுவான் ஆனந்தா.

ராமாலிங்கா டே கேட்பான்: ''ஏண்டா, வெட்டிப்பயலே, எங்கே புறப்பட்டாய்?''

ஆனந்தா பணிவுடன் வணக்கம் கூறிவிட்டு, ''துகா காரண் டேயின் தோப்பு வரை போகவேண்டி யிருக்கிறது'' என்பான்.

துகா காரண் டே, ''என்ன ஆனந்தா, எங்கே போய்விட்டு வருகிருய்?'' என்று கேட்டால், ''இப்படியே போன்ஸ்லே ஐயாவின் வீட்டுக்குப் போய் வருகிறேன்'' என்று கையை விரித்தவாறு கூறிவிட்டுச் செல்வான்.

இவ்விதம் சுற்றியலேத்து, வெங்காயம் எங்கே இருக்கிறது, கத்தரிக்காய் எங்கே இருக்கிறது, சோளம், கம்பு எங்கே கிடைக்கும் என்பதையெல்லாம் அறிந்துகொண்டு விடுவான். இரவு நேரத்தில், வயல் வேலே செய்யும் விவசாயிகள் வீட்டுக்குத் திரும்பியதும், கண் காணிப்பவர்கள் தூங்கிப்போனதும், இந்த வயலிலிருந்து நாலு சோளக் கொண்டைகள், அந்த வயலிலிருந்து ஐந்தாறு கம்பங் கொண்டைகள், இங்கிருந்து ஒரு குத்து மிளகாய், அங்கிருந்து இரண்டு கத்தரிக்காய்—இப்படியாகக் கம்பளிப் பையை நிறைத்துக் கொண்டு நடுச் சாமத்தில் கிராமத்துக்குத் திரும்புவான். பொழுது விடிவதற்குள் சோளக்கதிர், கம்பங்கதிர்களிலிருந்து தானியங்களே எடுத்துக் கொடுத்துவிடுவான். அவன் மனேவி அவற்றை அரைத்து மாவாக்கிவிடுவாள். கத்தரிக்காயும் வெந்துவிட்டிருக்கும். இவ்வளவு பெரிய வயலிலிருந்து நான்கைந்து கதிர்கள் காணுமற்போய் விட்டன என்ற எண்ணமே சொந்தக்காரனுக்குத் தோன்ருது. பறவைகள் தின்றுவிட்டனவா, விலங்குகள் கடித்துப் போட்டு விட்டனவா என்று புரியாது. ஆனந்தாபேரில் யாருக்கும் சந்தேகம் தோன்ருது. வருஷக்கணக்காக இதுதான் ஆனந்தாவின் தொழி லாய் இருந்து வந்தது. அந்த ஆள் சிறு திருட்டையே ஜீவனேபாய மாகக் கொண்டு அதற்கான செயல் முறைகளே வகுத்துக் கொண் டிருந்தான். பிறவிக்கலே ஆனதால் அவனுடைய தொழில் நல்ல படியாக நடந்து கொண்டிருந்தது. அநேக தடவை, பத்துப் பதினேந்து நாட்கள் கழித்து அவன் சொந்தக்காரரிடமே சென்று தான் செய்த சிறு சிறு திருட்டுக்களே ஒப்புக்கொண்டு விடுவதும் உண்டு. தானே சென்று கேட்பான்: ''சொல்லுங்களய்யா, உங்கள் தலேமறைவில் உங்கள் வயலிலிருந்து யாராவது கத்தரிக்காய் பறித்துச் சென்றது உண்டா, கடந்த பத்துப் பதினேந்து நாட் களில்?''

''ஆமாம் ஆனத்தா. எந்தத் திருட்டுப் பயலுக்கு இந்த வழக்கம் ஏற்பட்டதோ தெரியவில்லே. பை நிறையக் கத்தரிக்காய் பறித்துக்கொண்டு போயிருக்கிருன், என் தோட்டத்திலிருந்து!''

''அப்படியா! நான்தான் அந்தத் திருட்டைச் செய்தேன்.''

''அட பாவி! வெட்கமில்லாமல் அதைச் சொல்லிக்கொள்ள வந்துவிட்டாயே!''

''திருட்டை ஒப்புக்கொண்டால் திருடன் என்ற களங்கம் நீங்கிப்போகும், எஜமானே! கொடுங்களய்யா என்று கேட்டால் யாரும் கொடுப்பதில்லை. நான் என்ன செய்யட்டும்? புழுபூச்சிகள், குருவிகள், கிளிகள் எவ்வளவோ தானியத்தைச் சாப்பிட்டு விட வில்லையா? கேட்டுக்கொண்டா சாப்பிடுகின்றன? அவற்றை ஒன்றும் செய்வதில்லையே நீங்கள்! அதேபோல் என்னையும் ஒன்றும் செய்யாதீர்கள். ஏதோ பறவை சாப்பிட்டுவிட்டது என்று நினைத்து அதை மறந்துவிடுங்கள்.''

ஆனந்தாவின் இந்தச் சுபாவம் எல்லோருக்கும் தெரிந்து விட்டிருந்தது.

எப்போதாவது ஓய்வான நேரத்தில் அவன் இரண்டு கூட்டாளி களைச் சேர்த்துக்கொண்டு காட்டுக்குப் போய் ஒன்றிரண்டு முயல் அல்லது உடும்பு இவற்றைக் கொன்று எடுத்து வருவான். மிகவும் நாக்குச் செத்துப்போய்விட்டால் வேறு கிராமத்திலிருந்து ஏதாவது ஆட்டைத் திருடிக்கொண்டு வந்துவிடுவான். அதை வெட்டுவது, சமைப்பது, சாப்பிடுவது எல்லாமே வெளியிலே ஏதாவது ஒரு காட்டில் செய்து முடிக்கப்படும். ஆனந்தாவின் உறவினர்களும் இவ்விதமே பிழைப்பு நடத்தி வந்தனர். ஆனந்தாவின் பிழைப்பும் அப்படித்தான். ஆடிக்கொருதரம், ஆவணிக்கொருதரம் வயற்காட்டு வேலை கிடைத்தால் உண்டு. மற்றப்படி வருஷக் கணக்காக இந்தத் தொழிலைத்தான் அவர்கள் செய்துவந்தார்கள்.

மேய்ப்பவர் இனத்தவனான ராமா உண்மையிலேயே நல்ல நிலைமையில் உள்ளவன், பிள்ளைகுட்டிக்காரன். வயது முப்பது முப்பத்தைந்து இருக்கலாம் உதட்டுக்கு மேலே கைப்பருமனுக்கு மீசை, கனமான தாடை, இவற்றின் காரணமாக அவன் பெரிய கில்லாடி மாதிரித் தோற்றமளிப்பான். அவனுடைய வீட்டில் நூறு ஆடுகள் இருந்தன. ஆனால் அவற்றைக் கவனித்துக்கொள்ளும் வேலையை அவனுடைய அப்பனும் பிள்ளையுமாகச் செய்து வந்தார் கள். ராமாவுக்கு ஒரு வேலையும் கிடையாது. வேலை கிடையாது என்று கூறுவதைவிட, அவன் செய்வதில்லை என்று கூறுவதுதான் பொருந்தும். அவனும் பள்ளிக்கூடத்துக்கு வந்து வெட்டியாக உட்கார்ந்திருப்பது வழக்கம்.

அநேக நாட்களாக இவன் இவ்விதம் ஒன்றும் பேசாமல் உட்கார்ந்திருந்தான். பள்ளிக்கூடம் விட்டதும் அவன் கம்பளியை மடித்துத் தோளில் போட்டுக்கொண்டு வீட்டை நோக்கிப் புறப் பட்டுவிடுவான். ஆரம்பத்தில் நான் அவனிடம் கேட்டதுண்டு: "ஏதாவது வேலை இருக்கிறதா? ஏன் வந்தீர்கள்?" ஆனால் இதற்கு அவன், "ஒன்றுமில்லை. சும்மாத்தான் வந்தேன்" என்று தனது கரகரப்பான குரலில் பதிலிறுத்தான்.

இவ்விதம் பல நாட்கள் உட்கார்ந்த பிறகு ஒருநாள் அவன் தனிமையில் என்னிடம் கூறினன்: "வாத்தியாரே, உன்னிடம் எனக்கு ஒரு வேலை இருக்கிறது."

பள்ளிக்கூடம் விட்டாயிற்று. ஆனந்தா, ஆயபூ இருவரும் புறப்பட்டுப் போயிருந்தனர். நானும் ராமாவும் மட்டுந்தான் பள்ளிக்கூடத்தில் இருந்தோம். எப்போதுமே பேசாத அந்த மனிதன் இப்போது பேசினன் என்பதே எனக்கு வியப்பை அளித்தது.

என்றல் இவனுக்கு என்ன வேலை ஆகவேண்டியிருக்கும் என்று ஊகிக்க முடியவில்லை : "சொல்லுங்கள், என்ன விஷயம்?"

ராமா உடனே பேசிவிடவில்லை. தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு சிறிது நேரம் மௌனமாயிருந்தான். சொல்லலாமா, வேண்டாமா என்று மனத்துக்குள்ளேயே குழம்பிக் கொண்டி ருந்தான் போலும்!

அவனுடைய தயக்கத்தைப் போக்குவதற்காக நான் மறுபடியும் கேட்டேன்: "என்ன சமாசாரம், ராமாஜி?"

மீண்டும் இங்குமங்கும் பார்த்துக் கொண்டிருந்த பிறகு ராமா கூறினன்: "என்னிடம் கொண்டை ரூபாய் ஒன்று இருக்கிறது."

'கொண்டை ரூபாய்' என்றல் ராணித் தலையுள்ள ரூபாய் நாணயம். பார்ப்பதற்கு ராணி கூந்தலைக் கொண்டை போட்டுக் கொண்டிருப்பது போலத் தோன்றும். அரசாங்க உத்தரவுப்படி அது செல்லாத நாணயம் ஆகியிருந்தது.

"அதற்கென்ன?"

"அந்த நாணயம் இப்போது செல்லாதாம். ஏழை எனக்கு வெட்டியாக நஷ்டம் ஏற்பட்டு விட்டது."

"ஆமாம், அதற்குச் செலாவணி கிடையாதுதான். கடைத் தெருவில் அது செல்லாது."

''நீ தாலுகா ஆபீசுக்குப் போய் வந்துகொண்டிருக்கிறாய். உன்னுடைய சிபாரிசினால் அது செல்லுபடி ஆகிவிடாதா பாரேன். தயவு பண்ணு.''

செல்லுமா செல்லாதா என்று எனக்குத் தெரியாது. இம்மாதிரி தேவை நேர்ந்ததில்லை. முயன்று பார்க்கலாமென்று தோன்றியது. எனவே, ''என்னிடம் கொடுங்கள். மாற்ற முடியுமா என்று பார்க்கிறேன்'' என்றேன்.

ராமா 'சரி' என்று சொல்லிவிட்டு எழுந்து சென்றான். ராத்திரி என் வீட்டுக்கு வந்து அவன் அந்த ரூபாய் நாணயத்தை என்னிடம் கொடுத்தான். ஏதோ வைரம்-வைடூரியத்தை வாரிக் கொடுப்பது போல் அவ்வளவு சர்வ ஜாக்கிரதையாகக் கொடுத்தான். கொடுக்கும்போது அவன் நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டிருந்தது என்பதை நான் உணர்ந்தேன். 'மாஸ்டர் இந்த ரூபாயைச் சாப்பிட்டு விடுவாரோ!'

# 7

சனிக்கிழமை காலை பள்ளிக்கூடம் முடிந்த பிறகு நான் விபூதிவாடிக்குச் சென்றேன். ஒன்றரை நாட்கள் வீட்டில் கழித்து விட்டு மீண்டும் பள்ளிக்கூடத்துக்குத் திரும்பி வந்தேன். ராமா கொடுத்திருந்த ரூபாய் நாணயத்தின் நினைவு வந்தது எனக்கு. நான் அதை மாற்றிக்கொண்டு வந்தேன். ஆனால் மூன்று நான்கு நாட்களாக ராமா பள்ளிக்கூடத்துக்கு வரவே இல்லை. விசாரித்த போது, ராமாவின் ஓர் ஆடு காணாமற் போய்விட்டதென்றும், அதைத் தேடிக்கொண்டு அவன் வேறு ஏதோ கிராமத்துக்குப் போயிருக்கிறானென்றும் தெரியவந்தது.

பிறகு ஒருநாள் அவன் பள்ளிக்கு வந்தபோது நான் என் பையிலிருந்து சில்லறையை எடுத்து அவனிடம் கொடுத்தேன்.

'' உங்கள் ரூபாய் மாறிவிட்டது. இதோ சில்லறை.''

நான் படிப்பதில் மீண்டும் ஈடுபட்டுவிட்டேன். சில்லறையை வேஷ்டி நுனியில் முடிந்துகொண்டு ராமா எப்பொழுது வெளியே சென்றான் என்று நான் கவனிக்கவில்லை.

இரவுச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு நான் ஓய்வாக உட்கார்ந்திருந்த பொழுது அவன் என்னிடம் வந்தான். என்றுமே என் வீடு தேடி வராதவன் இன்று வந்து, தரையில் உட்கார்ந்து கொண்டான்.

'' ஏன் ராமாஜி, ஆடு கிடைத்துவிட்டதா ?''

''கிடைத்துவிட்டது. இங்கேயேதான், பக்கத்துக் கிராமத்தில்.''

'' அப்படியானால் நான்கு நாட்களாக உங்களைக் காணோமே ! ஏன் ? ''

'' மேட்கர் வாடியில் என்னுடைய தங்கை புருஷனைப் பார்த்து வரப் போயிருந்தேன்.''

நான் மேலே படிக்க ஆரம்பித்தேன். சற்று நேரம் ராமா வெறுமே உட்கார்ந்திருந்தான். கடைசியில் அவன் பேசினான்: '' மாஸ்டர், என்னுடைய ரூபாய்க்குச் சில்லறை எப்படிக் கொண்டு வந்தாய் ?''

''ஒரு மார்வாடியிடமிருந்து வாங்கி வந்தேன். எனக்குப் பழக்க மானவர் அவர்.''

''அதைக் கேட்கவில்லை. எப்படி என்று நான் கேட்டது, வேஷ்டியில் முடிந்தா, அல்லது சட்டைப் பையில் போட்டா, வேறு எப்படி...?''

கேள்வியின் கருத்து எனக்குப் புரியவில்லை. ''பைஜாமாவின் பையில் போட்டு எடுத்து வந்தேன்'' என்றேன்.

''நிச்சயந்தானே?''

''ஆமாம். ஏன்?''

''ஞாபகப்படுத்திக்கொண்டு பார். உன்னுடைய சில்லறை ஏதாவது அதே பையில் இருந்ததா!''

பதில் சொல்ல எனக்குச் சிறிது நேரம் பிடித்தது.

''இருந்தது. ஏன்?''

''அப்படியானால் கணக்குச் சரிதான்! என்னிடம் காசு அதிக மாக வத்துவிட்டது.''

இவ்வாறு சொல்லிய அவன் தன் ஜேபியிலிருந்து காசுப் பையை எடுத்து அதிலிருந்து இரண்டு அணுக்களை எண்ணி என் எதிரே வைத்தான்.

அந்த இரண்டு அணுக்களைப் பார்த்ததுமே எல்லா விஷயமும் எனக்குப் புரிந்துவிட்டது. 'கொண்டை ராணி' ரூபாய் செலாவணி யில் இல்லாதபோதிலும் அதில் வெள்ளி இருந்த காரணத்தால்

சில வியாபாரிகள் பதினெட்டு அணுக்கள் கொடுத்து அதை வாங்கிக்கொண்டிருந்தனர். அந்தக் கணக்குப்படி ராமாவின் ரூபாய்க்கும் பதினெட்டு அணு கிடைத்திருந்தது. சில்லறையைக் கொடுக்கும்போது இந்த விஷயத்தை விளக்கிச் சொல்ல மறந்து போய் விட்டேன். ராமா வீட்டுக்குப் போனதும் நான்கு நான்கு அணுக்களாகக் கூறு கட்டிப் பார்த்திருக்கிருன். நான்கு கூறுகளுக்கு மேல் இரண்டு அணுக்கள் அதிகமாக இருந்தன. உடனே, மாஸ்டர்தாம் தவறுதலாக அதிகச் சில்லறையைக் கொடுத்து விட்டார் என்று இயற்கையாகவே நினைத்த அவன் அதைப் பற்றிக் கேட்பதற்காகத் திரும்பி வந்திருந்தான்.

இந்த விளக்கத்தை அவனுக்குக் கூறிய நான் அந்த இரண்டு அணுக்களை அவன் பக்கமாக நகர்த்தினேன். உடனே அவன் அதிலிருந்து ஓர் அணுவை என் பக்கமாக எறிந்து, ''அப்படியாளுல் இது உனக்கு, வெற்றிலை பாக்குச் செலவுக்காக.'' என்ருன்.

நான் அந்த அணுவை வாங்கிக் கொள்ளவில்லை. ராமாஜி மிகவும் வற்புறுத்திக் கூறியும் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டேன்.

ராமா கேட்டான் : ''அப்படியாளுல், இந்த ரூபாய் செல்லும் என்று தானே அர்த்தமாகிறது!''

''செல்லும் என்பது மட்டுமல்ல; இரண்டு அணு லாபமும் கிடைக்கிறது.''

''இது எங்களுக்கு எப்படித் தெரியும்? கிராமத்தில் நிறையப் பேரிடம் இந்த ரூபாய்கள் வெட்டியாகக் கிடக்கின்றன. பத்துப் பன்னிரண்டு தேறும். மாற்றிக்கொண்டு வருவாயா?''

''கிராமத்து சமாசாரம் கிராமமே கவனித்துக்கொள்ளும். உங்களிடம் இருந்தால் கொடுங்கள். மாற்றிக்கொண்டு வருகிறேன்.''

அடுத்த வாரம் நான் புறப்பட்டபோது ராமா என்னிடம் பன்னிரண்டு ரூபாய்களைக் கொடுத்தான். பதினெட்டு அணுக் கணக்குப்படி அவற்றை மாற்றி எடுத்துவந்து அவனிடம் கொடுத்தேன். வெற்றிலை பாக்குக்காக நான்கு அணு பெற்றுக்கொள்ளும்படி ராமா மீண்டும் வற்புறுத்திக் கூறினுன். நான் மறுத்துவிட்டேன்.

பிறகு அன்றிரவு அவன் என்னைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்ருன். அந்த இருண்ட வீட்டுக்குள்ளே நான் குனிந்து

கொண்டு நுழைந்தேன். உள்ளே அடுப்பின் எதிரில் உட்கார்ந்து உக்கா குடித்துக் கொண்டிருந்தான் அறுபது எழுபது வயதுள்ள ஒருவயோதிகன். ராமாவின் மனைவி வீட்டு வேலைகளில் ஈடுபட்டிருந் தாள்.

உட்கார்வதற்காகக் கம்பளியை விரித்துவிட்டு ராமா நான் குடிப்பதற்காக ஆட்டுப்பால் ஒரு தட்டில் வைத்து எடுத்து வந் தான். அது ஆறுவதற்காக நான் காத்திருந்தபோது ராமா, அடுப்பின் எதிரே உட்கார்ந்திருந்த கிழவரைச் சுட்டிக்காட்டி என்னிடம் கூறினான்: ''இதுதான் என் அப்பா.''

அந்தக் கிழவன் பரபரப்புடன் மேலே போர்த்திருந்த போர்வைக்குள்ளிருந்து கைகளை வெளியே கொண்டு வந்து எனக்கு வணக்கம் தெரிவித்தான்.

ராமா கூறினான் : ''எழுபது வயது ஆகிவிட்டது. எட்டு வயதி லிருந்து ஆடு மேய்க்கும் தொழிலைச் செய்து கொண்டிருக்கிறார். இவருக்கு வேறு எதுவும் தெரியாது.'''

எட்டு வயதுப் பருவத்திலிருந்து ஆடு மேய்ப்பதைத் தவிர இந்த ஆசாமி வேறு எதுவும் செய்ததில்லை. இன்றும் அதையே தான் செய்து கொண்டிருக்கிறான். பேரனுடன் நாள் முழுவதும் ஆடுகளின் பின்னாலேயே சுற்றியலைந்து கொண்டிருக்கிறான். முகத் தில் சுருக்கங்கள் வலைவலையாய்த் தென்பட்டன. தலைமுடி முற்றி லுமே நரைத்துப் போயிருந்தது. அப்படி இருந்தும் இந்தக் கிழவன் கையில் தடியை எடுத்துக்கொண்டு ஆடு மேய்க்கப் போய்க்கொண் டிருந்தான். அவனுக்கு வேறு ஒன்றுமே தெரியாது. மாட்டை வண்டியில் எப்படிப் பூட்டுவது என்று கேட்டால் அவனுக்குச் சொல்லத் தெரியாது. ஆனால் ஒரு நாய்க்கு எப்படி ஓநாயின் மோப்பம் புரிந்து விடுமோ அப்படியே இவனுக்கும் புரியும். எருவுக்காக ஆடுகளை ராத்திரி நேரத்தில் வயல்களில் தங்கச் செய் யும்போது கிழவன் திடீரென்று மூக்கை உறிஞ்சி, ''அடே பயல் களா! எச்சரிக்கையாய் இருங்களடா! பக்கத்தில் எங்கோ ஓநாய் இருக்கிறது!'' என்பான்.

பையன்கள் எச்சரிக்கையாகி விடுவார்கள். நாய்கள் திகைப் புடன் இங்குமங்கும் பார்க்க ஆரம்பிக்கும். தொலைதூரத்தில் ஒரு மேட்டின்மேல் நின்று பதிபோட்டுக் கொண்டிருக்கும் ஓநாய் தென் படும். ஆடுகளைக் காவல் காத்துக் காத்து இந்தக் கிழவனுக்குக் கைகால்களை நீட்டிக்கொண்டு படுப்பதென்பதே மறந்துபோய்விட்

டது. மாடு, குதிரை முதலிய பிராணிகள் எவ்வாறு உட்கார்ந்த படியே தூங்குமோ அதே மாதிரி இவனும் உட்கார்ந்தவாறே தூங்கிவிடுவான். தரையில் படுப்பதற்குத் தேவையே அவனுக்குக் கிடையாது. ஒரு மந்தையிலிருந்து இன்னொரு மந்தையில் போய்க் கலந்துவிடும் ஆடுகளை மேய்ப்பவர்கள் எப்படிப் புரிந்துகொள்கிறார்கள் என்பது நமக்குப் புதிராகத் தோன்றலாம். ஆனால் கிழட்டுக் காகூபா இந்தக் கலையில் கைதேர்ந்தவன்.

யாராவது புதிதாக ஆரம்பத்திலிருந்து ஆடு வளர்க்க நினைத்தால் ஆடுகளை விலைகொடுத்து வாங்கி ஆரம்பிக்க வேண்டியதில்லை. தேங்காய் மூடியில் பிரசாத மஞ்சள் பொடியைத் தூவி எடுத்துக் கொண்டு ஒரு நல்ல நிலைமையிலுள்ள மேய்ப்பவனிடம் போய்த் தேங்காய் மூடியை அவன் கையில் கொடுத்து, ''நான் ஆரம்பிக்கப் போகிறேன்'' என்று சொன்னால் போதும். அந்த மேய்ப்பவன் தன் மந்தையிலிருந்து பொறுக்கியெடுத்த ஆடாகப் பார்த்து இலவசமாகவே அவனுக்குக் கொடுப்பான். இவ்விதம் பத்துப் பதினைந்து ஆடுகளாகச் சேர்த்து மந்தை ஆரம்பமாகும். இரண்டு மூன்று ஆண்டுகளில் அவனே மற்றவர்களுக்கு மந்தை ஆரம்பிப்பதற்கான ஆடுகளைக் கொடுக்கக்கூடிய நிலையை அடைந்து விடுவான். ஆனால் மந்தைக்கு ஆதாரமாக வாங்கிக் கொள்ளப்படும் ஆடுகளை விற்கவும் கூடாது, வெட்டவும் கூடாது என்ற கட்டுப்பாடு அனுஷ்டிக்கப்பட்டு வந்தது.

பக்கத்துக் கிராமவாசி ஒருவன் ஒரு சமயம் காகூபாவிடமிருந்து நாலைந்து ஆடுகள் வாங்கிக்கொண்டு போனான். பிறகு இரண்டு வருஷம் கழித்து, கிழவன் அந்த ஊருக்குப் போயிருந்த பொழுது அந்த மனிதன் சூள்கொட்டி வருத்தம் தெரிவித்தான் : ''காகூ, உன்னுடைய நாலு ஆடுகளும் இறந்து போய்விட்டன.''

"இறந்து விட்டனவா? அவைகளின் குட்டிகள் ..?''

''உஹ்ம்- குட்டியும் இல்லை, ஒன்றும் இல்லை. ஒரேயடியாக நசித்துப் போய்விட்டன!''

கிழவனுக்கு இது உண்மை என்று தோன்றவில்லை. ''உன் மந்தையை எனக்குக் காட்டு!'' என்று கூறியதும் அந்த ஆள் கிழவனை மந்தைக்கு அழைத்துச் சென்றான். பட்டியில் அடைபட்டிருந்த மந்தையைப் பார்வையிட்டவாறு சுற்றிக் கொண்டிருந்த கிழவன் சிறிது நேரத்தில் தன்னுடைய ஆடுகளின் குட்டிகளை அடையாளம் கண்டு கொண்டுவிட்டான். ''இதோ, இந்த இரண்டு

குட்டிகளும் என்னுடைய ஆட்டின் சந்ததிகள்!'' என்று அவன் தயங்காமல் கூறினன். அது உண்மைதான் என்பதை மற்றவன் வெட்கத்துடன் ஒப்புக்கொண்டான்.

ராமா தன் தந்தையைப் பற்றிய இந்தச் செய்தியைக் கூறிய தும் எனக்கு மிகுந்த வியப்பு ஏற்பட்டது: ''காகூபாஜி, இதை நீங்கள் எப்படிக் கண்டு பிடித்தீர்கள் ?''

கிழவன் கூறினன்: ''அதற்கு வழி இருக்கிறது மகனே, முகச் சாயலும் நிறமும் மற்ற ஒற்றுமைகளும் எப்படிப் புரியாமல் போய்விடும் ? உன்னையே எடுத்துக்கொள். உன் அப்பா, உன் அம்மா, உன் தாத்தா இவர்களுடைய சாயல் ஏதாவது உன்னிடம் வந்துதானே இருக்கும்? மூக்கோ, கண்ணோ எதிலாவது ஒற்றுமை இருந்து தானே ஆகவேண்டும் !''

பிறகு ராமா என்னை உள்ளே அழைத்துச் சென்ருன். விளக்கின் ஒளியுடன் அவன் இன்னும் உள்ளே சென்று ஒரு சிறிய பானையை எடுத்துக்கொண்டு வெளியே வந்தான். அந்தப் பானையில் நிறைய ரூபாய் நாணயங்கள் இருந்தன. 'கொண்டை' நாணயங்கள். நான் வியப்புடன் பார்த்தவாறு இருந்தேன். இந்த ஆடு மேய்ப்ப வனிடம் இவ்வளவு பணம் இருக்குமென்று நான் தவறிக்கூடச் சந்தேகப் பட்டிருக்கமாட்டேன்.

''நிறைய நாட்களாக மிச்சம் பிடித்துச் சேர்த்து வந்திருக் கிறேன். இவற்றை எண்ணிப் பார்த்து, எடுத்துக்கொண்டு போய் மாற்றிக் கொண்டுவா'' என்ருன் ராமா.

எண்ணிப் பார்த்தேன். முந்நூற்று நாற்பது ரூபாய்கள் இருந் தன. எண்ணிக்கையைக் கூறியதுமே ராமா அதை எழுதிக் கொண்டு பணத்தை அப்படியே என்னிடம் கொடுத்துவிட்டான். மாஸ்டர் ஓர் ஐந்து ரூபாய் குறைவாக எண்ணியிருப்பார் என்ரே, இவ்வளவு பெரிய தொகையை இவர் வாயில் போட்டுக்கொண்டு விடுவார் என்ரே சந்தேகமே எழவில்லை அவனுக்கு.

''ராமாஜி, இத்தனை ரூபாய்களை மாற்றிப் புதுப் பணமாக்கிக் கொண்டுவரச் சில நாட்கள் பிடிக்குமே, உங்களுக்கு அவசரத் தேவை இருக்காதா ?'' என்று கேட்டேன் நான்.

''சௌகரியம் போல் மாற்றிக் கொண்டுவா. பத்துப் பதினைந்து நாள் ஆனாலும் ஆட்சேபணை இல்லை'' என்ருன் ராமா.

நான் எழுந்து வீட்டுக்கு வந்தேன்.

# 8

மே மாதம் முடிவுடைந்து ஜுன் மாதம் வந்துவிட்டது. கோடை முடிந்து மாரிக்காலம் துவங்கிவிட்டது. மழைக்காலப் பூச்சிகள் வர ஆரம்பித்தன. வானம் கறுத்தது, துல்லியமான நிர்மலமான வெயில் மறைந்துவிட்டது. காற்று வீசத்தொடங்கியது. மரம் செடிகள் அசைந்தாட ஆரம்பித்தன. நாற்புறமும் மண்ணும் புழுதியும் பறக்கத் தொடங்கின. வானத்தைப் பார்த்து மக்கள், ''இந்தக் காற்று மழையை விரட்டிவிடப் போகிறதே!'' என்று பேசிக் கொண்டார்கள். ஆனால் அப்படி ஒன்றும் நிகழவில்லை. 'சர்உர்' என்று மழைத் தாரைகள் பொழிந்தன. மிருகசீரிஷ நக்ஷத்திரத்து மழை பன்கர்வாடியைப் புடைத்தவாறு இருந்தது. கேட்பாரற்ற நாய்கள் சுவரோரமாக ஒண்டிக் கொண்டு நின்றன. வானம் விரைவில் திறக்கும் என்பதற்கான அறிகுறியே தென்படவில்லை. மேய்ப்பவர்கள் ஓடிச் சாடினர். தலையில் ஓலைப்பாயைப் போர்த்துக்கொண்டு அவர்கள் பட்டியில் அடைபட்டு நனைந்து கொண்டிருந்த ஆடுகளைக் குடிசைகளுக்குள் கொண்டு வந்தனர். வீடுகளில் நிறைந்து நின்றிருந்த செம்மறி ஆடுகள் நின்றவாறே உடல்களை உதறிவிட்டுக் கொண்டன. தனைந்த ஆட்டு ரோமங்களின் வாடையால் மேய்ப்பவர் வீடுகளில் குமைசல் நெடி குடிகொண்டது. சோனமாரியாகப் பெய்தது மழை. வெப்பம் நிறைந்த தரையிலிருந்து நீராவி கிளம்பியது. புழுதி சேறாக மாறியது. பிறகு அதுவும் தண்ணீரோடு அடித்துச் செல்லப்பட்டது. கற்கள் நிலை பெயர்ந்தன. புல்லால் வேயப்பட்ட வீடுகள் ஒழுகின. நன்றாக மெழுகிக் கெட்டிப்படுத்தப்பட்ட தரை ஈரமாகி அங்கங்கே பெயர்ந்து போகத் தொடங்கியது. வீட்டுக்காரிகள் முணுமுணுத்தவாறே, ஒழுகும் இடங்களில் சிறு சிறு பாத்திரங்களை வைத்தனர். ஆடுகளின் வெடவெடப்புக்கு மத்தியிலே, அந்தப் பாத்திரங்களில் சொட்டிக் கொண்டிருந்த தண்ணீரின் சத்தத்தினால் காதுகளுக்கு அலுப்பு ஏற்படுவதாக இருந்தது. மண்கூரையை உடைய வீடுகளில் மழைத் தண்ணீர் ஒழுக ஆரம்பித்ததால் வீட்டுக்காரர்கள் தலையில் ஓலைப்பாயைப் போட்டுக்கொண்டு மேலே ஏறி எங்கெங்கே தண்ணீர் தேங்கி ஒழுகிக் கொண்டிருந்ததோ அந்த

இடங்களில் எல்லாம் கல்லேயும் மண்ணேயும் குழைத்துப் பூசி தாற் காலிகமாக ஓட்டைகளை அடைத்தனர்.

காற்று ஜில்லென்று குளிர்ந்து போயிற்று. மேய்ப்பவர்களின் கோடரிகள் சோம்பிக் கிடந்தன. அவர்களுடைய வீட்டுக்காரிகள் சேமித்து வைத்திருந்த உப்பு நீர்த்துப்போக ஆரம்பித்தது.

கிளிப்பச்சை நிறமுள்ள புற்கள் தரையிலிருந்து தலேதூக்கத் தொடங்கின. முற்றத்தில், வீட்டுக் கூரையில், மொட்டை மாடியில் – எங்கெல்லாம் புல் முளேக்கக் கூடாதோ அங்கெல்லாம் முளேக்க ஆரம்பித்தது. எங்கும் தளதளவென்ற பச்சை நிறம் தென்பட்டது.

கட்டைவிரல் நகத்தில் உட்காரக்கூடிய அளவு சிறியதான தேரைகள் எங்கிருந்தோ திடீரென்று தோன்ற ஆரம்பித்தன. நடக்கும் வழியெல்லாம் 'டப் டப்' என்று துள்ள ஆரம்பித்தன. காகங்கள் அவற்றை வேட்டையாடின. சிறிய சிறிய இறக்கைகளே உடைய ஈசல்கள் ஆயிரக்கணக்கில், லக்ஷக்கணக்கில் பறக்கத் தொடங்கின. மைனுக்களும் குருவிகளும் ஆனந்தமாக அவற்றைத் தீர்த்துக்கட்டின. அவற்றுக்கு அகப்படாமல் தப்பிய பூச்சிகள் விளக்கு ஏற்றியதுமே விளக்குகளில் விழுந்து உயிரை விட்டன. மறு நாள் எங்கே பார்த்தாலும் அந்தப் பூச்சிகளின் மெல்லிய இறக்கை கள் உதிர்ந்து கிடந்தன. இறக்கைகளே இழந்து புழுக்கள் மாதிரி நெளியத் தொடங்கிய அந்த மஞ்சள் நிறமுள்ள ஈசல்கள் பிறகு மறைந்து போயின. செங்கல் நிறமுள்ள மரவட்டைகள் ஒன்றின் மேல் ஒன்று சவாரி செய்தவாறு ஆயிரங் கால்களால் ஊர்ந்து சென்றன. விரல் பருமனுள்ள சில கறுப்பான மரவட்டைகள் இங்குமங்கும் சோர்ந்தாற் போல் ஊர்ந்து கொண்டிருந்தன. யாராவது ஆள் அல்லது வேறு பிராணியின் ஸ்பரிசம் பட்டதுமே அவை சுருட்டிக்கொண்டு அசையாமல் கிடந்தன. மேய்ப்பவர் வீட்டுக் குழந்தைகள் அந்த மரவட்டைகளே வேண்டுமென்றே விரலால் தொட்டு, பைசா வடிவத்தில் சுருண்ட அவற்றைக் கையில் எடுத்து விளேயாட ஆரம்பித்தன. ஈக்களுக்குக் கணக்கே இல்லே. குடிசைகளில் ரீங்காரமிட்டுப் பறந்து கொண்டிருந்தன. ஆடுகளின் மூக்குகளில் மொய்த்தன. சிறு சிறு கொசுக்களும் ஏராளமாகி எல்லோருடைய கண்களேச் சுற்றிலும் மொய்த்தவாறு பறந்தன.

உழுது போடப்பட்டிருந்த வயல்களில் மண்பாளங்கள் அலம்பி விட்டாற்போல் ஆயின. வயல்கள் தாகம் தீரத் தண்ணீர் குடித்து விட்டன. அங்கங்கே சிறியதும் பெரியதுமான நீர்க்குட்டங்கள்

ஏற்பட்டு அவற்றில் கரிய நீல நிறமுள்ள வானத்தின் பிரதிபிம்பம் தெரிந்தது. வயல்கள் வழியாக நடக்கும்போது ஆட்கள், ஆடுகள், மற்றப் பிராணிகள் எல்லாவற்றின் கால்களிலும் மொத்தை மொத்தையாகச் சேறு ஒட்டிக் கொண்டது. பரம்பு நன்ருக நீராடி பச்சைப் பசேலென்று ஆகியிருந்தது. அந்தப் பசுமையான பரம்பு நிலத்தில் கன்னங்கறேலென்ற செம்மறி ஆடுகள் மேய ஆரம்பித்தன. வால் நீண்ட கருங்குருவி அந்த ஆடுகளின் முதுகில் சவாரி செய்த வாறு இரட்டைக் குரலில் கத்திக்கொண்டு சென்றது. யாருடைய பார்வையிலும் படாமல் ஜாக்கிரதையாக இருந்து கொண்டு கவுதாரிப் பறவைகள் உரத்த குரலில் கத்திக் கொண்டிருந்தன.

## 9

ஒரு குறிப்பிட்ட நேரத்துக்குப் பள்ளியை ஆரம்பித்து நிலையான நேரத்தில் விடுவது என்பது பன்கர்வாடிப் பள்ளி சம்பந்தப்பட்ட மட்டில் எப்போதுமே சாத்தியமில்லாத விஷயந்தான். ஊரெல்லாம் கோடை விடுமுறை உண்டென்றால் இங்கே அறுவடை நாட்களில் தான் விடுமுறை. இஷ்டப்பட்டபோது பிள்ளைகள் பள்ளிக்கூடத்துப் பக்கம் தலைகாட்டுவார்கள். எப்படிப் பேருந்துகள் (பஸ்கள்) போதிய ஆட்கள் சேர்ந்த பிறகு தான் புறப்படுமோ, அவ்வாறே இங்கும் பள்ளிக்கூடத்தில் போதிய மாணவர்கள் சேர்ந்தால்தான் பாடம் நடத்தப்பட்டு வந்தது. எனவே ஆசிரியரின் செயல் வட்டம் பள்ளிக் கூட வரம்புக்குள் முடிந்து விடுவதில்லை. யாராவது கடிதம் எழுதச் சொல்லிக் கேட்பான், ஒருவன் ஒரு விண்ணப்பம் எழுதிக் கொடுக்கக் கோருவான். ஞாயிற்றுக்கிழமை விடுமுறை கொண்டாடுவதற்காக நான் என் ஊருக்குப் புறப்படும்போது தபாலில் சேர்ப்பதற்கென மற்றவர் என்னிடம் கொடுத்த கடிதங்களால் என்னுடைய கோட் டின் பைகள் நிரம்பியிருக்கும். இவற்றையெல்லாம் நான் மறுக்கா மல் செய்துவந்ததால் ஒவ்வொருவரும் எதற்கெடுத்தாலும் என்னு டைய உதவியை நாட ஆரம்பித்தனர். புருஷன் மனைவிச் சண்டை யிலிருந்து ஆடுகள் திருட்டுப்போவது வரை எல்லாவிதமான அக்கப் போர்களும், வாத்தியாரையாவிடம் கொண்டுவரப்பட்டன. 'வாத் தியாரையா படித்தவர், அறிவாளி. சட்டதிட்டங்கள் அவருக்குத்

தெரிந்தே இருக்கும், நல்லது கெட்டது பகுத்தறியும் திறனும் அவருக்கு இருக்கத்தானே வேண்டும்!'

எனவே பாடசாலை இருந்தாலும் இல்லாவிட்டாலும் இந்த அக்கப்போர்களைத் தீர்த்துவைப்பதில் நேரம் கழிந்துகொண்டிருந் தது. கல்வித்துறையிலிருந்து, பிள்ளைகளின் எண்ணிக்கை குறை வாயிருப்பதைப் பற்றிய குறைகூறல் வந்தால், ''பள்ளி புதிது, படிக்காமல் நின்றுவிடும் பிள்ளைகள் அதிகமாக இருக்கிறார்கள்...'' இவ்வாறான காரணங்களைக் கூறிச் சமாளித்துக் கொண்டிருந்தேன். பள்ளிக்கூடம் என்றால் நீதி மன்றம், காவல் நிலையம், ஊராட்சி எல்லாம் அதில் அடக்கம். பள்ளி ஆசிரியர் நீதிபதியாக, காவல் அதிகாரியாக, கிராம முன்சீப்–மணியக்காரராக, தபால் தலை விற்ப வராக இயங்கியாக வேண்டும். ஆனால் கிராமத்துச் சண்டை சச்சரவு கள் கிராமத்துக்கு வெளியே போவது கிடையாது. நியாய விசா ரணை தீர்ப்பு எல்லாம் சாவடிக்கெதிரே பத்துப்பேர் கூடி முடிவு செய்வது தான். வாத்தியாரையா, நாட்டாண்மை, காகூபா, ஷேகூபா—இப்படி அறிவிலும் வயதிலும் முதிர்ந்தவர்கள் நியாயம் வழங்கினர். இந்தப் பத்துப்பேரின் தீர்ப்பைக் குற்றவாளி ஏற்க மறுப்பதில்லை. நீதி, தண்டனை இரண்டையும் ஏற்றுக்கொள்வான். மனமில்லாவிட்டால் அப்பீல் செய்வதற்கும் வழி இருந்தது. மேய்ப் பவர் சமூகமென்னும் மகாதேவதையிடம் முறையிடுவதுதான் அது. பெரிய அளவில் மேய்ப்பவர் சமூகம் ஒன்று கூடி நியாயம் வழங்கும். ஆனால் இந்த அளவுக்கு யாரும் செல்வதில்லை. ஏனென்றால் அந்த மகாதேவதையிடம் முறையிடுவது என்றால் அவ்வளவு பேருக்கும் விருந்து வைத்தாக வேண்டுமே! அவ்வளவு பெரிய செலவை ஏற்க யாருக்கு மனம் வரும்?

திருமணங்களையும் ஒன்றாக நடத்திவிடும் வழக்கம் அந்தக் கிராமத்தில் இருந்தது. ஒவ்வோர் ஆண்டும் ஒரு நல்ல முகூர்த் தத்தைப் பார்த்து அன்றே கிராமம் முழுவதும் நடக்கவேண்டிய எல்லாத் திருமணங்களையும் நடத்திவிடுவார்கள். இந்த முறையால் கிராம மக்கள் எல்லோருக்கும் சாப்பாடு போடும் செலவு ஒருவர் தலையிலேயே சுமருவதில்லை. பத்துப் பன்னிரண்டு திருமணங்கள் நடந்தால் ஒவ்வொருவர் பங்குக்கும் பத்துப் பன்னிரண்டு விருந்தா ளிகள் என்ற கணக்கில் அதை முடித்துவிட முடியும். அந்தத் திருமண நாளில் பணமுடையால் யாருடைய காரியமாவது தடைப் படும்போலிருந்தால் கிராமம் முழுவதும் ஒன்று சேர்வார்கள்.

'இன்னருக்கு இந்த முடை ; அவனுக்குக் கைகொடுத்து உதவ வேண்டும்' என்று தீர்மானித்துக்கொள்வார்கள். அவனுடைய செலவை எல்லாரும் பகிர்ந்து கொண்டு அந்தத் திருமணத்தை நடத்திவைப்பார்கள்.

தாதுவின் அச்சுறுத்தலைப் பொருட்படுத்தாமல் நான் கிராமத்தில் எல்லோருடனும் தயக்கமில்லாமல் ஒன்றி உறவாடிக் கொண்டிருந்தேன். வாத்தியாரையா இல்லாமல் கிராமத்தில் ஓர் இலை கூட அசைய முடியாது என்ற நிலைமை ஏற்பட்டிருந்தது.

கிராமத்தில் விவசாயிகள் மிகச் சிலர்தாம். மிருகசீர்ஷ நட்சத்திரத்தில் பெய்த மழையின் காரணமாக வயல்களில் புற்கள் நிறைய முளைத்திருந்தன. அடர்த்தியாக வளர்ந்து விட்டன. விதைப்புக்கு முன்னல் உழவர்கள் வயல்களில் ஒருமுறை பரம்படித்து அந்தப் புல்லை மண்ணுடன் கலக்கும்படி செய்தனர் பிறகு பூச நட்சத்திரத்து மழை பெய்தது. வயல்களில் சேறு நிரம்பியது. வானம் வெளிவாங்குவதற்காகக் காத்திருந்தனர் எல்லோரும். மழை நின்று வானம் வெளிவாங்கியதும் சேறு உலர்ந்து போயிற்று. எருதுகளின் குளம்புகள் பதியாத அளவுக்கு, சிறு கலப்பை இட்டுச் செல்லும் தடங்கள் மறையாத அளவுக்கு வயல் காய்ந்திருந்தது. ஈரம் பூமிக்கடியில் இருக்க, வயலின் மேற்பகுதி உலர்ந்து போயிற்று. இந்த அளவில் விதைப்பு கோலாகலமாக ஆரம்பமாகியது. கம்பு, துவரை, கடலைப் பயிர்களுக்கான விதைப்பு மும்முரமாக நடந்தது. உழவர்கள் அதிகாலையில் சிறு கலப்பை பூட்டிக்கொண்டு, விதைப் பொட்டலங்களை எடுத்துக்கொண்டு புறப்பட்டனர்.

இவ்விதம் விதைப்பு வேலை சுறுசுறுப்பாக நடந்துகொண்டிருந்த சமயத்தில் ஷேகூ என்னிடம் வந்தான். அவன் கிராமத்தில் அதிகமாகத் தென்படுவதில்லை. தன்னுடைய இரண்டு மூன்று ஏக்கர் நிலத்தில் உழன்று கொண்டிருப்பதுதான் அவனுக்குத் தெரியும். அதிகாலையில் அவன் ஒரு துணியைப் போர்த்துக்கொண்டு என் வீட்டுக்கு வந்தான். அவனுடைய கைகள் வெளியே தெரியவில்லை. அவனுடைய காய்ந்து உலர்ந்த முகமும் வயல்களில் நடந்து நடந்து கட்டையாய்ப் போய், பெரிய பெரிய நகங்களுடன் காணப்பட்ட பாதங்களும் மட்டும் வெளியே தெரியும்படியாக, தலையிலிருந்து கால்வரை அந்தத் துணியை இழுத்துப் போர்த்துக்கொண்டிருந்தான் அவன். வீட்டில் நான் உட்கார்ந்திருந்தேன். ஆயபூவும் உட்கார்ந்திருந்தான்.

ஷேகூ நின்றவாறே கூறினான் : ''மாஸ்டர், எனக்கு ஒரு எருது கண்டுபிடித்துக் கொடேன். விதைப்பு வேலை நின்றுபோய் இருக்கிறது''

நான் பள்ளிக்கூட உபாத்தியாயர்; என்னிடம் எருது எங்கிருந்து வரும்? ஆனால் ஷேகூவிடம் அதைக் கூறிப் பயன் இல்லை. ''உனக்கு வேண்டுமென்று கேட்டால் எப்படியாவது கிடைத்துவிடும். என்னிடம் ஒரு எருது தான் இருக்கிறது. மற்றொன்று செத்துப்போய்விட்டது. இரண்டாவது மாடு கிடைத்தால் விதைப்பு நடக்கும். இல்லாவிட்டால் வருஷம் முழுவதும் பட்டினி கிடந்து சாக வேண்டிய நிலைமைதான்!'' என்றான் ஷேகூ.

''ஆனால் யாரிடம் மாடு இருக்கிறது என்று சொல்லு, அவனிடம் கேட்கிறேன்'' என்றேன்.

''யாரிடம் மாடு இருக்கிறதோ அவர்களுடைய விதைப்பு வேலையும் நடந்துகொண்டிருக்கிறது. தன் வேலையைத் தொங்கலில் விட்டுவிட்டு எவன் மாட்டைக் கொடுப்பான்? நான் எல்லாரிடமும் கேட்டுப் பார்த்தாயிற்று.''

''பிறகு நான் யாரிடம் கேட்பது?''

''நீ என்ன செய்வாயோ, எனக்குத் தெரியாது. எப்படியாவது என்னுடைய தேவையை நீதான் பூர்த்தி செய்ய வேண்டும். சங்கடம் நேரும்போது மாஸ்டர் வந்துவிடுவார்; கஷ்டத்தைப் புரிந்துகொண்டு கைகொடுப்பார் என்று கிராமமெல்லாம் பேச்சாக இருக்கிறது. எனக்கு மட்டும் ஏன் இப்படி!''

ஆயபூ இதுவரையில் ஒன்றும் பேசாமல் இருந்தான். இப்போது ஷேகூவின் பக்கம் திரும்பிக் கேட்டான்: ''ஏண்டா ஷேகூ, உனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா? மாஸ்டரிடம் மாடு எங்கிருந்து வரும்? அவரென்ன விவசாயியா? வெட்டியாக ஏதோ கேட்க வந்துவிட்டாயே. நட வீட்டுக்கு!''

ஆயபூ இவ்வாறு அதட்டல் போட்டதும் ஷேகூ கீழே இறங்கிவிட்டான். தான் கேட்டது தவறோ என்று சந்தேகம் வந்துவிட்டது அவனுக்கு. ''வீட்டுக்குப் போக வேண்டியதுதான். ஆனாலும் வாத்தியாரையா, எங்காவது முடியுமா என்று பாருங்கள்'' என்று பணிவுடன் கூறினான்.

ஆயபூ ஒரு தீர்மானத்துடன் எழுந்தான். அவன் ஷேகூவின் கையைப் பிடித்து அவனைக் கீழே இறக்கிவிட்டான்: ''ஷேகூ, ரொம்பப் புத்திசாலிதான் நீ! கொஞ்சமாவது அறிவு இருக்கிறதா

உனக்கு? வாத்தியாரையா என்ன, மாட்டை மடியிலா முடிந்து வைத்துக் கொண்டிருக்கிறார்!'' என்று அவன் அதட்டியதும் ஷேகூ கெஞ்சுவதுபோல் ஏதோ வாய்க்குள் பேசியவாறு அங்கிருந்து அகன்றான்.

திரும்பி வந்த ஆயபூ, ''வாத்தியாரையா, அவன் கிடக்கிறான்; சுத்தப் பைத்தியம்!'' என்றான்.

நான் வெறும் எழுதப் படிக்கக் கற்றுகொடுக்கும் ஆசிரியன் தானே என்று அடிக்கொருதரம் நினைத்துக்கொண்டேன். ஆனால் இவர்களுடைய தேவையோ வேறு விதமானது. ஆயபூவுக்குத் தங்க இடம் தேவை. ஆனந்தாவுக்கு ரொட்டி தேவை. ஷேகூவுக்கு மாடு தேவை.

இரண்டு நாட்கள் ஷேகூ எங்கெங்கேயோ அலைந்து திரிந்தான். ஆனால் மாடு கிடைக்கவில்லை. அவன் வீட்டுக்கு வந்து இடிந்தாற் போல் உட்கார்ந்துவிட்டான். ''எந்த விதத்திலும் என்னால் சமாளிக்க முடியவில்லையே!'' என்றான் மனைவியிடம்.

ஷேகூவின் மனைவி மற்ற ஸ்திரீகளைவிட ஒரு சாண் அதிக உயரமாக இருந்தாள். நல்ல வலுவான உடம்பு. வயல் வேலையெல்லாம் அவள் ஓர் ஆண்பிள்ளையைப் போலவே செய்துவந்தாள். கணவன் தலையில் கையை வைத்துக்கொண்டு உட்கார்ந்து விட்டதைப் பார்த்து அவள் கேட்டாள்: ''யாரிடம் மாடு கேட்டாய்?''

''ஊர் முழுதும் அலைந்து எல்லாரிடமும் கேட்டாயிற்று. ஒருவனும் கொடுக்கத் தயராக இல்லை.''

''பிறகு?''

''இந்த வருஷம் பட்டினிதான்!''

அந்த ஸ்திரீ கணவனின் ஏமாற்றம் தோய்ந்த இந்த வார்த்தைகளைக் கேட்டாள். எண்ணெய் வறண்டு போன விளக்கைப் போன்று ஒளியிழந்த அவனுடைய கண்களைப் பார்த்தாள். பின்பு துணிவுடன் கூறினாள்:

''நாளைக்கு விதைப்பு நடந்தே தீரும்.''

''மாடு?''

''நான் கொண்டு வருகிறேன்.''

''எங்கிருந்து?''

''எங்கிருந்தாவது!''

''இருந்தாலும்...''

''உனக்கென்ன வந்தது? நான் மாடு பிடித்துக்கொண்டு வருகிறேன். காலையில் எழுந்து வயலுக்கு வா, அது போதும்!''

மனைவி யாரிடமிருந்து மாடு பிடித்துக்கொண்டு வருவாள் என்று எண்ணமிட்டவாறே ஷேகூ காலையில் எழுந்து கலப்பையைத் தோளில் ஏந்தி ஒரு கையில் அந்த ஒற்றை மாட்டைப் பிடித்தவாறு வயலுக்குச் சென்றுவிட்டான். கிராமத்தின் திசைக்காகத் திரும்பி வரப்பின்மீது உட்கார்ந்து மனைவியின் வருகையை எதிர்நோக்க ஆரம்பித்தான்.

சுமார் ஒரு மணி நேரம் பொறுத்து ஷேகூவின் மனைவி வயலை நோக்கி வருவது தெரிந்தது. அவளிடம் மாடு எதுவும் இல்லை. ஷேகூவின் முகம் விழுந்துபோயிற்று. மனைவி பந்தயம் போட்டு விட்டுப் போனாள், ஆனால் இவளும் வெறும் கையுடன்தான் திரும்பி வருகிறாள். இனி விதைப்பு நடப்பதேது? எல்லாருடைய வயலிலும் விதைப்பு முடிந்த பிறகு மாடு கிடைத்தாலும் கிடைக்கலாம். ஆனால் பலன்? விதைத்தாலும் பயிர் பிடிக்காது. பாழாகிவிடும். வருஷம் முழுதுக்கும் தேவையான விளைச்சல் கிடைக்காவிட்டால் பட்டினிதானே கிடக்கவேண்டும்! அத்தக்கூலிக்கு வேலை கிடைக் காதா என்று ஊர் ஊராக அலையும்படி ஆகிவிடும்.

சோர்ந்த முகத்துடன் அந்த உழைப்பாளியான மேய்ப்பவன் இவ்வாறு குழம்பிக் கொண்டிருந்தபோது, கட்டு மஸ்தான அவனு டைய மனைவி வயலுக்கு வந்து சேர்ந்தாள்.

''என்னடி, மாடு கிடைக்கவில்லையா ?''

''கிடைக்காமலென்ன, கலப்பையைக் கட்டு!''

''மாடு வேண்டாமா?''

''நான்தான் இருக்கிறேனே. ஒரு பக்கம் ஒற்றை மாட்டைப் பூட்டு. மறுபக்கம் நான் இருந்து கலப்பையை இழுக்கிறேன்.

மனைவியின் இந்த யோசனையைக்கேட்டு ஷேகூ வெலவெலத்துப் போனான். என்ன பேசுவதென்றே அவனுக்குத் தெரியவில்லை.

''சீ! இது எப்படிச் சாத்தியம்?''

ஆனால் அந்தப் பெண்பிள்ளை மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டுதான் வந்திருந்தாள். தன்னுடைய உடல் பலத்தில் அவளுக்கு நம்பிக்கை இருந்தது.

''தயங்காதே. பூட்டு கலப்பையை!''

கணவன் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து அசையவில்லை; தலையைக் குனிந்தவாறே உட்கார்ந்திருக்கிறான். இதைப் பார்த்த தும் அவள் முன்னே சென்று, தானே கலப்பையில் மாட்டைப் பூட்டி

ளுள். நுகத்தடியின் மறு பக்கத்தைத் தன் தோளில் தாங்கிப் பிடித்துக் கொண்டு அவள் உரக்கக் கூறினுள்: ''உம். ஓட்டு!''

நெஞ்சைக் கல்லாக்கிக் கொண்டு அந்த நோஞ்சான் கணவன் எழுந்து நின்று கலப்பையின் பிடியைப் பற்றியவாறு மாட்டை உசுப்பினுன். மாடு நகர்ந்தது, மனைவியும் நகர்ந்தாள். கலப்பையின் கொழு ஈரமண்ணில் பதிந்து பூமியைக் கிழித்துக் கொண்டு முன்னேறியது. ஷேகூ கையில் மூடி வைத்திருந்த மூங்கில் குழாயைத் திறந்தான். குழாயிலிருந்து கம்பு விதைகள் மணி மணியாகக் கொழு கிளறிவிட்ட தடத்தில் விழுந்தன.

தன்னுடைய உடல் பலத்தால் ஷேகூவின் மனைவி எருதுக்குச் சமமாக நின்று கலப்பையை இழுத்துச் சென்ருள்.

காலையிலிருந்து உச்சிப்பொழுது வரையில் ஷேகூ விதைத்துக் கொண்டிருந்தான். பிறகு அவனும், மூச்சு இரைத்தவாறு வந்த அவனுடைய மனைவியும் உட்கார்ந்து ரொட்டியைச் சாப்பிட்டனர். ஷேகூவால் எதுவும் பேச முடியவில்லை. அவன் மனைவிதான் ஏதோ பேசினுள். பிறகு இருவரும் சேர்ந்து பரம்புக் கட்டையை ஓட்டியவாறு விதைகள் மண்ணில் நன்ருகப் பதியுமாறு செய்தனர். மாலைப் பொழுதுக்குள் அந்த மூன்று ஜீவன்களும் இரண்டு ஏக்கர் வயல் முழுவதையும் விதைத்து முடித்துக் கரை ஏறினுர்கள். பொழுது சாயும் தறுவாய்க்கு மூவரும் களைத்துச் சோர்ந்து போய் வீட்டுக்குத் திரும்பினர்.

இந்தச் சமாசாரம் கிராமத்துக்கு எட்டியபோது எல்லோரும் வியப்பில் ஆழ்ந்தனர். இதைப்பற்றி எல்லோரும் புகழ்ந்து ஆச்சரியத்துடன் பேசிக் கொண்டார்கள். ஒரு சிலர் இதைக் கேலி செய்யவும் செய்தார்கள்.

அன்றிரவு பள்ளிக்கூடத்திலிருந்து நான் வீடு திரும்பிய போது வழியில் ஷேகூவின் வீட்டெதிரே கணநேரம் நின்றேன். உள்ளே சிமிணி விளக்கின் ஒளியில் ஷேகூவின் மனைவி சுவர் ஓரமாகக் கவிழ்ந்து படுத்திருந்தாள். ஷேகூ அவளுடைய முதுகின் மேல் நின்று அவளுடைய உடலைக் கால்களால் அமுக்கி விட்டுக் கொண்டிருந்தான். சுவரைக் கைகளால் பிடித்துக்கொண்டு மெதுவாக ஒவ்வொரு பாதமாகத் தூக்கி வைத்து மனைவியின் முதுகுவலிக்கு இதமாக மிதித்துக் கொண்டிருந்தான்.

# 10

சனிக்கிழமை பள்ளிக்கூடம் விட்ட பிறகு நான் என்னுடைய கிராமத்துக்குச் சென்று விட்டு மறுபடியும் அந்த ஆறு மைல் தூரத்தையும் கடந்து திரும்பி வரும்போது ஒரேயடியாகக் களைத்துப்போய் விடுவேன். இந்தப் போவதும் வருவதுமான வேலை உண்மையிலேயே சலிப்புத் தருவதாகத்தான் இருந்தது. சரீர சிரமத்தையாவது மறந்து விடலாம். ஆனால் அவ்வளவு நேரம் அந்தக் கரடு முரடான பாதையில் பாதங்களைத் தேய்த்தவாறு நடந்து வருவதுதான் பெரிய தொல்லையாக இருந்தது. பள்ளிக்கூடம் விட்டபிறகு புறப்படுவதென்றால் காலை பத்து-பதினொரு மணி ஆகிவிட்டிருக்கும். வீடு போய்ச் சேர்வதற்குள் நடுப்பகல் கழிந்து விட்டிருக்கும். அங்கே சேர்ந்ததுமே அம்மாவின் கையால் சாப்பாடு சாப்பிட்டுவிட்டுப் படுப்பதற்குள் மாலையாகி விடும். இரவு நல்ல தூக்கம். ஞாயிற்றுக்கிழமை காலை சாப்பாடு முடிவதற்குள்ளேயே, பொழுது சாய்ந்ததும் திரும்பிச் செல்ல வேண்டுமென்ற எண்ணம் என்னைத் துன்புறுத்த ஆரம்பிக்கும். இரவு தூங்கும்போதே நான் அடிக்கொருதரம் அம்மாவிடம், ''அம்மா, நான் காலை, கருக்கலிலேயே புறப்பட்டு விடுவேன். பராட்டா தயார் செய்து கொடுத்து விடு'' என்று எச்சரிக்கை செய்தவாறு இருப்பேன். அவள் பாவம். முதல் விழிப்பிலேயே எழுந்து சமையல் வேலையைத் துவக்கிவிடுவாள். ஏறக்குறைய விடிவெள்ளி முளைக்கும் சமயம் நான் ரொட்டிகள் நிறைந்த பையை முதுகில் மாட்டிக் கொண்டு பன்கர் வாடிக்குச் செல்லும் பாதையில் நடக்க ஆரம்பித்திருப்பேன். ஒவ்வொரு சனிக்கிழமையும் இவ்விதம் போய் வருவது சுகமான விஷயம் அல்ல. ஆனால் போக வேண்டும் என்ற விருப்பத்தைத் தவிர்க்க முடியாது. வீட்டின் கவர்ச்சியே அப்படித்தான்.

நான் இப்படி நடவா நடை நடப்பதைப் பார்த்து ஆயபூவுக்கு இரக்கமாக இருக்கும். ''மாஸ்டர்ஜி, குடும்பம் எப்போது ஆரம்பிக்கப் போகிறீர்கள்?'' என்று கேட்பான்.

''ஏனப்பா!''

''வயிற்றுக் கொடுமை நீங்க மணம் செய்துகொண்டு குடும்பம் ஆரம்பியுங்கள்.''

திருமணம் செய்து கொண்டு குடும்பம் நடத்துவது வயிற்றுப் பாட்டுக்குத் தீர்வு காண்பதற்குத்தான். இதைத் தவிர திருமணத்துக்கு வேறு எந்த அவசியமும் இருப்பதாக ஆயபூவுக்குத் தோன்றியிருக்க முடியாது. பாவம், அவனுக்குத் தோன்றியதை அவன் சொல்லி விட்டான். தன் கையாலேயே ரொட்டியை வாட்டி வாட்டிச் சாப்பிடும் நிர்ப்பந்தம் எந்த ஆணைத்தான் சலிப்படையச் செய்யாது? ஆனால் இந்தத் தொல்லையிலிருந்து மீள்வதற்காக மட்டும் மற்ற எல்லாவற்றையும் விட்டுவிட்டுத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் கூட என் மனத்தில் தோன்றியதில்லை. மிகவும் அலுப்புத் தோன்றிய நாட்களில் நான் ஓரிரு வாரங்கள் சொந்த ஊருக்குப் போய் வருவதைத் தள்ளிப் போட்டு விடுவேன். ஊருக்குப் போகும் சில சமயங்களில் திங்கள் கிழமை திரும்புவதற்குப் பதிலாகச் செவ்வாயன்று திரும்பி வருவேன். மற்றப்படி வாரந்தோறும் காலைத் தேய்ப்பது நடந்து கொண்டுதான் இருந்தது.

இந்தத் தடவை நேரம் கழித்துப் புறப்பட்டிருந்தேன் ஊரிலிருந்து. கிராமத்துக்கு வந்து சேர்ந்த போது மாலைப்பொழுது ஆகியிருந்தது. ஆடுகள் மேய்ச்சலிலிருந்து திரும்பி வரவில்லை இன்னும். இந்தத் தடவை ராமாவின் பணத்தை நான் மாற்றி எடுத்து வந்திருந்தேன், ரொட்டிப் பையில் முடிந்து வைத்திருந்த பணத்தின் சுமை வழியெல்லாம் என் நினைவில் அழுத்திக் கொண்டிருந்தது. அந்தப் பையை இறுகப் பிடித்தவாறு நடந்து கொண்டிருந்தபோது, யாராவது என்னை வழிப்பறி செய்தால் எவ்வளவு பயங்கரமாக முடியும் என்ற அச்சத்துடன் முன்னும் பின்னும் பார்த்துக் கொண்டு வேகமாக நடை போட்டேன். கிராமத்தை எட்டியதுமே அந்த அச்சமும் அந்தச் சுமையும் என் நெஞ்சை விட்டு நீங்கின. என்னுடைய அறையின் கதவைத் திறந்து விளக்கேற்றி விட்டு, கை கால்களைக் கழுவிக்கொண்டு சாய்ந்தாற்போல் உட்கார்ந்து கொண்டேன். நீண்ட தூரம் நடந்த பிறகு காலை நீட்டிக் கொண்டு உட்காருவது எவ்வளவு இன்பமளிக்கக் கூடியது என்பதை அனுபவித்துப் பார்த்தால்தான் உணர முடியும்.

மழையோடு சேர்ந்த காற்று அடித்ததனால் சுவரில் ஈரம் தாக்கி இருந்தது. இரண்டு மூன்று நாட்களாக அடைத்துப் போட்டிருந்ததனால் அறையில் ஒரு மக்கல் வாடை சூழ்ந்திருந்தது. மூலையில் மொய்த்திருந்த கொசுக்கள் பறக்க ஆரம்பித்தன. சலிப்படையச்

செய்யும் அவற்றின் 'உய்ங்' என்ற சத்தம் தொடர்ந்து ஒலித்தது. நான் மிகவும் களைத்துப் போயிருந்தேன், அலுத்துச் சலித்துப் போயிருந்தேன். கண்கள் தாமாகவே மூட ஆரம்பித்தன. ஆனால் விளக்கு வைக்கும் நேரத்தில் தூங்குவது சரியில்லையே. திருமகள் விஜயம்செய்யும் நேரத்தில் தூங்குவது தரித்திரத்துக்கு அடையாளம். ஆனால் அதிர்ஷ்டசாலி கூட, களைத்துப்போனால் என்ன செய்வது? உடம்பென்று இருந்தால் வறியவனுக்கு எப்படியோ அப்படியே தானே சீமானுக்கும் இருக்கிறது! களைத்தால் ஓய்வைக் கேட்கவே செய்யும். ஓய்வு எடுத்துக் கொள்வதென்றால் கண்களும் மூடிக் கொள்ளாமல் இருக்குமா? தூக்கமும் தானாகவே வந்துவிடும். ஆனால், இது சரியல்ல; நல்லதல்ல.

உட்கார்ந்திருந்தவன் மெதுவாக நீட்டிப் படுத்துக்கொண்டு விட்டேன். நொந்து போன உடலைத் தளர்த்தி விட்டு அப்படியே கிடந்தேன். கண்களையும் மூடிக் கொண்டேன். கண்களை இறுக மூடிக் கொள்ளும் போது கண்களுக்குள் பளபளவென்று பலவித நிறங்களுள்ள வட்டங்கள் ஏன் தென்படுகின்றன? கருநீலம், ஊதா, கறுப்பு இவ்வித வர்ணங்கள் ஏன் வட்டமிடுகின்றன, எதற்காக வட்டமிடுகின்றன? இவ்வாறு பள்ளிச் சிறுவர்கள் கேள்வி கேட்டு விட்டால் ஆசிரியர் பாடு திண்டாட்டம் தான். இந்தக் கேள்விக்குப் பதில் சுலபமானதாக இருக்கலாம். ஆனால் எனக்கு அது தெரியாது. எட்டாவது பாஸ்செய்துவிட்டு உபாத்தியாயராயிருக்கும் சிறு பிள்ளைக்கு என்ன தெரிந்திருக்க முடியும்! ஆனால் வகுப்பில் பிள்ளைகள் கேட்டு விட்டால் அவமானம் தான். பன்கர்வாடிச் சிறுவர்கள் அவ்வளவு துடியானவர்கள் இல்லையென்பது ஒருபுறம் இருக்கட்டும். ஆனால் ஆசிரியன் என்ற முறையில் நான் அந்தக் காரணத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஆராய்ச்சி செய்து அறிய வேண்டும். கண்களின் அமைப்பு எப்படி இருக்கும்? உடற்கூறு பற்றிய நூலில் இதெல்லாம் வந்திருக்கும்.

உம்...படித்ததெல்லாம் சீக்கிரமே மறந்து போய் விடுகிறது. கண்ணிமைகள் கனத்து வழிந்தன, மூடிய அவற்றைத் திறக்கவே முடியவில்லை.

மூன்று நான்கு மணி நேரம் கழித்து நான் கண் விழித்துக் கொண்ட போது மழை பூந்தூறலாக விழுந்து கொண்டிருந்தது. அறையில் விளக்கு இல்லை. திறந்த வாயில் வழியாக ஊசிபோல் குத்தும் குளிர்ந்த காற்று உள்ளுக்கு வந்து கொண்டிருந்தது. நான்

எழுந்து உட்கார்ந்தேன். சட்டென்று நினைவுக்கு வந்தது. நான் துள்ளியெழுந்து தலைமாட்டுப் பக்கம் கையால் தடவிப் பார்த்தேன். பை கைக்குத் தட்டுப்பட்டது. ஆனால் அதில் பணப்பை தட்டுப்பட வில்லை. என்னுடைய நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. இருட்டிலேயே நான் பல தடவை பையைச் சோதனை போட்டுவிட் டேன். அதிலிருந்த வேஷ்டி, சட்டை எல்லாவற்றையும் வெளியே இழுத்துப் போட்டேன். ஆனால் ரூபாய்களின் கெட்டியான தன்மை கையில் சிக்கவே இல்லை. சட்டைப் பையிலிருந்து நெருப்புப் பெட்டியை எடுத்து ஒரு குச்சியைக் கிழித்து மண் எண்ணெய்ச் சிமிணி விளக்கை ஏற்றினேன், பைத்தியம் பிடித்தவனைப் போல் நான் துணிப்பை, படுக்கை, தரை, ஓர் இடம் பாக்கியில்லாமல் ஆராய்ந் தேன். ஆராய்ந்து கொண்டே இருந்தேன் ..

பணம் காணமற் போய் நான்கைந்து நாட்கள் ஆகி விட்டன: நான் தினசரி வேலைகளைச் செய்து கொண்டுதான் இருந்தேன். வேளைக்குச் சாப்பிட்டு, வேளைக்குப் பள்ளிக்கூடம் போய் வந்து கொண்டிருந்தேன். இரவில் கூடும் கூட்டத்திலும் உட்கார்ந்து வந்தேன். ஆனால் அந்தப் பணம் எப்படி மாயமாய் மறைத்தது என்று என்னால் ஊகிக்கக் கூட முடியவில்லை அதைப்பற்றி யோசிக்க யோசிக்க என்னுடைய குழப்பம் தான் அதிகமாகிக் கொண்டிருந்தது. வீட்டிலிருந்து புறப்படும் போது பணத்தைக் கையோடு எடுத்துக் கொண்டேனா, இல்லையா? வழியில் களைப்பாறுவதற்காக உட்கார்ந்தபோது துணிப்பையிலிருந்து பணப் பொட்டலம் எங்காவது விழுந்து விடவில்லையே? பத்திரமாயிருக்க வேண்டுமென்ற கருத்துடன் நான் அந்தப் பொட்டலத்தையும் ரொட்டிப் பொட்டலத்தையும் ஒன்றாகச் சேர்த்துக் கட்டியிருந் தேன். யார் கண்டது, எவனாவது வழிப்பறி ஆசாமி நான் தனி யாகச் செல்வதைப் பார்த்துவிட்டு என்னை வழி மறித்தால் என் னிடம் ரொட்டிப் பொட்டலத்தைத் தவிர வேறு எதுவும் இல்லை என்று பாசாங்கு செய்துவிட முடியுமில்லையா?

இப்போது பரோட்டாவும் போய் ரூபாயையும் இழந்தது தான் கண்ட பலன். பரோட்டாவின் மணத்தை மோப்பம் பிடித்து ஏதாவது நாய் அந்த மூட்டையைத் தூக்கிக்கொண்டு ஓடியிருக் குமோ? அல்லது அப்பாவி அசடு மாதிரித் தோன்றும் ஆயபூவே அதைத் தட்டிக் கொண்டு போயிருப்பானே? அவனைப் பார்த்தால் அப்படிச் செய்பவனாகத் தோன்றவில்லை. எந்த விதமான தயக்க

மும் அவனுடைய நடவடிக்கையில் தென்படவில்லை. அப்படி யானால் வீட்டுக்குள் நுழைந்து யார் அந்தப் பணத்தை எடுத்துக் கொண்டு போனது? இதே கவலைதான் இருபத்து நான்கு மணி நேரமும் என் மனத்தை அரித்துக் கொண்டிருந்தது. ராமா எவ் வளவோ நம்பிக்கையுடன் மாற்றிக் கொண்டு வருவதற்காக என் னிடம் கொடுத்திருந்த ரூபாய்களை நான் என்னுடைய மதியீனத் தால் பறி கொடுத்து விட்டேனே! நான் அத்தப் பணத்தை வாயில் போட்டுக் கொள்ளவில்லை. அம்மாதிரிக் கேவல எண்ணமே என் மனத்தில் தோன்றியதில்லை. ஆனால் இதை உண்மையென்று நம்ப ராமா தயாராக இருப்பானா? எதற்காக அவன் என்னை நம்ப வேண்டும்? நாளைக்கு நான் அவனிடம் போய், ''ஐயா, உன் னுடைய பணம் என்னுடைய பையிலிருந்து காணாமற் போய் விட்டது'' என்று கூறினால் அவன் என்ன சொல்வான்? ''இந்த அற்பப் பயல் ஐந்து-பத்து ரூபாய்களை நல்லபடியாக மாற்றிக் கொண்டு வந்து யோக்கியன் மாதிரி வேஷம் போட்டுவிட்டு நிறையப் பணம் கைக்கு வந்ததுமே வாயில் போட்டுக் கொண்டு விட்டான். கடைசியில் இவனுடைய சாயம் வெளுத்து விட்டது. நம்முடைய பட்டிக்காட்டுத் தனத்தைப் பயன்படுத்திக் கொண்டு தன் பையை நிரப்பிக் கொண்டு விட்டான்'' -ராமாக் கோனான் கட் டாயம் இப்படித்தான் சொல்வான். இயற்கை தானே? மக்களு டைய நல்லபிப்பிராயத்தைச் சம்பாதித்துவிட வேண்டுமென்று நான் பாடுபட்டதெல்லாம் நொடிப்பொழுதில் சரிந்துவிடப் போகிறது. இந்த எண்ணம் என் மனத்தில் தோன்றியபோதெல் லாம் நான் நிலைகுலைந்து போகலானேன். இவ்வளவு பெரிய தொகையை மாற்றிக் கொண்டு வரும் அபாயத்தை நான் ஏன் ஏற்றுக் கொண்டேன் என்று என்னை நானே நொந்து கொண் டேன். என்னால் இயன்றால் என்னிடமிருந்தே அந்தப் பணத்தை ராமாவுக்குக் கொடுத்துவிட்டு, பணம் பறிபோன விஷயத்தைப் பற்றி அவன் காதிலேயே போடாமல் இருந்து விட்டிருப்பேன். ஆனால் அதற்கு வழி ஏது? நான்கு புறமும் இவ்வாறு வழி அடைத்துப் போன நிலையில் நான் அந்தப் பணம் எங்கே போயிருக்க முடியும்; எப்படிப் போயிருக்க முடியும் என்ற சிந்தனை யில் மீண்டும் ஆழ்ந்து விடுவேன். தாது ஒரு வேளை ஏதாவது சூழ்ச்சி செய்திருப்பானோ என்ற சந்தேகம் நடுநடுவே என் மனத் தில் எழும். மாஸ்டரின் கௌரவத்தை மண்ணோடு மண்ணாக்கு

வதற்காக அவன்தான் இந்தத் திருட்டைச் செய்திருக்க வேண்டும் என்று அடிக்கடி எண்ணுவேன். ஆனால் அவன் இத்தனை நாட்கள் எப்படிச் சும்மா இருந்தான் என்பதற்குக் காரணமும் நான் புரிந்து கொள்ள முடியாமலிருந்தது. என் கிராமத்திலிருந்து திரும்பிய பிறகு இந்த இடைக் காலத்தில் ராமாவை நான் சந்திக்காமலில்லை. வழக்கம் போல் அவன் பள்ளிக்கூடத்துக்கு வந்து கொண்டிருந் தான். ஆனால் அவன் ஒருபோதும் பணத்தைப் பற்றிய பேச்சையே எடுக்கவில்லை. 'வாத்தியாரையாவிடம் பணம், நம் வீட்டுப் பெட்டியில் இருந்தால் எப்படி இருக்குமோ அவ்வளவு பத்திரமாக இருக்கிறது, இன்னும் மாறி இருக்காது; மாறியதுமே வாத்தி யாரையா தாமாகவே பணத்தை வீடு தேடி வந்து கொடுத்து விடு வார். அப்படி இருக்கும்போது நான் எதற்காக வாயைத் திறந்து கேட்க வேண்டும்? மனத்தின் அற்பத்தனத்தை ஏன் வெளிப்படுத்திக் கொள்ள வேண்டும்?' இவ்வித எண்ணங்களால் தான் ராமா ஒன்றும் கேட்காமலிருந்தான். ராமாக் கோனானைச் சந் திக்கவே கூடாது; அவனுடன் பேச்சு வைத்துக் கொள்ளக் கூடாது; இந்தக் கிராமத்தை விட்டே போய்விட வேண்டும்; இங் குள்ள மக்கள் யார் கண்ணிலுமே மறுபடியும் படக் கூடாது; இவ்வா றெல்லாம் நினைக்க ஆரம்பித்தேன். என் மேலேயே எனக்கு எரிச்சல் உண்டாகியது.

இதன் மத்தியில் ஒருநாள் நாட்டாண்மைக்காரரின் மைக்கறுப்பு நிறமுள்ள பேத்தி தன் புடைவை சரசரக்க என் வீட்டுக்கு வந்தாள். அறையில் நான் தனியாகத்தான் இருந்தேன். அவள் வாயிலில் நின்று எட்டிப் பார்த்தாள். ஒரு தடவை, இரண்டு தடவை, மூன்று தடவை எட்டிப் பார்த்துவிட்டு, புடைவைத் தலைப்பால் முகத்தை மூடிக் கொண்டு வெளியிலேயே நின்றாள்.

''யாரது?'' என்று கேட்டேன்.

''நான்தான்...அஞ்ஜா.''

''நாட்டாண்மை வீட்டு ''அஞ்ஜி'யா?''

''ஆமாம்.''

''என்ன வேண்டும்? உள்ளே வாயேன்.''

'அஞ்ஜி' நாணிக்கோணிக் கொண்டு உள்ளே வந்தாள். கைத் தறியில் நெய்த தகதகவென்ற சிவப்பு நிறமுள்ள புடைவையை உடுத்திருந்தாள் அவள். பச்சை நிறத்தில் ரவிக்கை. கிராமத்தி லும், நாட்டாண்மைக்காரர் வீட்டிலும் நான் இந்தப் பெண்ணை எப்

போதாவது பார்த்திருக்கிறேன். ஆனால் இவ்வளவு தூரம் கவனத்தைக் கவரும்படியான யுவதி அவள் என்ற உணர்வு எனக்கு ஏற்பட்டதில்லை. பதினன்கு வயது பூர்த்தியாகி, பதினைந்து வயதைத் தான் எட்டியிருந்தாள். இருந்தாலும் இருபது வயது மதிக்கத் தகுந்த பூரிப்பு அவளிடம் காணப்பட்டது.

அஞ்ஜி வெறுமே முன்தானையை இழுத்து விட்டுக் கொண்டு நெளிந்தவாறு கேட்டாள் : ''ஊருக்கு எப்போது போக வேண்டும், வாத்தியாரையா?''

வாரம் முடியும் தறுவாயில் இருந்தது. மறுநாள் சனிக்கிழமை. வேறு எந்த வேலைக்காக இல்லாவிட்டாலும் ராமாக் கோனனின் பணத்துக்காக நான் ஊருக்குச் செல்வது அவசியமாயிருந்தது.

''போவேன், நாளைக் காலை, ஏன்?''

''எனக்கு ஒரு வேலை செய்து கொடுப்பீர்களா?''

சனிக்கிழமையன்று அநேகருடைய வேலை என் பொறுப்பில் விடப்பட்டிருக்கும். யாருக்காவது மருந்து வாங்கி வர வேண்டியிருக்கும்; யாருடைய ரூபாய் நோட்டையாவது மாற்றிக் கொண்டு வரவேண்டியிருக்கும்; யாருக்காவது கடிதம் எழுத வேண்டியிருக்கும்.

''சொல்லேன். ஆகக் கூடிய வேலையாயிருந்தால் செய்கிறேன்.''

''எனக்காக இந்த ரவிக்கையைத் தைக்கச் சொல்லி வாங்கி வர வேண்டும்.''

நான் தடுமாற்றத்துடன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே அவள் அளவுக்காகத் தன்னுடைய பழைய ரவிக்கை ஒன்றையும் நேர்த்தியான ரவிக்கைத் துணி ஒன்றையும் என் எதிரே போட்டாள்.

''திருட்டுத்தனமாக இதைச் செய்கிறேன். என்னுடைய தாத்தாவிடம் சொல்ல வேண்டாம். கூலி வேலை செய்து நான் காசு சேர்த்து இந்தத் துணியை வாங்கியிருக்கிறேன். இரண்டு மாதமாகிறது, தைக்கக் கொடுப்பதற்குச் சௌகரியப்படவில்லை. தைக்கச் சொல்லி எடுத்து வந்தீர்களானால் தையல் கூலிக்கான காசைக் கொடுத்து விடுகிறேன்.''

முடியும், முடியாது என்று நான் கூறுவதற்கு முன்பே அஞ்ஜி அந்த ரவிக்கையையும் துணியையும் அங்கேயே விட்டுவிட்டுச் சென்று விட்டாள்.

# 11

சனிக்கிழமை பிற்பகலில் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்ததுமே நான் சந்தர்ப்பம் பார்த்து என் தந்தையிடம் பணம் தொலைந்து போனதைப் பற்றிக் கூறினேன். நான் கூறியதை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த பிறகு என் தகப்பனார் முதலில் அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டதற்காக என்னைக் கண்டித்தார்.

''நான் அவனுடைய நம்பிக்கையைப் பெற விரும்பினேன். அதனாலேயே அந்த ஆபத்தான பொறுப்பை மேற்கொண்டேன்'' என்று நான் என் சார்பில் எடுத்துரைத்தேன்.

''ஆனால் அந்தப் பணம் கையை விட்டுப் போய் விட்டால் அவ்வளவு தொகையை இட்டு நிரப்பக் கூடிய தகுதி உனக்கும் கிடையாது, உன் வீட்டவருக்கும் கிடையாது என்பதை நீ யோசித்துப் பார்த்திருக்க வேண்டும். அந்தத் தொகையை ஈடு செய்ய முடியாவிட்டால் இத்தனை நாளும் நீ சம்பாதித்திருக்கும் நம்பிக்கை இந்த நிகழ்ச்சியால் சரிந்து தானே போகும்?''

''அப்படித்தான் ஆகிவிட்டது. நான் செய்தது தவறுதான். ஆனால் நான் உங்களுடைய யோசனையைத்தான் கேட்கிறேன்.''

தந்தை சிறிது நேரம் மௌனமாக இருந்தார். காரணமில்லாமல் வம்பில் மாட்டிக் கொள்வது அவருக்குப் பிடிக்காது. தாம் உண்டு, தம் வேலை உண்டு. பண விஷயம் போன்ற ஆபத்தான விவகாரங்களில் சிக்கிக் கொள்ளக் கூடாது. பணம் காரணமாகக் கெடுதல் தான் கட்டாயம் நேரிடும்—இவ்வாறு அவர் எப்போதும் கூறுவது வழக்கம். எனவே எனக்கு நேரிட்டிருக்கும் ஆபத்தைப் பற்றி நான் கூறியதும் முதலில் அவர் கடுமையாகத்தான் பேசினார். ஆனால் பிறகு இந்தப் பிள்ளையிடம், 'நீ செய்த தவற்றுக்குப் பலனையும் நீயே அனுபவித்துக் கொள்' என்று கூறுவது சரியாயிருக்காது என்று அவருக்கே தோன்றியிருக்க வேண்டும்.

எனவே அவர் கூறினார்: ''அந்தப் பணத்துக்குச் சொந்தக்காரனிடம் பணம் திருட்டுப் போய் விட்டதைப் பற்றி ஒன்றும் ஒளிக்காமல் கூறிவிடு. 'உங்கள் கிராமத்தில்தான் திருட்டு நடந்திருக்கிறது, எல்லோரும் சேர்ந்து தேடுங்கள். திருட்டுப் போன

பொருள் கிடைத்துவிடும்' என்று சொல்லு. அவன் ஏதாவது அதிக மாக உளற ஆரம்பித்தால், 'நான் ஒன்றும் நாடோடி இல்லே, வீடு வாசல், நிலபுலம் எல்லாம் இருக்கிறது; அரசாங்க ஊழியன் வேறு. உன்னுடைய பணத்தைத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்' என்று கூறிவிடு!'' என்ருர் அப்பா.

எனக்கும் அது சரியென்றே தோன்றியது, ஆனுல் அவ்வாறு சொல்ல என்னுல் இயலாது என்பதையும் நான் என்னுள் உணர்ந் தேன். ராமா நம்ப மாட்டான். கிராமத்தவரும் நம்ப மாட்டார் கள். போலீஸில் தகவல் கொடுத்தாலும் விசேஷப் பலன் ஏற்படும் என்று சொல்ல முடியாது. போலீஸ் சேவகர்கள் கிராமத்தில் வந்து காரணமில்லாமல் அட்டகாசம் செய்வார்கள், கண்டவனே யெல்லாம் பிடித்து அடித்து நொறுக்குவார்கள், கிராமம் முழுவதுக்கும் தொல்லே உண்டாகும். இதைவிட, பணம் தொலேந்து போனதைப் பற்றி யாருக்கும் கூருமல், எப்படியாவது கைப்பணத்தைக் கொண்டு நஷ்டத்தை ஈடு செய்து விட்டு, செய்த தவற்றுக்கு, 'புத்தி புத்தி' என்று கன்னத்தில் போட்டுக் கொண்டு பேசாமலிருந்து விடுவது தான் உத்தமமானது என்ற எண்ணம் என் மூளேயில் உறுதிப் பட்டது.

பணம் எங்கிருந்து கிடைக்கும் என்று எண்ணிப் பார்த்த போது ஒரு வழியும் தென்படவில்லே. மூன்று நான்கு நண்பர்களிடம் கேட் டுப் பார்த்தேன்; இரண்டொரு வட்டிக் கடைக்காரர்களே அணுகிக் கேட்டேன்; ஆனுல் என்னேப் போன்ற சிறு பிள்ளேயை நம்பி யார் அவ்வளவு பணம் கொடுப்பார்கள்? சிலர் என் தந்தை அந்தக் கடனுக்குப் பொறுப்பு ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று சொன் ஞர்கள். மற்றவர்கள் வெளிப்படையாக முடியாது என்று மறுத்து விட்டார்கள். அலேந்து அலேந்து அலுத்துப் போனேன். முந்நூறு-முந்நூற்றைம்பது ரூபாய் கூட என்னுல் சேகரம் செய்ய முடிய வில்லேயே என்று எண்ணி மனம் நொந்து போனேன். என் முகம் விழுந்து போயிற்று. ஞாயிற்றுக்கிழமை இரவு நான் சாப்பிடக் கூட இல்லே. வெகு நேரம் வரை தூக்கம் கூடப் பிடிக்கவில்லே. அம்மா என்னுடைய இந்தத் தவிப்பைப் புரிந்து கொண்டுவிட்டாள். இருட்டிலேயே அவள் படுக்கையிலிருந்து எழுந்து என்னிடம் வந்தாள்.

''ராஜாராம், இன்னும் விழித்துக் கொண்டா இருக்கிருய்?'' என்று தணிவான குரலில் கேட்டாள்.

''உம்'' என்று நான் கூறியதும் அம்மாவின் சொரசொரப்பான கரம் என்னைத் தடவிக் கொடுத்ததை உணர்ந்தேன்.

''இதோ பார், தொலைந்து போன பணம் திரும்பக் கிடைக்குமா என்று முயற்சி செய்து பார். கோனான் மிகவும் தொந்தரவு செய்தால் உன்னுடைய தாத்தா ஊரில் எனக்குச் சொந்தமாக இருக்கும் வீட்டை விற்றுவிடு. நானூறு-ஐநூறு ரூபாய் கிடைக்கும். அதைக் கொடுத்தால் தீர்ந்தது. இவ்வளவு கவலைப்படும்படியாக என்ன இருக்கிறது?''

அன்னையின் இந்த ஆறுதல் வார்த்தையால் எனக்குத் தைரியம் ஏற்பட்டது. எனக்குக் கைகொடுக்க ஒருவர் இருக்கிறார்; தேவை நேரிட்டால் ராமாக் கோனானின் பணத்தை அடைத்துவிட முடியும் என்ற நிம்மதி தோன்றியது இரவு சாவடியில் கிராம மக்கள் கூடும் போது அவர்களிடம் நடந்தவற்றைக் கூறிவிடுவதென்று என் மனத்துக்குள்ளே தீர்மானம் செய்து கொண்டேன். ஆனால் அந்த இரண்டு விஷயங்களுமே கடினமாக எனக்குத் தோன்றின. தாயாரின் வீட்டை விற்கவும் நான் விரும்பவில்லை, பணம் தொலைந்து போன விஷயத்தை ராமாக் கோனானிடம் கூறவும் விரும்பவில்லை. இருதலைக் கொள்ளி எறும்பாகத் தவித்த என் நிலையை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல், அம்மாவிடம் நான் கவலையே இல்லாதிருப்பவன் போல் நடித்துவிட்டு, திங்கள் கிழமையன்று அதிகாலையில் பன்கர்வாடியை நோக்கிப் புறப்பட்டேன்.

திங்களன்று பள்ளிக்கூடம் நடத்திய பிறகு நான் வீட்டுக்கு வந்து சேர்ந்தேன். ராத்திரி பள்ளி அருகே கிராம மக்கள் கூடும் போது அவர்களிடம் திருட்டைப் பற்றிக் கூறி விடுவதென்று தீர்மானம் செய்து கொண்டிருந்தேன். இதெல்லாம் செய்வதற்கு முன்னால் நாட்டாண்மைக்காரரின் யோசனையையும் கேட்டுவிட வேண்டும் என்று எண்ணி ஆயபூவை அந்தக் கிழவர் வீட்டுக்கு அனுப்பி வைத்தேன். ''கொஞ்ச நேரத்துக்கு வந்து போங்கள். வாத்தியாரையாவுக்கு முக்கியமான வேலை ஆகவேண்டியிருக்கிறது'' என்று செய்தி சொல்லும்படி பணித்திருந்தேன். ஆயபூ சென்றதும், நடந்தவற்றை எந்த விதத்தில் கூறினால் நாட்டாண்மைக் கிழவர் நம்பும்படியாக இருக்கும் என்று என் மனத்துக்குள்ளேயே ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்தேன். இவ்வளவெல்லாம் நிகழ்ந்த பின்பும் கூட, இந்த விவகாரம் எனக்கு ஆபத்தை உண்டாக்கி விடாது என்ற நம்பிக்கை என் மனத்தின் ஒரு மூலையில் குடிகொண்டிருந்

த்து. பிரமாதமாக எதுவும் நடக்காமலே இந்தச் சிக்கல் தீர்ந்து விடும். வீணுக நான் துரும்பைத் தூணுக்கிக் கொண்டிருக்கிறேன். பணம் திருட்டுப் போயிருக்காது; எங்காவது தவறுதலாக வைத் திருப்பேன்; மறந்து போயிருப்பேன்.

இவ்வாறெல்லாம் ஏன் எனக்குத் தோன்றியது என்று கூற முடியாது. ஆனால் தோன்றியதென்னவோ உண்மை. இதில் ஏதோ பெரிய ஆபத்து இருப்பதான உணர்வே எனக்கு ஏற்பட வில்லை.

நாட்டாண்மைக் கிழவர் வீட்டிலிருந்து ஆயபூ வெறுப்புடன் திரும்பி வந்தான், அவனுக்கு வெறுப்பு ஏற்பட்டால் அவனுடைய நெற்றியில் சுருக்கம் தோன்றும்; கன்னம் உப்பிவிடும்; இரண்டு கைகளையும் மடக்கி மார்போடு சேர்த்து வைத்துக் கொள்வான். அவன் என் அறைக்குள் வந்ததுமே நான் கேட்டேன்: ''ஏன், கிழவர் வீட்டில் இல்லையா?''

''இல்லாமலென்ன? இல்லாமல் போவதற்கு அவரென்ன பெரிய கொம்பனு?''

''என்னதான் சொன்னுர்?''

''வரமுடியாதாம். இப்போது எனக்கு நேரமில்லை; என்றைக்கு நேரம் கிடைக்கிறதோ அன்றைக்கு வருகிறேன் என்று வாத்தி யாரையாவிடம் போய்ச் சொல்லு என்று கூறிவிட்டார்.''

கணநேரத்துக்கு நான் சோர்ந்து போனேன். நாட்டாண்மையிட மிருந்து இந்த மாதிரி பதில் வரும் என்று நான் சிறிதளவும் கற்பனை செய்யக்கூட இல்லை. எப்போதும் 'மாஸ்டர், மாஸ்டர்' என்று கூறிக் கொண்டு மிகுந்த சொந்த உணர்வுடன் நடந்து கொள்ளும் அந்த அன்புள்ள கிழவர் இவ்விதம் சிடுசிடுப்புடன் பேசியிருக்க மாட்டார். ''ஏன் ஆயபூ, வேடிக்கைக்காக அப்படிச் சொன்னுரா, அல்லது உண்மையாகவேதானு?'' என்று கேட்டேன்.

''இதில் என்ன வேடிக்கை இருக்கிறது? எரிச்சலும் புகைச்சலு மாகத்தான் கூறினுர்!'' ஆயபூவின் மூக்கு நுனி கோபத்தால் புடைத்திருந்தது. வாத்தியாரய்யாவின் அழைப்புக்கு நாட்டாண் மைக் கோனுர் இந்த மாதிரி பதில் சொல்லி விட்டாரே என்ற வருத்தம் நேரே அவன் நெஞ்சில் தைத்திருந்தது. சற்றுப் பொறுத்து அவன் கூறினுன்: ''உங்களிடம் அந்த நாட்டாண்மை மிகவும் கோபமாக இருக்கிருர் என்று தெரிகிறது''

எனக்கு ஒன்றும் புரியவில்லை. கிழவர் ஏன் கோபம் கொண்டிருக்கிறார்? நான் என்ன தப்புச் செய்து விட்டேன்? தொப்பியைப் போட்டுக் கொண்டு நான் நேரே நாட்டாண்மைக் கிழவரின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தேன்.

அடுப்பினருகே வைக்கப்பட்டிருந்த மண் அகலின் மங்கலான ஒளி அந்த வீட்டில் நிழலாடியது. அடுப்பின் புகை வீடெங்கும் சூழ்ந்திருந்தது. அஞ்ஜி சாயங்காலத்துக்கான ரொட்டிகளை வாட்டிக் கொண்டிருந்தாள். நான் போய்ச் சேர்ந்ததுமே அவள் ஜாடையாக என்னைப் பார்த்தாள். நான் அவளுடைய ரவிக்கையைத் தைத்துக் கொடுத்ததைப் பற்றிப் பெரியவருக்குச் சொல்ல வேண்டாம் என்பதே அந்தப் பார்வையின் அர்த்தம். சுவரோடு முதுகைச் சேர்த்துச் சாய்ந்து கொண்டு குந்தினாற் போல் உட்கார்ந்திருந்தார் நாட்டாண்மை. என்னைப் பார்த்துவிட்டு, ''வாருங்கள்'' என்று கூடச் சொல்லவில்லை அவர்.

தணிவான அந்த வீட்டுக்குள் நின்று கொண்டு நான் கேட்டேன்: ''என்ன பெரியவரே, ஓய்வாக உட்கார்ந்திருக்கிறீர்கள் போல் இருக்கிறது!''

நாட்டாண்மை வெறுமே 'ஊம்' கொட்டி விட்டு ஒன்றும் பேசாமலே உட்கார்ந்திருந்தார்.

எனக்கு மிகவும் சங்கடமாயிருந்தது. புகையினால் கறுப்பான முகட்டைப் பார்த்தவாறு நான் நின்றிருந்தேன். அஞ்ஜிக்கும் எக்கச்சக்கமான தவிப்பு. மாற்றி மாற்றி என்னையும் கிழவரையும் இரண்டொருமுறை பார்த்தாள். அவளுடைய தவிப்பு அவளுடைய முகத்தில் பிரதிபலித்தது. அடுப்புக்காக வெளியிலிருந்து சுள்ளிகள் எடுத்துவரும் சாக்கில் அவள் எழுந்து வெளியே சென்றுவிட்டாள். நானும் நாட்டாண்மைக் கிழவரும்தான் தனித்திருந்தோம். அவர் முன் போலவே விலகி உட்கார்ந்திருந்தார். நான் என்ன செய்வதென்று புரியாமல் நின்று கொண்டிருந்தேன்.

அடுப்பு அணைந்து நிறையப் புகை கிளம்பிக் கொண்டிருந்தது அப்போது, அடுப்பின் மீது ஒரு பாத்திரத்தில் வெந்து கொண்டிருந்த வெஞ்சனத்தின் மணம் ஆவியுடன் கலந்து வந்து கொண்டிருந்தது. 'தளபுள' என்று கொதிக்கும் ஒலி கேட்டுக் கொண்டிருந்தது. வெளியிலிருந்து திறந்த வாயில் வழியே அடித்த காற்றினால் அகல் விளக்கின் ஜ்வாலை படபடத்துக் கொண்டிருந்தது. சுவரில் விழுந்த கறுப்பு நிழல்களும் அதற்கேற்ப ஆடிக் கொண்டிருந்தன.

என்ன பேசுவதென்றே தோன்றவில்லை. வெறுமே நின்றிருந்து விட்டுப் பிறகு தணிவான குரலில், ''பெரியவரே, நான் உங்களுடன் சில வார்த்தைகள் பேச வேண்டுமென்று இருந்தேன். ஒரு விஷயம் உங்களிடம் கூற வேண்டியிருக்கிறது ..'' என்றேன்.

கிழவர் சிறிதும் கவனிக்கவே இல்லை.

சுள்ளிகளைக் கட்டி எடுத்து கொண்டு அஞ்ஜி உள்ளே வந்தாள், குனிந்து அடுப்பை ஊத ஆரம்பித்தாள்.

கிழவர் என்னிடம், ''நீ போய்விடு இங்கிருந்து. ஒரு விஷயமும் சொல்ல வேண்டியதில்லை. நான் கேட்கவும் தயாராக இல்லை.'' என்று கூறிவிட்டு எழுந்து என்னைக் கடந்து வெளியே சென்று இருளில் மறைந்தும் போய் விட்டார்.

இந்த அவமானத்தினால் என் முகம் வெளுத்துப் போய் விட்டது. காது வரைக்கும் எரிவதுபோல் இருந்தது. கூட்டி விழுங்கிக் கொண்டு நான் வெளியே செல்லத் தொடங்கினேன்.

அப்போது அஞ்ஜி மெல்லிய குரலில், ''அந்தத் தறிதலை தாதூ பெரியவரிடம் என்ன சொன்னானோ தெரியவில்லை. '' என்றாள்.

''ஏன்?''

''என்ன உளறினானோ யாருக்குத் தெரியும்? வத்தி வைப்பதே அவனுடைய தொழிலாயிற்றே!''

நான் கேட்டுக் கொண்டதோடு சரி. இளம் பெண் வீட்டில் தனியாக இருக்கும்போது அவளுடன் பேசிக் கொண்டு நிற்பது சரியல்ல என்று அறிந்து நான் அவளுடன் ஒன்றும் பேசாமலே வெளியே வந்து விட்டேன். இருளில் தட்டுத் தடுமாறியவாறு என் அறைக்கு வந்து சேர்ந்தேன். ஆயபூ அகல் விளக்கை ஏற்றி வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். கொஞ்ச நேரத்துக்கு நாங்களிருவரும் ஒருவரோடொருவர் எதுவும் பேசாமலிருந்தோம். ஆனால் நான் என் காதால் கேட்ட விஷயத்தைச் சொல்லாமலிருக்க முடியவில்லை.

''கோள்சொல்லித் தாதூ நாட்டாண்மையிடம் ஏதோ வத்தி வைத்திருக்கிறான் ஆயபூ. அதனால் தான் நாட்டாண்மை என்னிடம் கோபமாயிருக்கிறார்.''

திடீரென்று புதிருக்கு விடை தெரிந்து விட்டதுபோல் தோன்றியது ஆயபூவுக்கு.

''அப்படியா சமாசாரம்?''

''ஆம், அப்படித் தான் தெரிகிறது. அது உண்மை என்றே நினைக்கிறேன்''.

''சந்தேகமென்ன? அந்தக் கோள்மூட்டிக்கு உங்களிடம் ரொம்பப் பொருமை, வாத்தியாரையா!''

''பொருமைப்பட என்ன இருக்கிறது? நான் அவனுக்கு ஒரு கெடுதலும் செய்யவில்லையே!''

''நீங்கள் கிராமத்துக்கு வந்ததிலிருந்து அவனுடைய அடாவடித்தனத்துக்கு மதிப்பே இல்லாது போயிற்றே!''

''அவன் அடாவடி ஆசாமிதானு?''

''இல்லாமலென்ன? வேறு என்ன பிழைப்பு அவனுக்கு? இவனைப் பற்றி அவனிடம் மூட்டி விடுவது, அவனைப் பற்றி இவனிடம் மூட்டி விடுவது—இந்தத் தில்லுமுல்லு செய்வதே தொழில்!''

நாவலிலும் நாடகங்களிலும் 'வில்லன்' வருவது போல் இந்தக் கோள்மூட்டி தாதூ ஏன் இப்படித் தொல்லை கொடுக்கிறுன் என்று எனக்குப் புரியவில்லை. நான் அவனுக்கு எவ்விதத் தீங்கும் செய்யவிலலை, எந்தத் தவறும் அவன் விஷயத்தில் செய்ததில்லை. ஆறல் அவன் ஆரம்பத்திலிருந்தே என்னிடம் ஜன்மப் பகை பாராட்டுவது போல் என்னிடம் மல்லுக்கு நின்று கொண்டிருக்கிறுன். காகமும் ஆந்தையும் போல், கீரியும் பாம்பும் போல் தான் இருக்கிறது எங்கள் உறவு. நான் கிராமத்துக்கு வந்ததனுல் அவனுடைய செல்வாக்கு குறைந்து விட்டது, அவனுடைய அடாவடித்தனத்தை யாரும் மதிப்பதில்லை, யாரும் அவனுடைய யோசனையைக் கேட்பதில்லை என்றெல்லாம் இருந்தால், முதல் சந்திப்பிலேயே அவன் ஏன் என்னிடம் கண்டபடி பேசினுன்? ஒருவேளை எனக்கு முன்பு இருந்த ஆசிரியர் அவனுக்கு ஏதாவது தவறு செய்திருந்து அதனுல் ஆசிரிய வர்க்கத்தின் மேலேயே அவனுக்கு வெறுப்பு ஏற்பட்டு விட்டதோ என்னவோ! ஆனுல் இத்தனை நாளும் நான் நடந்துகொண்ட முறையிலிருந்து அவனுடைய அந்த வெறுப்பு மாறியிருக்க வேண்டுமே!

ஆயபூ எழுந்து உணவு தண்டி வருவதற்காக வெளியே சென்று விட்டான். ஏற்கெனவே ராமாக் கோனுனின் பண விவகாரம் என்னைத் தூங்கவிடாமல் வதைத்துக் கொண்டிருந்தது. அதற்கு மேல் அந்தக் கோள்மூட்டியின் பழைய விரோதம் வேறு தலைதூக்கியிருந்தது ஆரம்பத்திலிருந்தே என்னை அரவணைத்து ஆதரித்து வந்தவரான, கிராமத்தில் இணையில்லாத செல்வாக்கு உடைய நாட்டாண்மைக்காரரும் என்னைப் புறக்கணிக்க ஆரம்பித்துவிட்டார்.

கொஞ்ச நாளாக எனக்கு நம்பிக்கை தோன்றியிருந்தது. கிராமத்தில் ஏதாவது சிறிது நல்ல காரியம் செய்ய முடியும்; எனது பணித் துறையின் பாராட்டுதலைப் பெற முடியும் என்று நம்பிக்கொண்டிருந்தேன். . அதற்குள் இவ்வளவெல்லாம் நிகழ்ந்து விட்டது.

என் மனம் சோர்வடைந்தது. எழுந்து வாயைக் கொப்பளித்து விட்டு வீட்டிலிருந்து கொண்டு வந்திருந்த ரொட்டிப் பொட்டலத்தை அவிழ்த்தேன். தனியாகவே சாப்பிட ஆரம்பித்தேன். நான் ரொட்டியை மென்று தின்னும் சத்தம் கூடப் பெரிதாக ஒலித்தது என் காதுகளில்.

இந்த நேரத்தில் தான் ஆனந்தா ராமோஷி அங்கே வந்தான். வாயிலுக்கு வெளியே நின்றவாறே அவன், ''தனியாகத் தான் இருக்கிறீர்களா வாத்தியாரையா?'' என்று கேட்டான்.

''ஆமாம். என்ன சமாசாரம், ஆனந்தா?''

''சாப்பிட்டு முடியுங்கள். நான் பிறகு வருகிறேன்.''

''நான் சாப்பிட்டாயிற்று. ஏதாவது என்னால் ஆகவேண்டியிருக்கிறதா?''

மிஞ்சியிருந்த பரோட்டாக்களைச் சுற்றி வைத்துவிட்டு நான் கைகளைக் கழுவிக் கொண்டேன். ஆனந்தா உள்ளே வந்து உட்கார்ந்து கொண்டான். அறைக் கதவை அவன் மூடிவிட்டுத்தான் வந்தான்.

தணிவான குரலில், ''உங்களுடைய பணம் ஏதாவது இந்த அறையிலிருந்து காணுமற் போய்விட்டதா?'' என்று கேட்டான்.

எனக்கு ஒரே அதிர்ச்சி. காதும் காதும் வைத்தாற்போல் நடந்த அந்த நிகழ்ச்சியைப் ட்ற்றி இந்த ராமோஷிக்கு எப்படித் தெரிந்தது? யார் சொல்லியிருக்க முடியும்? பணம் திருட்டுப் போய் விட்டது என்பது இவனுக்குத் தெரிந்ததென்றால், அந்தப் பணம் யார் கொடுத்தார்கள், எதற்காகக் கொடுத்தார்கள், எல்லா விஷயமுமே தெரிந்து வைத்திருக்கிறான் என்றுதானே அர்த்தம்! அதாவது, இத்தனை நாட்களும் நான் என் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காகச் செய்த முயற்சி எல்லாம் பாழாகி விட்டது. ராமாக் கோனன் என்னிடம் மாற்றிக் கொண்டு வருவதற்காகக் கொடுத்திருந்த பணத்தை நான் வாயில் போட்டுக் கொண்டு விட்டேன் என்ற செய்தி அம்பலமாகி விட்டது. இப்போது இவனிடம் உண்மை விஷயத்தைச் சொல்வதா, சொல்லாமல் தட்டிக் கழிப்பதா, ஒன்றிலும் பட்டுக் கொள்ளாமல் பதில் சொல்

வதா? நான் ஒரேயடியாகக் குழம்பிப் போனேன். என்னையறியா மலே வார்த்தைகள் என் வாயிலிருந்து வந்தன.

''ஆமாம் உனக்கு யார் சொன்னார்கள்?''

''எனக்குத் தெரியும்!''

''ஆனால் எப்படி?''

சிறிதும் பதற்றமில்லாமல் ராமோஷி கூறினான்: ''நான்தான் அதை எடுத்துக் கொண்டு போனேன்.''

என்னால் என் செவிகளையே நம்ப முடியவில்லை. திறந்த வாய் மூடாமல் கண்கள் வெளியே வந்துவிடும் போன்ற வியப்புடன் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

ஆனந்தா தன் கையோடு கொண்டு வந்திருந்த ஒரு துணி மூட்டையை அவிழ்துப் பத்திரமாக அதில் முடிந்து வைத்திருந்த பணத்தை எடுத்து என் எதிரில் வைத்தான். ''எப்படி எடுத்துக் கொண்டு போனேனோ, அப்படியே திரும்பக் கொண்டுவந்திருக் கிறேன். இந்தத் தொல்லையை நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்.''

நான் அந்தப் பணத்தின்மீது பாய்ந்தேன். அப்படியே அதை அள்ளியெடுத்துக் கொண்டேன். என் மனத்திலிருந்து ஒரு பெரிய சுமை இறங்கியது போல் இருந்தது. என்னுடைய கஷ்டகாலத்தில் கைகொடுக்க வந்த கடவுளைப் போலவே ஆனந்தா ராமோஷி என் கண்களுக்குக் காட்சியளித்தான்.

''எண்ணிப் பார்த்துக் கொள்ளுங்கள். நான் மூன்று ரூபாய் பத்தணா இதிலிருந்து எடுத்துச் சாப்பிட்டுவிட்டேன். அதை நான் திருப்பிக் கொடுக்கப் போவதில்லை. மிச்சப் பணம் விள்ளாமல் விரியாமல் அப்படியே இருக்கிறது'' என்றான் ஆனந்தா.

அந்த ராமோஷியின்மீது எனக்குக் கோபமும் வந்தது, கூடவே அன்பும் பிறந்தது.

''ஆனந்தா, பணத்தை ஏன் எடுத்துக் கொண்டு போனாய்? உனக்கு அது எங்கே அகப்பட்டது?''

''பண்டரிநாதன் ஆணையாகச் சொல்கிறேன், மாஸ்டர்ஜி. நான் பணத்தை எடுத்துக் கொண்டு போகவேண்டுமென்று எடுத் துப் போகவில்லை. உங்களிடம் என் வயிற்றுக்காக ரொட்டி கேட்டு வாங்கிச் செல்லவேண்டும் என்றுதான் வந்திருந்தேன். நீங்கள் தூங்கிக் கொண்டிருந்தீர்கள். அயர்ந்து தூங்குபவரை எப்படி எழுப்புவது? நீங்கள் கட்டிக் கொண்டு வந்திருந்த ரொட்டிப் பொட் டலம் கண்ணில் பட்டது. அதன் வாசனை மூக்கைத் துளைத்தது.

அப்படியே அந்த ரொட்டிப் பொட்டலத்தை எடுத்துச் செல்ல விரும்பினேன். 'வாத்தியாரையா விழித்துக் கொண்டதும் ரொட்டியைக் காணவில்லை என்றால் நாய் எடுத்துப் போயிற்று என்று நினைத்துக் கொள்ளப் போகிறார்'—இப்படி எண்ணி நான் ஓசைப்படாமல் அந்தப் பொட்டலத்தை எடுத்துக் கொண்டு வீட்டுக்குப் போய் விட்டேன். பொட்டலத்தைப் பிரித்ததும்தான், அதில் ரொட்டி மட்டும் இல்லை. குவியலாகப் பணமும் இருக்கிறது என்று தெரிந்தது. பேராசையை என்னால் அடக்கவே முடியவில்லை....'' என்றான் ஆனந்தா.

''சரிதான். தலைபோகிற நிலை வந்துவிட்டது எனக்கு!''

''அப்படி ஒன்றும் நேர்ந்துவிட வில்லையே. பாண்டுரங்கன் உங்கள் பின்னாலிருந்து உங்களைக் காக்கிறான், வாத்தியாரையா. நானோ ஏழை, இவ்வளவு பணத்தை ஜீரணம் செய்வது எனக்குப் பெரிய காரியம் இல்லை, ஆனால் ஒரு வாரம் பத்து நாள் இந்தப் பணத்தை என்னிடம் வைத்திருந்தேனே, விடாமல் என் மனத்தில் இதே எண்ணம்தான். 'அப்பா ஆனந்தா. வாத்தியாரையாவின் பணத்தை ஏனடா எடுத்துக் கொண்டாய்? அவரென்ன மிராசுதாரா? வட்டிக்கடைக்காரரா? அவருக்கு ஏன் இந்தக் கஷ்டத்தைக் கொடுக்கிறாய்? எப்போதும் அவருடைய பள்ளிக்கூடத்தில் உட்கார்ந்துவிட்டு இப்படி மோசம் செய்வது சரியல்ல.' ஆமாம் வாத்தியாரையா, இன்றைக்கு அந்தப் பணத்தை உங்கள் காலடியில் கொண்டுவந்து வைத்துவிட்டேன். இனி நீங்கள் என்மேல் வழக்குத் தொடர்ந்தாலும் சரி, ஜெயிலில் தள்ளினாலும் சரி, அல்லது இப்படியே விட்டு விட்டாலும் சரி!''

இவ்வளவு விஷயத்தையும் ஆனந்தா இவ்வளவு எளிமையாக, இவ்வளவு திறந்த மனத்துடன் கூறியதும் அவனை என்ன சொல்வதென்று எனக்குப் புரியவில்லை. சிறியதும் பெரியதுமான திருட்டு வேலைகள் செய்து பழகிய இந்த ராமோஷி இது விஷயத்தில் எவ்வளவோ கைதேர்ந்தவன்தான். ஆனால் அவனாக வலியவந்து பணத்தைத் திரும்பவும் கொடுத்திருக்கிறான். தவிரவும், திருடுவதற்காகத்தான் என் வீட்டில் நுழைந்திருந்தான் அவன். ஆனால் ரொட்டிகளைத் திருடுவதற்காக; பணத்தை எடுத்துச் செல்லவேண்டும் என்ற எண்ணமே அவனுக்கு உண்டாகவில்லை. பணம்தான் அவனுடன் கூடவே சென்றுவிட்டது. இப்போது என்மேல் இரக்கம் பிறந்ததால்தான் பணத்தைத் திருப்பி என்னிடம் சேர்த்துவிட்டதாக

அவன் கதை அளக்கிறான். ஆனால் உண்மை அதுவல்ல. இன்றில்லா விட்டால் நாளை, திருட்டு கட்டாயம் அம்பலமாகிவிடும் என்று பயந்தே ஆனந்தா நல்ல மனிதன் ஆகிவிட்டான். சிறுசிறு திருட்டுக் கள் செய்த பிறகு பத்துப் பதினைந்து நாட்களுக்குள்ளேயே பொருளுக்கு உடையவனிடம் போய்த் திருட்டை ஒப்புக் கொண்டு விடுவது அவன் வழக்கம். திருட்டுப் போகும் பொருளும் மிகுந்த அற்பமானதாக இருக்கும்; அதனால் நாலுதிட்டு திட்டுவதைத் தவிர யாரும் அவனை எதுவும் செய்வதில்லை. ஆனந்தா சொல்லுவான்— ''வாயிழந்து கேட்டால் யாரும் கொடுப்பதில்லை, அதனால்தான் ஓசைப்படாமல் எடுத்துக் கொண்டு போய்விடுகிறேன். நான் அதிகமாக எடுத்துக் கொள்கிறேனா என்ன? வயிற்றுக்கு எவ்வளவு தேவையோ அவ்வளவுக்குமேல் எனக்கு ஆசை கிடையாது. மாடு கள் சாப்பிட்டுவிடுகின்றன; பறவைகள் சாப்பிட்டுவிடுகின்றன; புழு பூச்சிகள் சாப்பிட்டுவிடுகின்றன. அப்படியே ஆனந்தா சாப்பிட்டு விட்டான் என்று சொல்லிக் கொண்டு வருத்தப்படாமலிருங்கள்.''

ஆனந்தா கால்மேல் கால்போட்டுக் கொண்டு என் எதிரே உட்கார்ந்து நான் என்ன சொல்லப் போகிறேன் என்று எதிர் நோக்கி இருந்தான்.

எனக்கு மிகுந்த கோபம் வந்தது. இந்தப் பயலுடைய முகத்தி லேயே மறுபடியும் விழிக்கக் கூடாது என்று தோன்றியது. இவனுடைய முட்டாள் தனத்தினால் எனக்கு எவ்வளவு மனத்துன்பம் அநுபவிக்க வேண்டியிருந்தது! கடந்த எட்டு நாட்களாக என் பிராணன் எப்படித் தவித்துக் கொண்டிருந்தது என்பது எனக்குத் தான் தெரியும்.

''பெரிய அறிவாளிதான். போய் விடு இங்கிருந்து! மறுபடியும் உன் முகத்தைப் பார்க்கக்கூட நான் விரும்பவில்லை!'' என்று கத்தினேன்.

ஆனந்தா ஒன்றுமே கூறவில்லை. காதில் செருகியிருந்த துண்டுப் பீடியை எடுத்து அகல் விளக்கில் பற்றவைத்துக்கொண்டு வெளியே சென்றுவிட்டான்.

நான் எழுந்து நேரே ராமாக் கோனாரின் வீட்டுக்குச் சென்று பணத்தை அவனிடம் ஒப்படைத்தேன். அதன் பிறகுதான் நான் நிம்மதியாக மூச்சுவிட முடிந்தது.

''அவசரம் ஒன்றுமில்லையே வாத்தியாரையா பணம் உங்கள் வீட்டில் இருந்தாலும் என் வீட்டில் இருந்தாலும் ஒன்று தானே?'' என்றான் ராமாக் கோனான்.

''உண்மையான பேச்சு!'' என்றேன் நான்.

இடையில் என்னென்ன நிகழ்ந்தது என்பதைப் பற்றி அவன் கற்பனை கூடச் செய்திருக்கமாட்டான். கடைசியில் நான் அங்கிருந்து திரும்பும்பொழுது ராமாவிடம், ''பணத்தை வீட்டில் வைத்துக் கொள்ள வேண்டாம். எதிலாவது முதலீடு செய்யுங்கள். நிலம் வாங்குங்கள். ஆடு வாங்குங்கள். ஆனல் வீட்டில் வைத்துக் கொள்வது ஆபத்து. கெட்ட காலம் நம்மைக் கேட்டுக் கொண்டு வருவதில்லை'' என்று கூறினேன்.

சில நாட்களுக்குப் பிறகு ராமா அந்தப் பணத்தைக்கொண்டு ஆடுகள் வாங்கினன். அவனுடைய மந்தை மிகவும் பெரியதாகி விட்டது.

# 12

வானம் பார்த்து விவசாயம் செய்த கம்புப் பயிர் மெள்ளமெள்ள வளர்ந்து கொண்டிருந்தது. அதன் கதிர்கள் வெளியே வெடித்து வந்தன. பசுமையான வயலில் பழுப்பு நிறமான கதிர்கள் எங்கும் அசைந்தாட ஆரம்பித்தன. விரைவிலேயே ஆழ்ந்த ஊதா நிறம் உள்ள பூந்தாதுக்களுடன் அவை மலர்ந்தன. பூந்தாதுக்கள் அலை மோதவும் சிற்றெறும்புகள் கதிர்களில் சாரி சாரியாக ஏறத் தொடங்கின. தேனீக்கள் கதிர்களைச் சுற்றி வட்டமிட ஆரம்பித்தன. மஞ்சள் நிறமுள்ள பட்டுப்பூச்சிகள் ஜோடி ஜோடியாகக் காற்றில் மிதந்தவாறு வந்து கதிர்களில் உட்கார்ந்தன. அவ்வப்போது வீசியடிக்கும் காற்றில் பூந்தாதுக்கள் பறக்க ஆரம்பித்தன. கதிர்கள் வெறுமையாய் நின்றன. கம்புப் பயிருடன் சேர்ந்து விதைக்கப் பட்ட கடலை, காராமணி, பாசிப்பயறு முதலியவற்றின் கொடிகள் வீசிப்படர ஆரம்பித்தன. அவற்றின் காய்கள் கொத்துக் கொத்தாக அங்கங்கே தோன்ற ஆரம்பித்தன. மொச்சைப் பயிர் பூத்துக் குலுங்கியது. துவரையின் நிமிர்ந்து நிற்கும் செடிகளில் கரிய நிறமுள்ள காய்கள் தோன்றி அவற்றில் பயறு கட்டத் தொடங்கியது. வேர்க்கடலைப் பயிரின் வேர்களில் வெண்மையான முடிச்சுகள் விழ ஆரம்பித்தன. வரப்புகளில் முளைத்திருந்த நாணல் புற்களில் வெளிறிய நீலநிறமுள்ள கொண்டைகள் தோன்றின.

பூந்தாதுக்களால் நிறைந்திருந்த கம்பங்கதிர்கள் விரைவிலேயே பள பளக்கும் தானிய மணிகளுடன் வளர்ந்தன. பறவைகள் கூட்டம் கூட்டமாக அந்தப் பால்மணிகளைக் கொத்துவதற்குப் பாய்ந்தன.

நிலபுலங்களின் சொந்தக்காரர்கள் அதிகாலையிலேயே எழுந்து காவல் காப்பதற்காக வயல்களுக்குச் செல்ல ஆரம்பித்தனர். பன் கர்வாடியைச் சேர்ந்த பெண்களும் சிறுவர்களும் நாட்கூலிக்காகப் பக்கத்துக் கிராமங்களில் உள்ள வயல்களுக்குச் சென்று வந்தனர்.

பச்சைப் பசேலென்றிருந்த புற்களை மேய்ந்த ஆடுகள் நன்கு கொழுத்துக் காணப்பட்டன. கொழுப்பு ஏறி உருண்டு திரண்டு காட்சியளித்தன. பணக் கஷ்டத்திஞல் யாராவது மேய்ப்பவன் அவற்றை விற்கக் கொண்டுபோஞல் அந்தக் கொழுத்த ஆடுகளுக்கு நல்ல விலை கிடைத்துக் கொண்டிருந்தது.

கம்பு நன்ருக முற்றிவிட்டது. குழந்தைகள் புதிய கம்பங் கொண்டைகளை உண்டு கழுக்கு மொழுக்கென்று ஆகிவிட்டனர். தசரா வந்தது. மக்கள் புதிய கம்பங்கதிர்களை ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொண்டனர். பிறகு அறுவடைக் கோலாகலம் துவங்கி யது. ஐந்து மாதங்களாக வளர்ந்திருந்த வலுவான கம்பந்தாள் கள் அறுவடைக் கத்தி பட்டு மண்ணில் சாய்ந்தன. அவற்றை அப்படியே விட்டுவிட்டால் பூச்சிகளும் எறும்புகளும் கதிர்களைத் தின்றுவிடும். எனவே அவற்றைக் கையோடு கையாக ஒன்று சேர்த்துக் கட்டுக்கட்டாகக் கட்டி அவைகளை நிறுத்தி வைத்துக் குடிசை போன்ற வடிவில் குவியல்கள் அமைக்கப்பட்டன. அந்த அழுத்தலிஞலும் வெப்பத்திஞலும் கதிரில் உள்ளடங்கியிருந்த தானிய மணிகள் மேலெழும்பி வந்தன. பிறகு இரண்டு மூன்று நாட்கள் கழிந்ததும் அந்தப் பெரிய குவியலை அவிழ்த்துச் சிறு சிறு குவியல்களாகப் பிரித்துப் போட்டனர். ஒன்றுக்கொன்று ஆதார மாக நிறுத்திவைக்கப்பட்ட அந்தக் கதிர்க்கட்டுகள் வெயிலில் காய்ந்தன. ஈரமான தானிய மணிகள் உலர்ந்து போயின. காலை யும் மாலையும் அங்கே பறவைகள் கூட்டம் போட ஆரம்பித்தன.

அவசரத் தேவையுள்ளவர்கள் கட்டுக்களைப் பிரித்துக் கதிரடித் துக் கொண்டனர். அவர்கள் வீட்டுக் கால்நடைகள் சொரசொரப் பான தாள்களைத் தின்றன. வீட்டு மனிதர்கள் பச்சைக் கம்பு ரொட்டிகளைச் சாப்பிட்டனர் வீட்டில் சாப்பாட்டுக்குத் தட்டில்லா தவர்கள் அவசரப்படவில்லை. மற்ற வேலைகள் முடியும் வரை தான டிக்கும் வேலையைத் தள்ளிப் போட்டனர். ஆஞல் இன்றில்லாவிட்

டால் நாளை, அவர்களும் அந்தக் கம்பங்கட்டுக்களைப் பிரித்துப் போட்டுத் தாளடித்துத் தான் ஆகவேண்டும்.

மெள்ளமெள்ளப் பயறு வகைகளை அறுவடை செய்யும் முறை வந்தது. உலர்ந்த காய்களின் சலசலப்பு ஒலிக்க ஆரம்பித்தது. பிறகு மொச்சை அறுவடை ஆயிற்று, நிலக்கடலை அறுவடை நடந்தது, துவரைக்காய்கள் சேகரம் செய்யப்பட்டன. வெறுமையான திறந்த வயல்களில் கால்நடைகள் இஷ்டம்போல் அலைய ஆரம்பித்தன. ஆடுகள் அங்கங்கே கிடைத்தவற்றை மேய்ந்துகொண்டு சென்றன. பழுப்பும் சிவப்புமாகக் கம்பம்பயிர் நிறைந்திருந்த வயல்கள் இப்போது வெறிச்சோடிக் கிடந்தன.

கடுமையான குளிர் ஆரம்பமாயிற்று. காலையிலும் மாலையிலும் குப்பை கூளங்களை ஒன்று சேர்த்து அங்கங்கே நெருப்பு மூட்டி மக்கள் குளிர்காய ஆரம்பித்தனர். பனியினால் ஒவ்வொருவருடைய உதடுகளிலும் முகத்திலும் வெடிப்புத் தோன்றியது. மேய்ப்பவர்களின் உடம்புகள் கம்பளிப் போர்வையிலிருந்து வெளிப்படாமலே இருந்தன. நீரோடைகளிலும் கிணறுகளிலும் காலை நேரத்தில் மஞ்சு தவழ்ந்தது.

இதன் நடுவே, ஆவணி மாதத்தில் விதைத்திருந்த சோளப் பயிர் தலைதூக்கியது. கரிய மண்ணிலிருந்து வெளிவந்த சோளச் செடிகள் முழங்காலளவுக்கு வளர்ந்துவிட்டன. பின்பு இடுப்புவரை எட்டிவிட்டன. நடுநடுவே நட்டுவைக்கப்பட்ட கரும்புக் கணுக்களின் வரிசைகள் முளைத்தெழுந்து அலைமோதின. .கடலைப் பயிரின் சிறிய சிறிய ஊதாப்பூக்கள் மலர்ந்தன. பார்த்துக் கொண்டிருக்கும் போதே சோளக் கொண்டைகள் வெளிப்பட்டன. கரும்பின் செடிகளிலும் அழகிய மலர்கள் மலர்ந்தன. கடலைச் செடிகளில் கடலைக் காய்கள் கொத்துக் கொத்தாகத் தொங்கின. பச்சைச் சோளத்தாள்களைத் தின்று கால்நடைகள் ஊட்டம்பெற்று மினுமினுப்புடன் தென்பட்டன. கொழுப்பு ஏறிப்போய்க் கொம்புகளால் மண்ணைக் கிளறியெறிய ஆரம்பித்தன. முற்றிய கரும்பையும் பச்சைக் கடலையையும் தின்பதற்குச் சிறுவர்கள் திருட்டுத்தனமாக அலைந்தனர். காவல் காப்பவனின் கண்களுக்குத் தப்பிச் செம்மறி ஆடுகளும் வெள்ளாடுகளும் அங்கங்கே சோளப் பயிரைக் கடித்துக்கொண்டு சென்றன. பிசுபிசுவென்ற கைகளுடனும் வெள்ளைக் கீறல்கள் நிறைந்த முகங்களுடனும் சிறுவர்கள் வயல்களில் புகுந்து ரகளை செய்தவாறு திரிந்தனர்.

அங்கங்கே காய்ந்த கடலைச் செடிகளில் மூட்டப்பட்ட தீ எரிய ஆரம்பித்தது. அதிகாலையில் ஒவ்வொரு வயலிலும் எரிய ஆரம் பித்த இந்த நெருப்பின் புகை வானை எட்டியது. வாலிபப் பிள்ளைகள் இவ்வாறு வறுபட்ட பச்சைக்கடலையை விரும்பிச் சாப்பிட்டனர். பெரியவர்களும் கிழவர்களும் கூட இந்தக் கடலையை உரலில் இடித்து உண்டு அதன் சுவையை ரசித்தனர். பெரிய பெண்களும் சிறுமிகளும் சமயம் கிடைத்தபோதெல்லாம் நாலு கடலையைக் கொறித்தவாறு இருந்தனர்.

ஆண்டுதோறும் இந்தப் பருவத்தில் வரும் அயல்நாட்டுப் பறவைகள் ஏதோ செய்தி சொல்ல வந்ததைப் போல் வந்து சேர்ந் தன. காலையில் கதிரவன் உதித்ததும் உதிக்காததுமாக இவற்றின் குரல்கள் தூரத்திலிருந்து ஒலிக்க ஆரம்பித்தன. நிர்மலமான நீல வானத்தில் இந்தப் பறவைகள் நூற்றுக் கணக்கில் கூட்டம் கூட்ட மாகப் பறக்க ஆரம்பித்தன. பறந்து கொண்டிருக்கும்போதே அவற்றின் நீண்ட நீண்ட அணிகள் வெவ்வேறு உருவங்களில் காட்சியளித்தவாறு இருந்தன. முற்றத்திலும் வயலிலும் குழந்தை கள் நின்று மேலே அண்ணாந்து பார்த்தவாறு உரக்கக் கத்த ஆரம் பித்தனர். தாளம்போட்டுப் பாடத் தொடங்கினர்.

''ஊசிமூக்கு நாரையே பன்னிரண்டு எருது பூட்டி
உழுதிடுவாய் உழுதிடுவாய்!''

இந்தப் பறவைகள் பயிரின் மீது படையெடுத்துக் கதிர்களைக் குதறிப் போட்டு நாசம் செய்யாமலிருப்பதற்காக விவசாயிகள் தங்கள் தலைப்பாகைகளை உயரே எறிந்து அவற்றைப் பயமுறுத்தி விரட்ட முயற்சி செய்தனர். உரக்கக் கத்தி ஓட்ட முனைந்தனர். அப்படியிருந்தும் நீண்ட கால்களையுடைய அந்த நாரைகள் வட்ட மிட்டவாறு வந்து பயிரின் மீது பாய்ந்து இரைச்சலிட்டுக்கொண்டு சோளக் கொண்டைகளைக் கொத்திக் குதறியவாறு இருந்தன.

மூன்று கோழிகளுக்குச் சமமான எடையுடன் நன்கு கொழுப் பேறிய அந்தப் பறவைகளைப் பார்த்து ராமோஷி இனத்தவரின் நாவில் ஜலம் ஊற ஆரம்பித்தது. கெட்டித்த துப்பாக்கிகளையும் கல் கவண்களையும் எடுத்துக் கொண்டு அவர்களுடைய கற்றுக் குட்டிச் சிறுவர்கள் வயல்களிலும் பரம்பு வெளிகளிலும் அந்த நாரைகளைத் துரத்திக் கொண்டு ஓடினர். குருட்டுப் போக்கில் இரண்டொரு பறவைகள் அடிபட்டு விழுவதுண்டு. நீண்ட நாட் களுக்குப் பிறகு ராமோஷி இனத்தவரின் குடில்களிலிருந்து வேகும்

இறைச்சியின் வாடை வீசத் தொடங்கியது. மலர்ந்திருந்த கரும்பு மலர்களின் தேனைச் சேகரித்த தேனீக்கள் கரடுமுரடான இடங்களில் தேனடைகளைக் கட்டியிருந்தன. விறகுவெட்டும் கோடரிகளைக் கையிலேந்தியவாறு மேய்ப்பவர் இனத்தவரும் ராமோஷி இனத்தவருமான சிறுவர்கள் காடுகளில் சுற்றித் திரிந்து, முட்புதர்களில் கட்டப்பட்ட தேனடைகளைக் கண்டு பிடித்து, அவற்றை வெட்டி வீழ்த்தி அவற்றிலிருந்து தேனை எடுத்து உண்டனர்.

சோளப் பயிர் அறுவடை ஆயிற்று. கரும்புப் பயிரின் அறுவடை நடந்தது. பிறகு கடலையின் முறை வந்தது. களஞ்சியங்களைத் தயார் செய்யும் வேலை மும்முரமாக ஆரம்பமாயிற்று. எல்லோரும் களஞ்சியங்களைப் பூசி மெழுகினார்கள். அறுவடை செய்த சோளக் கொண்டைகளைக் கட்டைகளால் அடித்து, சோளமணிகளை வேருக்கினர். முறத்தில் எடுத்துத் தூற்றினர். உமியெல்லாம் காற்றில் பறந்து சென்றது. முத்துப் போன்ற சோளமணிகள் அம்பாரம் அம்பாரமாகக் குவிந்தன. விளைச்சலில் தங்கள் தங்கள் பங்கைப் பெறுவதற்கு மக்கள் கூட்டமாகக் கூடினர். விளைச்சலை அளந்து நிறுத்துக் கணக்கிடும் வேலை நடந்தது பறவைகள், கால்நடைகள், திருடர்கள் மூலம் சேதமானது போக மிச்சம் தானியத்தை விவசாயிகள் வீடுகளுக்கு எடுத்துச் சென்றனர்.

நிலக்கடலை, கடலை முதலிய பயிர்களின் அறுவடை முடிந்து வெறுமையான வயல்களில் வறியவர்கள் அலைந்து திரிந்து மண்ணில் விழுந்திருந்த மணிகளைப் பொறுக்கி எடுத்துச் சேர்த்துக் கொண்டனர். அவர்களுடைய பார்வைக்குத் தப்பிய மணிகள் பறவைகளுக்கு இரையாயின. எறும்புகளுக்கு உணவாயின. இவ்வளவுக்கும் தப்பிய மணிகள் மண்ணிலேயே கிடந்து மழையை எதிர்நோக்கிக் கொண்டிருந்தன.

பத்து மாதங்களுக்குப் பிறகு வயல்கள் மீண்டும் கருமையும் வெண்மையுமாகக் காட்சியளித்தன அறுவடைப் பருவம் முடிந்து போயிற்று. பறவைகள் பறந்து சென்றுவிட்டன. தாடையில் புகையிலையை அடக்கிக் கொண்டு உழவப் பெருமக்கள் மணிக் கணக்காக ஓய்வுடன் உட்காரத் தொடங்கினர்.

நடிகக் கலைஞர்கள் தங்கள் கலைத் திறமைகளைக் காட்ட வந்தனர். குரங்காட்டிகள் கரடிகளையும் கொண்டு வந்து தங்கள் கைவரிசையைக் காட்ட ஆரம்பித்தனர். ஜாலவித்தைக்காரர்கள் பலவித ஜாலங்களைச் செய்து காட்டினர். இந்த விளையாட்டுகளைப்

பார்த்து மக்கள் மனமகிழ்வு அடைந்தனர். குதூகலத்துடன் சிரித்தனர். மகிழ்ச்சியுடன் ஒரு சேரோ ஒன்றரைச் சேரோ தானியம் ஒவ்வொருவருக்கும் கொடுத்துக் கொண்டிருந்தனர்.

மேய்ப்பவர் இனத்தில் கலைத் திறமையுள்ள சிறுவர்கள் ஒன்று சேர்ந்து கஜ நடனத்துக்கு ஏற்பாடு செய்தனர். அவர்கள் அணிந்திருந்த கறுப்பு நிறமுள்ள அரைக்கைச் சட்டைகளில் கண்ணாடித் துண்டுகளால் வேலைப்பாடு செய்து, வெள்ளை நூலினால் மயில், எருது போன்ற உருவங்கள் தைக்கப்பட்டிருந்தன. அவர்கள் ஒவ்வொருவரும் கையில் வெவ்வேறு நிறங்களுடைய கைக்குட்டைகளை வைத்துக் கொண்டு வட்டமாகச் சுற்றி நின்று கொண்டனர். தம்பட்டம் அடிப்பவன் ஒரு பெரிய தம்பட்டத்தை வைத்துக் கொண்டு தாளக்கட்டுடன் அடிக்க ஆரம்பித்தான். ஜாலராக்காரன் ஜாலராவை முழக்கினான். பச்சையும் சிவப்புமான கைக்குட்டைகளை மேலும் கீழும் வீசியவாறு கோனார் குலத்தவர் முன்னும் பின்னுமாக அடி வைத்து ஆடத் தொடங்கினர். யானையின் அசைந்தாடும் நடையுடன் நாட்டியம் ஆரம்பமாகியது. இருக்க இருக்க நாட்டியத்தின் கதி தீவிரமடைந்தது. பாதங்கள் வேகமாக இயங்கத் தொடங்கின. நீலமும் ஊதாவுமான கைக்குட்டைகள் பறக்க ஆரம்பித்தன. தம்பட்டத்தின் ஒலி விறுவிறுப்பு அடைந்தது, பார்த்துக் கொண்டிருக்கும்போதே அந்த இருபத்தைந்து முப்பது ஆட்டுக்காரர்களும் தம்பட்டமடிப்பவனும் ஒரே மொத்த உருவமாகக் காட்சியளித்தார்கள். பிரம்மாண்டமான மனிதன் ஒருவன் துடிப்பும் துள்ளலுமாக, தன்னை மறந்த வெறியில் ஆடிக்கொண்டிருப்பது போல் தோன்றியது அந்தக் காட்சி.

கம்பளியை விரித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கும் ஆட்டுக்காரர்கள், வீட்டு வாயிலில் நின்று பார்த்துக் கொண்டிருக்கும் ஸ்திரீகள், குழந்தைகள் எல்லோருமே மெய்ம்மறந்தும், தம் நினைவிழந்தும் போயினர். நடனத்தின் தாளக்கட்டு அவர்களுடைய உடலிலும் ஊடுருவி நின்றது. அந்த விறுவிறுப்பு அவர்களையும் ஆட்டிவைத்தது. பன்கர்வாடி முழுதுமே ஆடத் தொடங்கியது— தாம் தரிகிட தாம் தரிகிட தாம்.

# 13

திடீரென்று என்னிடம் கோபித்துக் கொண்டுவிட்ட நாட்டாண்மைக் கிழவர் பல நாட்கள் வரை என்னுடன் பேசவில்லை. பள்ளிக்கூடத்தில் வந்து உட்கார்ந்து கொள்வதில்லை. என் அறைக்கும் வருவதில்லை. என்னைப் பற்றி விசாரிப்பதையும் விட்டுவிட்டார். ஆரம்பத்தில் இது எனக்கு மிகவும் வேதனை அளித்தது. ஆனால் நாளடைவில் நானும் அதை மறந்துவிட்டேன். எனக்கும் சிறிது அகங்காரம் உண்டாயிற்று. நான் ஒரு தவறும் செய்யாதபோது இந்தக் கிழவன் என்னிடம் கோபம் கொண்டிருக்கிறான், அந்தக் கோள்மூட்டி தன் காதில் ஓதியதைக் கேட்டு என்னிடம் பேச்சு வார்த்தையைக்கூட நிறுத்தி விட்டிருக்கிறான் என்று நினைத்து நான் வெறுப்படைந்தேன். நாட்டாண்மையுடன் வலியச் சென்று பேசும் முயற்சியையும் விட்டு விட்டேன்.

பள்ளிக்கூடத்தின் வேலை அதிகமாக வளர்ந்து விட்டிருந்தது. தரமான பிள்ளைகள் வரத் தொடங்கி யிருந்தார்கள். அவர்களுடைய படிப்பு, பரீக்ஷை, ஒழுங்கான வருகை—இந்த மாதிரி விஷயங்களில் நான் அதிகக் கவனம் செலுத்தவேண்டி இருந்தது. மேலதிகாரிகள் வருவதும் போவதுமாக இருந்தனர். பட்டிக் காட்டில் பள்ளிக்கூடத்தைத் திறந்திருக்கிறோம், அதனுடைய வெற்றி தோல்வியை நன்கு கண்காணிக்க வேண்டும் என்ற ஆர்வம் கல்வித்துறையினருக்கு ஏற்பட்டிருந்தது. மேலிடத்திலிருந்து விதம் விதமான அறிக்கைகளும் உத்தரவுகளும் வந்து கொண்டிருந்தன. அறுவடை விடுமுறைக்குப் பிறகு சிதறிப் போயிருந்த பிள்ளைகளை ஒன்று சேர்த்து அவர்களை மறுபடியும் ஒழுங்காகப் பள்ளிக்கூடத்துக்கு அழைத்துவரும் வேலையை ஆயபூ, ராமாக் கோனன், ஆனந்தா ராமோஷி—இந்த மூவரும் செய்து வந்தார்கள். கிராம மக்கள் இப்போது என் பேச்சைத் தட்டுவதில்லை. பள்ளிக்கூடத்தைப் பற்றியும் என்னைப் பற்றியும் ஒரு பாசம் மக்கள் மனத்தில் உண்டாகியிருந்தது.

ஒரு திங்கட்கிழமை அன்று நான் பள்ளிக்கூடத்துக்குப் போனதும் பிள்ளைகள் ஒரு செய்தியைச் சொன்னார்கள். மூன்றாவது

வகுப்பில் முதலாவதாக இருந்த சதா தன்னந்தனியே நின்று ஓர் ஓநாயை எதிர்த்துப் போராடிக் கொன்று விட்டான் என்பதை அறிந்து எனக்கு மிகுந்த வியப்பு உண்டாயிற்று.

''எப்படிக் கொன்ருன், அப்பா ?''

''கருவமுள்ளே வெட்டும் கோடரியால் வெட்டித் தள்ளி விட்டான், ஐயா. அந்தத் தோலே அவனுடைய வீட்டுக்கு எதிரேயே தொங்க விட்டிருக்கிருர்கள்...''

''சதா எங்கே? பள்ளிக்கூடத்துக்கு வரவில்லேயா?''

''இனிமேல் அவன் பள்ளிக்கூடத்துக்கு வரமாட்டான், மாஸ்டர்ஜி. அவனுடைய அப்பா அவனே ஆடு மேய்க்க அனுப்பி விட்டார்.''

அன்றிரவு பள்ளிக்கூடத்துக்கு எதிரே கூட்டம் சேர்ந்ததும் சதா ஓநாயைக் கொன்ற விஷயம் உண்மை தாஞ என்று நான் கேட்டேன். எல்லோரும் எனக்கு அந்த நிகழ்ச்சியைப் பற்றி விவரமாக எடுத்துரைத்தார்கள்.

கிராமத்துக்கு அண்மையில் உள்ள காட்டில் எப்போதும் இரண்டு மூன்று ஓநாய்கள் இருந்து வருகின்றன. சமயம் பார்த்து அவை மந்தையிலிருந்து தனித்துவரும் ஆட்டைப் பிடித்துக் கௌவிக் கொண்டு ஓடிவிடுவது வழக்கம். நல்ல ஆடாக இருந்தால் காவலாள் பின்னே துரத்திக் கொண்டு ஓடி அந்த ஓநாயின் பிடியிலிருந்து அதை மீட்பான். இறந்து போன அந்த ஆட்டின் சடலத்தைச் சொற்ப விலேக்கு யாராவது வாங்கிச் சென்று அதன் இறைச்சியை உண்பார்கள். ஆனல் அநேக தடவை ஓநாய் ஆட்டை அடித்துக் கொண்டு ஓடியதும் மேய்ப்பவன் வெறும் கையுடன் தான் திரும்பும்படி இருக்கும். இம்மாதிரி நிகழ்ச்சிகள் அடிக்கடி ஏற்பட்டுக் கொண்டிருந்தன. தொல்லே அதிகமாகி விட்டால் கிராமத்திலுள்ள இருபது முப்பது இளேஞர்கள் தடியும் கோடரியும் எடுத்துக் கொண்டு வேட்டைக்குக் கிளம்புவார்கள். பொசுக்கும் வெயிலில் பரம்பில் சுற்றி அலேவார்கள். இரண்டு அணிகளாகப் பிரிந்து ஓநாயை வளேத்துக் கொள்ள முயல்வார்கள். ஆனல் தந்திரக்கார ஓநாய் அவர்கள் கையில் அகப்படாது. வழியில் தென்பட்ட வயல்களிலிருந்தெல்லாம் வேர்க்கடலேயையும் கொத்துக் கடலேயையும் பறித்துத் தின்று கொண்டு, அந்த வேட்டைச் சிறுவர்கள் நாள் முழுவதும் சுற்றித் திரிந்துவிட்டு வெறும் கையுடனேயே திரும்பி வருவார்கள். பிறகு நாலேந்து நாட்களுக்

குள்ளேயே இரண்டொரு ஆட்டுக் குட்டிகள் ஓநாய்களுக்கு இரையான செய்தி கிடைக்கும். இவ்வளவு தொல்லை இருந்த போதிலும் அந்த ஓநாயை ஒரேயடியாகத் தீர்த்துக்கட்டுவதற்கு யாரும் முயற்சி செய்வதில்லை. சாப்பிடக் கூடிய பிராணி இல்லை என்ற காரணத்தால் ராமோஷி இனத்தவர் இந்த வேட்டையில் உற்சாகம் காட்டுவது கிடையாது. தவிரவும் ஒரு மந்தையிலிருந்து ஆட்டை ஓநாய் தூக்கிக் கொண்டு போய் விட்டால் மந்தையிலுள்ள மற்ற ஆடுகளுக்குத் தொற்று நோய் எதுவும் வராது என்ற நம்பிக்கை மேய்ப்பவரிடையே நிலவிவந்தது. இந்தத் தவருன கருத்தின் காரணமாக ஓநாய்களின் துடுக்கும் அதிகரித்திருந்தது. பட்டப் பகலில் கூட அவை தாராளமாக வயல்களில் திரிந்து கொண்டிருந்தன. ஆட்களைப் பார்த்து விட்டால் மண்ணில் பொந்து பறித்து ஒளிந்து கொள்ளும்.

பிராக் கோனுக்கு ஏதோ வேலையாகப் பக்கத்து கிராமம் எதற்கோ செல்ல வேண்டியிருந்தது. எனவே அவன் ஆடு மேய்க்கும் பொறுப்பை மகளிடம் ஒப்படைத்திருந்தான். கம்பும் கோடரியும் எடுத்துக் கொண்டு சதா மேட்டுப் பரம்பில் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்தாள். பொழுது சாயும் தறுவாயில் ஓர் ஓநாய் கம்பங்கட்டுக் குவியலின் மீது ஏறி மந்தையை நோட்டம் பார்த்துக் கொண்டது. முட்புதர்களில் பதுங்கிப் பதுங்கியவாறு அது வயல் கரை ஓரமாக மந்தைக்கு மிகவும் அருகில் வந்து விட்டது. அப்போதும் சதாவுக்குத் தெரியவில்லை. கடைசியில் மந்தையிலிருந்து விலகிவிட்ட ஒரு நல்ல ஆட்டைக் கண்டதும் ஓநாய் அதன் மீது பாய்ந்து விட்டது. ஆட்டின கழுத்தைக் கௌவிக் கொண்டு அது ஓட ஆரம்பித்தது. சதாவின் நாய் உரக்கக் குரைத்துக் கொண்டே ஓடிப் போன போது தான் சதாவுக்குப் புரிந்தது. ஓநாய் கால்வாய்க் கரையோடு வேகமாக ஓடிச் சென்று கொண்டிருந்தது.

உரக்கத் திட்டிக் கொண்டே சதா ஓநாயைத் துரத்திக் கொண்டு ஓடினுள். நாயும் ஓடியது. ஓநாய்க்கு அருகே சென்றதும் நாய் ஒரு பாய்ச்சல் பாய்ந்து ஓநாயின் பின்னங்கால்களைப் பிடித்துக் கொண்டது. அந்த வலி தாங்காமல் ஓநாய் ஆட்டை விட்டுவிட்டுப் பின்னே திரும்பி நாயின் கழுத்தைக் கௌவ முயற்சி செய்தது. தன் கால்களை விடுவித்துக் கொள்ளும் முயற்சியில் துடி துடிக்க ஆரம்பித்தது. ஆனல் ஓநாய் திரும்பியதற்கேற்றாற்போல் நாயும்

திரும்பியவாறு ஓநாயின் பிடியில் அகப்படாமல் நழுவிக் கொண் டிருந்தது. ஓநாய் எந்தப் புறத்தில் திரும்பி முயன்று பார்த்தும் பிரயோசனம் இல்லை. இரண்டுக்கும் நடந்த இந்தப் போராட்டத் தினல் ஏராளமாகப் புழுதி பறந்தது. நாயைக் காட்டிலும் ஓநாய் அதிகப் பலசாலியானதால் அது நாயைப் பலவாருக இழுத்து மோதியது. நாய் ஓநாயின் கால்களைக் கௌவியிருந்த பிடி நழுவி யதும் அது மல்லாக்க விழுந்து விட்டது. ஓநாய் அதன் மேல் பாய்ந்து அதன் கழுத்தைக் கடித்துக் கிழித்துப் போட்டது. நாய் விசித்திரமாக ஓலமிட்டவாறு உயிரை விட்டது. இதற்குள் அருகே வந்துவிட்ட சதா நாயின் மார்பின் மீது நின்றிருந்த ஓநாயின் கழுத்தில் கோடரியால் ஒரு போடு போட்டான். ரத்தம் ஊற்ருகப் பெருக்கெடுத்தது. ஓநாய் மல்லாக்க விழுந்து கால்களை அடித்துக் கொள்ள ஆரம்பித்தது. கோப மிகுதியில் சதா மேலும் மேலும் ஓங்கி ஓங்கிக் கோடரியைப் பிரயோகித்தவாறு இருந்தான்.

ஓநாய் இறந்துவிட்டது. நாயும் இறந்துவிட்டது. அந்த ஓடையின் மணலில் குழிபறித்து நாயை அடக்கம் செய்தான் சதா. கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டான். பிறகு இறந்துபோன ஆட்டைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு, ஓநாயின் காலில் ஒரு கயிற்றைக் கட்டி இழுத்தவாறு விளக்கு வைக்கும் நேரத்தில் கிராமத்துக்குத் திரும்பி வந்தான். நடந்தவற்றைத் தன் தாயாரி டம் சொல்லும்போது விம்மி விம்மி அழ ஆரம்பித்துவிட்டான். நாய் போய்விட்டது; ஆடு போய்விட்டது என்ற வருத்தம் அவனுக்கு. அவனுடைய தாயார் தானும் அழுதுகொண்டு அவனையும் சமா தானப் படுத்திஞள். மகனை மார்போடு அணைத்துக் கொண்டு, ''தொலைபட்டும், நாய் இறந்த தென்றல் ஓநாயின் ரத்தத்தைப் பெருக வைத்துத்தான் இறந்தது. அதற்காக நாம் ஆட்டை அர்ப்பணம் செய்துவிட்டதாக இருக்கட்டும். அழாதே'' என்று சமாதானப் படுத்திஞள்.

இந்த விவரங்களைக் கேட்டதும் எனக்கு, சதா மறுபடியும் பள்ளிக்கூடத்துக்கு எப்போது வருவான்; அவன் வந்தவுடன் அவ னுடைய தீரச் செயலுக்காக அவனைப் பாராட்ட வேண்டும் என்ற விருப்பம் மேலோங்கியது. ஆனல் ஐந்தாறு நாட்கள் கழிந்தபின்பும் அவன் பள்ளிக்கூடத்துக்கு வரவில்லை. நான் சொல்லியனுப்பியும் கூட, அவன் ஆடு மேய்க்கப் போயிருக்கிருன்; இனிமேல் பள்ளிக் கூடத்துக்கு வரமாட்டான் என்று பதில் கிடைத்தது.

பிறகு நான் அதற்கென்று ஓய்வு நேரத்தை ஏற்படுத்திக் கொண்டு வயலில் அமைந்திருந்த அவனுடைய வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தேன்.

பொழுது சாய்ந்து மங்கிய நிலவொளி பரவியிருந்தது. அந்தக் குடியிருப்பை நெருங்கியதுமே நாய் மேலே பாய வரும் என்பது நினைவுக்கு வந்ததும் நான் உரக்க, ''ஏ சதா!'' என்று கூப்பிட்டேன்.

''யாரது?'' என்று வீட்டினுள்ளேயிருந்து குரல் வந்தது.

''நான்தான் உபாத்தியாயர். நாயைப் பிடித்து வைத்துக் கொள். பாய வரப்போகிறது!''

சதாவின் குரல் சட்டென்று இறங்கிவிட்டது. ''நாய் இப்போது இல்லை மாஸ்டர்ஜி, உள்ளே வாருங்கள்.''

சட்டென்று எனக்கு நினைவு வந்தது. அன்று ஓநாயுடன் போராடியபோது சதாவின் நாய் இறந்துவிட்டது என்பதை நான் மறந்துவிட்டதை எண்ணிக் குற்றவாளியைப் போன்ற உணர்வு தோன்றியது.

வீட்டுக்கு எதிரே நன்றாக மெழுகிப் பூசப்பட்ட முற்றம் இருந்தது. மண்ணால் கோணல் மாணலாக அமைந்த துளசிமாடம் இருந்தது. அதில் துளசிச் செடி அடர்ந்து வளர்ந்திருந்தது. திண்ணையின்மேல் கம்பளியை விரித்து, ''உட்காருங்கள்'' என்றான் சதா.

மங்கிய நிலவொளியில் கால்நடைகள் தீவனம் தின்றுகொண்டிருந்தது தென்பட்டது. சதாவின் தகப்பன் பீடி பிடித்தவாறு வெள்ளாட்டுப் பாலைக் கறந்து கொண்டிருந்தான். வெளியே இருந்த பட்டியில் செம்மறியாடுகள் அடைக்கப்பட்டிருந்தன. பசுக்களின் கழுத்தில் கட்டியிருந்த மணிகள் ஒலித்துக் கொண்டிருந்தன. கரமுரவென்று கடிபடும் தீவனத்தின் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது.

''மிகுந்த வீரச்செயல் புரிந்துவிட்டாயப்பா நீ! எனக்கு எல்லாச் செய்தியும் தெரியும்'' என்றேன்.

''ஆனால் ஓநாய் என்னுடைய நாயைக் கொன்றுவிட்டதே!'' என்றான் சதா.

''பாவம்!'' என்று பெருமூச்செறிந்தேன் நான்.

பிறகு கணநேரத்துக்கு நான் மௌனமா யிருந்தேன். சதாவும் மௌனமாயிருந்தான். பால் குவளையை எடுத்துக் கொண்டு சதாவின் தகப்பன் என் எதிரே வந்தான்.

''பால் கறந்து கொண்டிருந்தேன். ராத்திரி வேளையில் எங்கே இப்படி...?''

''வெறுமே சுற்றியலைந்து வந்தேன்...''

''உட்காருங்கள். எங்கள் வீட்டில் தேநீர், காப்பித் தண்ணி எதுவும் கிடையாது. பால் சாப்பிடுவீர்களா?''

''அதெல்லாம் ஒன்றும் அவசியமில்லை...''

''இப்படிச் சொன்னால் ஒன்றும் நடக்காது. சாப்பிடத்தான் வேண்டும். என்னுடைய வார்த்தையைத் தட்டக் கூடாது. போடா பயலே, உள்ளேயிருந்து டம்ளர் எடுத்துவா!''

பிராக் கோனன் திண்ணை விளிம்பில் என் பக்கமாகவே உட் கார்ந்து கொண்டான்.

''நாலு நாளாகச் சதா பள்ளிக்கூடத்துக்கு வரவில்லையே?'' என்றேன் நான்.

''வரவில்லைதான்.. நான்தான் ஆடு மேய்த்து வரும்படி சொன்னேன்.''

''வேலை முடிந்து விட்டதில்லையா? நாளையிலிருந்து அனுப்புங் களேன்.''

பிரா சற்று நகைத்தான். பாலை டம்ளரில் ஊற்றி என் முன்னே வைத்துவிட்டு, பால் சட்டியை உள்ளே கொண்டு போகும்படி சதாவிடம் கூறினன்.

அந்தச் சுவையான பாலை நான் ருசி பார்த்துப் பார்த்துப் பருகினேன். வெள்ளாட்டுப் பாலில் சற்று வாடை வரத்தான் செய்யும். ஆனல் பழக்கம் காரணமாக இப்போதெல்லாம் அது எனக்குத் தெரிவதில்லை.

பிறகு பிரா நிதானமாகக் கூறினன்: ''சதா இனிமேல் பள்ளிக் கூடத்துக்கு வரமாட்டான் வாத்தியாரய்யா. நான்தான் வேண்டா மென்று சொல்லிவிட்டேன். படித்தது போதும், உன்னுடைய வேலையில் கவனம் செலுத்து என்று சொல்லிவிட்டேன்.''

''ஆனல் திடீரென்று இப்படி அவன் படிப்பை நிறுத்திவிட்டீர் களே! ஏழாவது வரைக்குமாவது படிக்க விடுங்களேன்.''

பிரா பலமாகத் தலையை ஆட்டினன். ''படித்து என்ன ஆக வேண்டும்? இப்பொழுதோ அவன் நன்ருகத் தேறின வாலிபனகி விட்டான். தனியாகவே ஓநாயைத் தீர்த்துக் கட்டிவிட்டான். இன்னும் குழந்தை இல்லையே அவன்! இனியும் அவனுக்கு ஸ்லேட் எதற்கு, பள்ளிக்கூடம் எதற்கு? அவன் வேலையைக் கவனிக்க விட்டு விடுங்கள்.''

நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். ஆனால் பிரா தன் பிள்ளையின் நான்கு வருடங்களை இழப்பதற்குச் சம்மதிக்கவில்லை. திரும்பத் திரும்ப அவன் இனிமேல் தன் பிள்ளையைப் பள்ளிக் கூடத்துக்கு அனுப்பப் போவதில்லை என்று உறுதியாகச் சொல்லி விட்டான். ''எனக்கு உதவிக்கு ஓர் ஆள் கிடைத்து விட்டான். அந்த அளவுக்கு என் வேலை சுலபமாகிவிடும். நீங்கள் கட்டாயப் படுத்தவேண்டாம்'' என்று கூறி மறுத்துவிட்டான். சதாவும் பாட சாலைக்கு வருவதைப் பற்றி விசேஷத் தீவிரம் காட்டவில்லை. ஒரு மணி நேரத்துக்கும் அதிகமாக வாதாடி அலுத்த பிறகு நான் எழுந்து, வயல்வெளியில் அடித்த ஊதல் காற்றைத் தாங்கியவாறு கிராமத்தை நோக்கிச் சென்றுவிட்டேன். என் மனத்தில் வருத்தம் நிரம்பியிருந்தது.

ஒரு நாள் நடுப்பகலில் பள்ளிக்கூடம் முடிவடைந்ததும் நான் குளிப்பதற்காக கிராமத்துக்கு வெளியே உள்ள கிணற்றை நோக்கிச் சென்று கொண்டிருந்தபோது நாட்டாண்மைக் கிழவர் என்னைப் பின்பற்றி வர ஆரம்பித்தார். இரண்டொரு தடவை நான் திரும்பிப் பார்த்தபோது அவர் தொடர்ந்து வந்து கொண்டிருந்தது தெரிந் தது. உழுது போட்டிருந்த வயலில் உச்சி வெயில் அலை அலை யாய் அனல் எழுப்பிக் கொண்டிருந்தது. உடம்பில் ஒன்றுமே போர்த்துக் கொள்ளாமல், வேஷ்டியை இறுகக் கட்டிக் கொண்டு வயல் வரப்புகளின்மீது நடந்தவாறு என்னைப் பின் தொடர்ந்து வந்து கொண்டிருந்தார் நாட்டாண்மை. ஏதோ வேலையாக எங்கேயோ போய்க் கொண்டிருக்கிறார் என்றுதான் முதலில் நினைத் தேன். ஆனால் நான் வரப்பை விட்டு மண்கட்டிகளை மிதித்துக் கொண்டு வயலின் குறுக்கே நடந்து கிணற்றை நோக்கிச் சென்ற போது அவரும் என்னைப் போலவே கிணற்றை நோக்கி நடக்க ஆரம்பித்தார். குளிப்பதற்காக வருகிறார் என்று நினைப்பதற்கும் வழியில்லாமல் அவரிடம் செம்போ வேஷ்டியோ எதுவும் காணப்பட வில்லை. என் நெஞ்சு ஏனோ திக்திக்கென்று அடித்துக் கொண்டது. மறுபடியும் திரும்பிப் பார்க்காமலே கிணற்றின் அருகே சென்றேன். துணிகளை அவிழ்த்து வைத்து, இடுப்புக் கச்சம் மட்டும் கட்டிக் கொண்டு கிணற்றுக்குள் இறங்கினேன். தண்ணீரில் குதித்துச் சிறிது நேரம் முங்கி முங்கி எழுந்த பிறகு மேலே ஏறி உட்கார்ந்து உடம்பைத் தேய்த்துக் கொள்ள ஆரம்பித்தேன்.

நாட்டாண்மைக் கிழவரும் கிணற்றுப் படிகளின் வழியே இறங்கி நான் உட்கார்ந்திருந்த படிக்குமேலே இரண்டுபடி விட்டு விட்டு உட்கார்ந்து கொண்டார். சற்று நேரம் பொறுத்து, ''ஏய் வாத்தியார், ஒரே கிராமத்தில் இருந்துகொண்டு ஒருவரோடு ஒருவர் பேசாமலிருப்பது சரியில்லை...'' என்ருர்.

அவர் தாமாக வந்து என்னிடம் பேசியது எனக்கு வியப்பை அளித்தது. ''பேசுவதை நிறுத்தியது நீங்கள்தான், நானில்லை, பெரியவரே!'' என்றேன்.

''சரியப்பா, ஆனல் ஏன் பேசவில்லை, என்ன காரணம் என்று எப்போதாவது கேட்டாயா நீ?''

''எதற்காகக் கேட்கவேண்டும்?''

''ஏன், கேட்டால் கௌரவம் குறைந்து போய்விடுமா? அட கௌரவம் அகௌரவம் பாராட்டவேண்டியது என்னைப்போல் வயதான பெரியவர்கள்தான், உன்னைப் போன்ற நேற்றைய சிறு பிள்ளைகள் இல்லை, தெரிந்ததா?''

இதைக் கேட்டு எனக்குக் கொஞ்சம் சிரிப்பு வந்தது. நானும் அப்படி விலகிவிலகி நடந்திருக்கக் கூடாதுதான். புத்திசாலித்தன மாக மறுபடியும் அந்தக் கிழவரிடம் பேச்சுக் கொடுத்திருந்தால் அவர் கட்டாயம் காரணத்தைக் கூறியிருப்பார். பின்பு கிழவர் தாமாகவே கூறினுர்: ''அந்தக் கோள்மூட்டிதான் என்னிடம் சொன்னுன், நீ எங்கள் வீட்டு அஞ்ஜிக்கு ரவிக்கை வாங்கிக் கொடுத்தாயாமே, உண்மைதானு அது?''

என் முகம் வெளுத்துப் போய்விட்டது, என்ன பதில் சொல்வ தென்று எனக்குக் கணநேரம் ஒன்றும் புரியவில்லை. கிழவர் இப்படி ஒரு கேள்வியைக் கேட்பார்; என்னிடம் அவர் பேசாமல் இருந்த தற்கு இப்படி ஒரு காரணம் இருக்க முடியும் என்று நான் சிறிதும் கற்பனைகூடச் செய்து பார்த்ததில்லை. எப்போதோ நான் அஞ்ஜிக்கு ரவிக்கை தைக்கச் செய்து கொண்டுவந்து கொடுத்திருந்தேன் என் பதை நான் மறந்தே போயிருந்தேன். நான் ஒன்றும் பேசாமலிருப் பதைப் பார்த்துவிட்டுக் கிழவர் மீண்டும் கூறினுர்: ''நீ அஞ்ஜிக்கு ரவிக்கை கொடுப்பதையும் அவள் சிரித்துக் கொண்டே அதை வாங்கிக் கொள்வதையும் தான் பார்த்ததாக அவன் ஹனுமார் கோயில் படியைத் தொட்டுச் சத்தியம் செய்து கூறினுன். இதை அறிந்ததுமே நான் புத்தியைப் பறிகொடுத்து விட்டேன். அந்த அஞ்ஜிக் குட்டியை மனம் கொண்டமட்டும் அடித்துவிட்டு உன்னு

டன் பேசுவதையும் நிறுத்திவிட்டேன். ஆனால் உன்னைக் கண் காணிப்பதை நான் நிறுத்தவில்லை. அன்றிலிருந்து இன்றுவரை நீ தவறாய் நடந்துகொள்வதாக எனக்குத் தெரியவில்லை. எது உண்மை, எது பொய் என்று முடிவு செய்யவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டேன்.''

''பொய், அவ்வளவும் பச்சைப் பொய்! அந்தக் கோள்மூட்டி தாதா அயோக்யன். நீங்கள் என்னிடம் பாசம் காட்டியது அவனுக் குப் பொறுக்கவில்லை. அதனால்தான் அவன் இப்படிச் சூழ்ச்சி செய்திருக்கிறான்!'' ஆவேசத்தால் எனக்கு மூச்சு வாங்க ஆரம்பித் தது. நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது.

''அப்படியானால் நீ அஞ்ஜியிடம் ரவிக்கையைக் கொடுத்த விஷயம் பொய் என்று சொல்கிறாயா?'' என்று கேட்டார் கிழவர்.

''ரவிக்கை கொடுக்கத்தான் கொடுத்தேன், ஆனால் இலவச மாகக் கொடுக்கவில்லை. அஞ்ஜி என்னிடம் துணியைக் கொண்டு வந்து கொடுத்து ஊரிலிருந்து தைத்து எடுத்துவரும்படி கூறியிருந் தாள்: 'நான் தாத்தாவுக்குத் தெரியாமல் இதைத் தைத்துக் கொள்கிறேன், ஆகையினால் அவரிடம் சொல்ல வேண்டாம்' என்று அவள் கேட்டுக் கொண்டதால்தான் நான் உங்களிடம் சொல்ல வில்லை. நீங்கள் விரும்பினால் அவளை எனக்கு நேருக்கு நேர் நிறுத்திவைத்து விசாரியுங்கள். நான் அப்படிப்பட்ட அயோக்கியப் பேர்வழி இல்லை. யார் என்ன சொன்னாலும் நான் வாய்திறவாமல் செய்து கொடுக்கிறேன், எல்லோருக்கும் உதவியாயிருக்கிறேன்— இந்த உதாரகுணத்துக்கு நீங்களெல்லோரும் இப்படி ஒரு கைம் மாறு செய்வீர்கள் என்று நான் கற்பனைகூடச் செய்யவில்லை. எனக்கு எதுவும் தேவை இல்லை. பள்ளிக்கூடத்து வேலையை மட்டும் செய்துவிட்டு நான் சும்மா இருக்க முடியும். பிள்ளைகளுக்காவது நாலு எழுத்துக் கற்றுக் கொடுக்கலாம்...'' இவ்வாறு நான் வேக மாகக் கடுமையானகுரலில் பேசவே கிழவர்கூட வெலவெலத்துப் போய்விட்டார்.

''இதோ பார், இதை உண்மையென்று நம்பியா நான் உன்னி டம் அதைச் சொன்னேன்? உன்னை ஏதாவது செய்தேனா? எனக்கே இதெல்லாம் உண்மை இல்லை என்றுதான் தோன்றிக் கொண்டிருந் தது. இப்போது நீ எல்லாவற்றையும் உடைத்துச் சொல்லி விட்டாய். கோள்மூட்டி முதலிலிருந்தே உனக்குக் கெடுதல் நினைப் பவன்தான். அந்த மோசக்காரப் பயல் துரும்பைத் தூணாக்கிவிட்

டிருக்கிறுன். சரி . உன்னுடைய மனத்தில் பாவ எண்ணம் எதுவும் கிடையாது, இல்லையா?''

அப்போதுகூட நான் விறைப்பாகத்தான் இருந்தேன். கிழவருடைய முகத்திலும் அவருடைய பேச்சிலும் வெளிப்பட்ட கழிவிரக்கம் என்னுடைய விறைப்பை இன்னும் அதிகப்படுத்தியது.

''ஆமாம், பாவம் என்னவென்று சொல்லட்டுமா? உங்கள் கிராமத்தில் அறிவாளி வந்து இருப்பதே பாவம்தான். நீங்கள் நேர்மையான நல்ல மனிதனைக்கூட முட்டாளாக ஆக்கிவிடுவீர்கள். போதும், நான் இதுவரை இங்கே பார்த்த உத்தியோகமே போதும். வேறு எங்காவது என்னை மாற்றச் சொல்லி மனுச் செய்துகொள்ளப் போகிறேன்.''

இவ்வாறு கூறிவிட்டு நான் மேலே ஏறிவந்து, உடைகளை மாற்றிக்கொண்டு வீட்டை நோக்கி நடந்துவிட்டேன். கிழவர் எவ்வளவு நேரம் அந்தப் படியிலேயே உட்கார்ந்திருந்தார்; எப்போது எழுந்து வீட்டுக்குத் திரும்பிப் போனுர் என்பதெல்லாம் எனக்குத் தெரியாது.

அன்று முழுவதும் என் கோபம் தணியவே இல்லை. புத்திசாலித்தனமாக நடந்துகொள்ள வேண்டுமென்று எவ்வளவோ முயன்றும் அந்தக் கோள்மூட்டியைப் பழிவாங்க வேண்டுமென்ற எண்ணத்தை என்னுல் தவிர்க்க முடியவில்லை. ஊரார் எல்லோருடைய முன்னிலையிலும் அந்தப் பயலைப் பிடித்து நன்ருக அடித்து நொறுக்கவேண்டுமென்று ஆவேசம் தோன்றியது என் மனத்தில். ஆனுல் என்னைப் போன்ற பூஞ்சை ஆசாமிக்கு அது எப்படிச் சாத்தியமாகும்? அவன் மேல் ஏதாவது பொய்க்குற்றம் சாட்டி அவனை ஜெயிலில் தள்ளிவிட வேண்டும், நமக்குத் தெரிந்த போலீஸ்காரனை விட்டு அவனை நன்ருக அடிக்கச் சொல்லவேண்டும்; செம்மையாக உதைக்கச் சொல்லவேண்டும் என்றெல்லாம் எண்ணமிட்டேன். அதே சமயம் என்னுடைய கீழ்த்தரமான எண்ணங்களை நினைத்து எனக்கு வெட்கமாகவும் இருந்தது.

ஆயபூ என் நிலைமையைப் புரிந்துகொண்டான். என்ன நடந்திருக்குமென்று அவனுல் ஊகிக்கவும் முடியவில்லை, என்னிடம் அதைப்பற்றிக் கேட்கவும் அவனுக்குத் துணிவு ஏற்படவில்லை. ஒன்றும் பேசாமலே இருந்தான். கடைசியில் இரவில் நான் படுத்தவாறே அவனிடம் கூறினேன்: ''ஆயபூ, அந்தக் கோள்மூட்டி எனக்குப் பெரிய தீங்கைச் செய்துவிட்டான்...''

ஆயபூ நிலைவாயிலருகே போர்வையைப் போர்த்துக் கொண்டு படுத்திருந்தான். ''மாஸ்டர்ஜி, ஒரு தடவையாவது நீங்கள் அவனுக்குச் சரியான பாடம் கற்பிக்கவேண்டும்!'' என்றான் அவன்.

''பாடம் கற்பிப்பது பெரிதில்லை அப்பா, ஆனால் வெட்டியாகக் கிராமத்தில் கெட்ட பெயர் எடுக்கும்படி ஆகிவிடும். இன்றுவரை நல்ல விதமாக நாட்களைக் கழித்தாயிற்று. யாரிடமும் எந்தப் பேச்சும் கேட்டுக் கொள்ளவில்லை.''

ஆயபூவுக்கும் அது சரியென்றே தோன்றியது. கொஞ்சம் விளக்கிச் சொன்னாலே ஆயபூ சட்டென்று புரிந்து கொள்வான். புரிந்துகொண்டதை முகத்தில் காட்டிக் கொள்வது மட்டுமின்றி வாயால் சொல்லவும் செய்வான்.

''இன்றைக்கு அந்தப் பயல் உங்களுக்கு என்ன கெடுதல் செய்தான், வாத்தியாரைய்யா?''

''அங்கங்கே வத்தி வைப்பதைத் தவிர அவன் வேறு என்ன செய்ய இருக்கிறது? நாட்டாண்மை என்னிடம் பேசாமல் இருந்ததற்குக் காரணமே அந்தக் கோள்மூட்டிதான்!''

''நான்தான் முன்னாலேயே உங்களிடம் சொன்னேனே!''

''வாத்தியாரும் அஞ்ஜியும் கெட்ட தொடர்பு வைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று கிழவரிடம் கோள் சொல்லி யிருக்கிறான் அந்தப் பயல்!''

சற்றும் எதிர்பாராத இந்தச் செய்தியைக் கேட்டதும் ஆயபூவின் வாயிலிருந்து பொறுக்கியெடுத்த வசைச்சொல் கிளம்பியது. கோள்மூட்டி வேறு எவ்விதமோ 'பொய்யும் புனைசுருட்டுமாக வத்தி வைத்திருப்பான் என்றுதான் அவன் நினைத்திருந்தானே ஒழிய இவ்விதம் அபாண்டமாக வாத்தியாரய்யாவுக்கும் அஞ்ஜிக்கும் கெட்டதொடர்பு இருந்ததாகக் கதை கட்டியிருப்பானென்று ஆயபூ எதிர்பார்க்கவே இல்லை. வியப்பு மட்டுமில்லை, கோபமும் பொங்கி வந்தது அவனுக்கு. ''அந்தத் துரோகி இந்த அளவுக்குப் போவானென்று நான் நினைக்கவே இல்லை!'' என்று கத்தினான்.

''கிராமம் முழுவதிலும் எனக்குக் கெடுதல் நினைப்பவர் யாரும் கிடையாது. ஆனால் இந்த வத்திவைப்பான் ஒருவன் மட்டும் நாகப் பாம்பு மாதிரி என்னைக் கடிக்க விரும்புகிறான். என்ன செய்வதென்று ஒன்றுமே புரியவில்லை. நேருக்குநேர் வந்து தன் விரோதத்தைத் தீர்த்துக் கொள்ளவும் அவன் விரும்பவில்லை. ஒளிந்திருந்தவாறே துப்பாக்கிப் பிரயோகம் செய்து கொண்டிருக்கிறான்.''

இவ்வாறு கூறிக் கொண்டிருக்கும் போதே எனக்கு நான் முதல் முதல் இங்கே வந்த அன்று கோள்மூட்டித் தாதூ இதே அறையில் வந்து என்னை எப்படிப் பயமுறுத்திவிட்டுச் சென்றான் என்பது நினைவுக்கு வந்தது. அஞ்ஜியின் விஷயத்தை வைத்துக் கொண்டு கிராமத்தாரிடையே புகைச்சலைக் கிளப்பிவிட்டு எனக்கு உதை வாங்கிக் கொடுக்கவே அவன் திட்டமிட்டிருக்கிறான் என்று தோன்றியது. நீண்ட நேரத்துக்குத் தூக்கமே வரவில்லை எனக்கு. ஆயபூ குறட்டைவிட ஆரம்பித்தான்.

மூன்று நான்கு நாட்களுக்குப் பிறகு—

ஓர் இரவு. ஊர்ச் சாவடி எதிரே நீண்டநேரம் உட்கார்ந்திருந்துவிட்டு நான் வீடு திரும்பினேன். கதவைத் திறந்தபோது ஆயபூ உள்ளே தூங்கிக் கொண்டிருந்தான். நெருப்புக்குச்சியைக் கிழித்து நான் படுக்கையைத் தட்டிப் போட்டுப் படுத்துக் கொண்டேன். சீக்கிரமே தூங்கியும் விட்டேன்.

முதல் தூக்கம் போட்டு முடிப்பதற்குள்ளேயே ஏதோ இரைச்சல் கேட்டு நான் விழித்துக் கொண்டேன். முதலில் ஒன்றும் புரியவில்லை. பின்பு சாவடிப் பக்கத்திலிருந்துதான் அந்தச் சத்தம் வந்து கொண்டிருந்தது என்பது புரிந்தது. இருட்டிலேயே எழுந்து உட்கார்ந்து காது கொடுத்துக் கேட்க ஆரம்பித்தேன். பொதுவான இரைச்சலைத் தவிரத் தெளிவாக எதுவும் காதில் விழவில்லை. ஓநாய் வந்திருக்குமோ அல்லது பாம்பு தென்பட்டிருக்குமோ என்று எனக்குத் தோன்றியது. ஆயபூ, என்ன நினைக்கிறான் என்பதைத் தெரிந்து கொள்வதற்காக, ''ஆயபூ, என்ன இரைச்சல் அப்பா அது?'' என்று கேட்டேன்.

ஆயபூ சீக்கிரம் எழுந்திருக்கவில்லை. பிறகு இருட்டிலேயே அவனை உலுக்கி எழுப்பினேன். அவன் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்து, ''என்ன, என்ன? யாரது!'' என்று உளறிக் கொட்டினான். அவன் சிறிது தெளிவடைந்ததும் நான் கேட்டேன்: ''உனக்கு இரைச்சல் காதில் விழவில்லையா? சாவடிக்கு எதிரே நிறையப்பேர் கூடியிருப்பதுபோல் தோன்றுகிறதே!''

அவனும் காதுகொடுத்துக் கேட்டான்.

''சாவடிக்கு எதிரேதான் ஏதோ ரகளை நடந்துகொண்டிருக்கிறது. போய்ப் பார்த்து வரட்டுமா?''

''வா, நானும் உன்கூட வருகிறேன்'' என்று கூறி நானும் கிளம்பினேன்.

போர்வையை அகற்றிவிட்டு இருவரும் வெளியே புறப் பட்டோம். அடர்ந்த இருட்டாயிருந்த போதிலும் பழக்கம் காரண மாக இருவரும் வேகமாக நடந்தோம். சாவடியை நெருங்கியதும் முதலில் எதிர்ப்பட்ட மனிதனிடம், ''என்ன நடந்தது? என்ன தகராறு?'' என்று நான் கேட்டேன்.

''கோள்மூட்டித் தாதூவை யாரோ நையப் புடைத்திருக்கிறார் கள்!'' என்றான் அவன்.

''அடித்தது யார்?''

''யாரென்று இருட்டில் தெரியவில்லையாம்.''

நான் கூட்டத்தில் நுழைந்து முன்னே சென்றேன். கோள் மூட்டியின் கிழத் தாயார் ஒரு விளக்கை வைத்துக் கொண்டு தரையில் உட்கார்ந்து, ''ஐயோ, நான் என்ன செய்யப் போகிறேன்!'' என்று அரற்றிக் கொண்டிருந்தாள்; தாதூ புழுதியில் குப்புற விழுந்திருந் தான். அவனுடைய தலைப்பாகை தனியாக அப்பால் விழுந்திருந் தது. சட்டை கிழிந்திருந்தது. செம்மையாக உதை வாங்கியவன் போல் கோள்மூட்டி, நாக்கைத் தொங்கப் போட்டுக்கொண்டு மூச்சு இரைக்க விழுந்து கிடந்தான். நாட்டாண்மைக் கிழவரும் ராமாக் கோனும் அவனருகே குந்தினாற்போல் உட்கார்ந்து, ''அடே தாதூ, எழுந்துதான் உட்காரேன்! என்ன நடந்தது? யார் அடித்தார் கள்?'' என்று கேட்டுக் கொண்டிருந்தனர்.

கோள்மூட்டித் தாதூ கண்களை மூடியவாறே தலையை அசைத்துக் கொண்டிருந்தான். அவனால் எழுந்திருக்கவும் முடியவில்லை; பேசவும் முடியவில்லை.

''அவனை எதற்காக இப்படிப் புழுதியில் போட்டிருக்கிறீர்கள்? தூக்கி அவனுடைய வீட்டுக்குக் கொண்டு போவதற்கென்ன?'' என்று நான் கேட்டேன்.

எல்லோரும் நான் கூறியதை ஆமோதித்தார்கள். ஆனால் யாரும் முன்னே சென்று அவனைத் தூக்கத் தயாராக இல்லை. பிறகு ஆனந்தா ராமோஷிதான் முன்வந்து ஒரு செத்த ஆட்டைத் தூக்கு வதுபோல் அந்தக் கோள்மூட்டியைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு அவனுடைய வீட்டுக்குக் கொண்டுபோனான்.

பதினைந்து இருபதுபேர் கும்பலாக, கனைத்து இருமியவாறு, என்ன நடந்தது; எப்படி நடந்தது என்று ஒருவருக் கொருவர் கேள்வி பதில்களைப் பறிமாறியவாறு அவன் பின்னே சென்றனர்.

தாதூவின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்ததும் அங்கே ஒரு கம்பளியை விரித்து அதில் கோள்முட்டியைப் படுக்க வைத்தார்கள். அவனுடைய கிழத் தாய் இன்னும் ஒப்பாரி வைத்துக் கொண்டிருந்தாள். நாட்டாண்மைக் கிழவர் அவளைக் கோபித்துக் கொண்டார். ''சுந்தரா, வாயை மூடிக்கொண்டிரு. உனக்கு அறிவில்லையா? அவன் என்ன செத்தா போய்விட்டான், இப்படி ஒப்பாரி வைப்பதற்கு?''

வீட்டுக்குள்ளும் வீட்டுக்கு வெளியேயும் ஜனங்கள் நெருக்கியடித்துக் கொண்டு நின்றிருந்தனர், தாதூவின் முகத்தில் தண்ணீர் தெளித்து விசிறியால் வீசியதும் அவன் மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது சற்றுத் தணிந்தது. கண்களைச் சுழற்றி இங்குமங்கும் பார்க்க ஆரம்பித்தான்.

''என்னை அடையாளம் புரிகிறதா?'' என்று கேட்டேன் நான்.

அவன் பதிலொன்றும் சொல்லாமல் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான். நாட்டாண்மை அவனுடைய முகத்தருகே குனிந்து, ''தாதூ, சுயநினைவு திரும்பிவிட்டதில்லையா? நான் யார், சொல்லு!'' என்று கேட்டார்.

அப்போது தாதூ எச்சிலை விழுங்கிக் கொண்டு கிழவரின் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

''ஒன்றும் பயப்படாதே, உனக்கு ஒன்றும் நேர்ந்துவிடாது!'' என்று சமாதானம் கூறியவாறு நாட்டாண்மை அவனுடைய கை கால்களைத் தடவிக் கொடுத்தார்.

கூட்டத்தில் ஒருவன் பேசினன்: '' 'நான் செத்தேன்! என்னைக் கொன்றுவிட்டார்களே!' என்ற கூச்சல் கேட்டதும் நான் வெளியே ஓடி வந்தேன். இருட்டில் ஒன்றுமே தெரியவில்லை. முன்னே சென்று பார்த்தபோது யாரோ கீழே புரண்டபடியே முனகிக் கொண்டிருந்தான். 'யாரப்பா? என்ன நடந்தது?' என்று நான் கேட்டதும் அவன், 'நான் தாதூ, என்னை அடித்துக் கொன்றுவிட்டார்கள்' என்று சொன்னன்...''

ராமாக் கோனன் குறுக்கிட்டான்: ''அட, அடித்தது யார்? எதற்காக அடித்தான்? ஒன்றுமே சொல்லாமல் அடித்தார்கள்; கொன்றார்கள் என்று சொன்னல் சரியாய் விட்டதா?''

''கடவுள்தான் பார்த்திருக்க வேண்டும். அதற்குமேல் அவன் ஒன்றுமே பேசாதபோது, எப்படித் தெரிந்து கொள்ள முடியும்?'' என்றான் பேசியவன்.

''யாராவது ஓடுவதையோ, ஒளிந்து கொள்வதையோ, நீ பார்க்கவில்லையா?''

''இல்லை. என் அம்மா சத்தியமாக யாரையும் பார்க்கவில்லை. பொய் எதற்காகச் சொல்ல வேண்டும்?''

''அப்படியானால், அடித்தது யார் என்று யாரிடமிருந்துதான் தெரிந்து கொள்வது?''

வெளியிலிருந்து ஒருவன் உரத்த குரலில் தன் கருத்தைத் தெரிவித்தான்: ''யார் என்ன சொன்னாலும் சரி, மோஹினிப் பேய் தான் இப்படித் தாக்கியிருக்கணும்!''

''அடே, அப்படியானால் யாராவது போய்ப் படேல் கிராமத்திலிருந்து மந்திரம் போடக்கூடிய பூசாரியை அழைத்து வாருங்கள். அவர் மந்திரம் பலிக்கும் என்று எல்லாரும் சொல்கிறார்கள்!''

போவதற்கு யாரும் தயாராக இல்லை. 'நீ போ, நான் போகவா' என்று ஒரே வெட்டிப் பேச்சு. எனக்கு ஒன்றுமே பிடிக்கவில்லை. நான் சற்று உரத்த குரலில், ''மோஹினிப் பேயுமில்லை, ஒன்றுமில்லை. அவன் கொஞ்சம் களைப்பாறட்டும். எழுந்து உட்காரட்டும். பிறகு என்ன நடந்ததென்று அவனிடமிருந்தே கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்...'' என்று கூறினேன்.

ஆனால் முதல் கோழி கூவியும் கூடத் தாதூ எழுந்து உட்கார முடியாமலே இருந்தான். மெள்ள மெள்ளக் கூட்டம் கலைந்து போயிற்று. அவரவர் வேலையைக் கவனிக்கச் சென்றுவிட்டனர். நான், ஆயபூ, நாட்டாண்மை, ராமாக் கோனான், இன்னும் நாலைந்து பேர் உட்கார்ந்தபடி இருந்தோம். பொழுது விடியும் தறுவாயில்தான் தாதூ நன்றாகக் கண்களை விழித்துக் கொண்டு தண்ணீர் வேண்டுமென்று கேட்டான். தண்ணீரைக் குடித்துச் சிறிதுநேரம் பொறுத்துச் சூடான தேநீரும் அருந்திய பிறகு அவனுக்கு ஓரளவு தெம்பு வந்தது.

''இப்போது எப்படி இருக்கிறது, தாதூ?'' என்றான் ராமா.

''பரவாயில்லை'' என்றான் தாதூ, மெலிந்த குரலில்.

''உன்னை அடித்தது யார்?''

மூச்சைப் பிடித்துக் கொண்டு தாதூ, ''அடித்தவர் என் கண்ணுக்குத் தெரியவில்லை'' என்று கூறினான்.

''எத்தனைபேர் இருந்தார்கள்?''

''ஒன்றுமே தெரியவில்லை. இருட்டில் திடீரென்று என்மேல் கம்பளியைப் போட்டு வாயில் துணியை அடைத்து தடிக் கம்பால்

செம்மையாகச் சாத்தினுர்கள். துஷ்டர்கள் என்னை ஒரு மிருகத்தை அடிப்பதுபோல் அடித்துப் போட்டுவிட்டார்கள், ராமா!''

''யார் மேலாவது உனக்குச் சந்தேகம் இருக்கிறதா?''

தாதூ 'இல்லை' என்ற முறையில் தலையை அசைத்தவாறு என் பக்கம் பார்த்தான்.

பொழுது நன்ருக விடிந்து வெயில் வர ஆரம்பித்ததும், ''சரி, உடம்பைப் பார்த்துக்கொள்'' என்று கூறிவிட்டு நாட்டாண்மை எழுந்தார். நாங்களும் எழுந்து வெளியே வந்தோம்.

''இந்தத் துஷ்டனுடைய தப்பு நடவடிக்கைகள் ஆயிரம் இருக்கும். வேறு கிராமத்தவர் யாராவது அடித்துப் போட்டார்களோ என்னவோ, யார் கண்டது!'' என்ருன் ராமாக் கோனுன்.

''அவன் பேசவில்லையே ஒழிய, அடித்தவர் யாரென்று அவனுக்கு நன்ருகத் தெரியும்!'' என்ருன் ஆயபூ.

''இருக்கலாம்தான். பாம்பின் கால் பாம்புக்குத்தான் தெரியும். நல்லகாலம், அடித்து உதைத்ததோடு நிறுத்திக் கொண்டான். ஒரேயடியாகக் கொன்று போட்டிருந்தால் நாம் என்ன செய்ய முடியும்?'' என்ருர் நாட்டாண்மை.

வீட்டுக்கு வந்ததுமே நான் ஆயபூவிடம் கேட்டேன்: ''ஆயபூ, அந்தக் கோள்மூட்டிக்கும் எனக்கும் ஆகாமலிருந்தது. நாளைக்கு அவன் என்மேல் சந்தேகப்பட ஆரம்பித்தால்?''

''அந்தப் பேடிப்பயல் என்ன செய்ய முடியும்? அதற்கெல்லாம் தகுந்த ஏற்பாடு செய்தாயிற்று. இன்னும் ஆறுமாதத்துக்கு அந்தப் பயல் படுக்கையைவிட்டு எழுந்திருக்க மாட்டான்!'' என்று அலட்சியமாகக் கூறினுன் ஆயபூ.

அப்படியேதான் ஆயிற்று. ஒரு வாரம் இரண்டு வாரம் ஆகியும் தாதூ எழுந்து நடமாடும் சக்தியைப் பெறவில்லை. சீக்கிரம் குணமடைவதற்கான அறிகுறிகளும் தென்படவில்லை. நாள் முழுவதும் படுக்கையில் படுத்தவாறு முனகிக் கொண்டிருந்தான். யாராவது அவனைப் பார்க்கச் சென்ருல்கூட அவன் ஒரு வார்த்தையும் பேசுவதில்லை. இதையெல்லாம் பார்த்துவிட்டு, ''கோள்மூட்டி தாதூவைப் பேய் தான் அடித்திருக்கிறது. இனிமேல் அவன் இதிலிருந்து உயிரோடு பிழைக்க முடியாது!'' என்று கிராமத்தில் பேச்சுக் கிளம்ப ஆரம்பித்தது.

# 14

ஒரு தடவை, இவ்வளவு சின்னஞ்சிறிய கிராமத்தில் நல்ல உறுதியாகக் கட்டிய இரண்டொரு கட்டிடங்கள் இருக்கவேண்டுமென்று வெறுமே என் மனத்தில் ஓர் எண்ணம் தோன்றியது. எண்ணம் சரியானதுதான். ஆனால் அம்மாதிரிக் கட்டிடம் கிராமத்தாருடைய செலவிலேயே உருவாகவேண்டும். இந்தச் செலவை ஏற்றுக்கொள்ள இந்தப் பைத்தியக்கார மேய்ப்பவர் சமூகம் சம்மதிக்குமா? அந்தப் பகுதியில் ஒரு பழமொழி வழங்கி வந்தது: ''மேய்ப்பவனின் பைத்தியம் ஆறு மாதத்துக்கு இறங்காது.'' மேய்ப்பவர்களின் அடம் பிடிக்கும் குணத்தைக் குறிக்கத்தான் அந்தப் பழமொழி தோன்றியிருக்கவேண்டும். கிராமத்தில் கட்டிடம் கட்டவேண்டும் என்ற விஷயமே யாருக்கும் பிடிக்காது. பள்ளிக்கூடம் வேண்டுமென்று சொல்லமுடியுமா? பள்ளிக்கூடத்துக்குத்தான் இடம் என்று ஒன்று இருந்ததே! இடம் போதாமல் அதை விரிவுபடுத்தவேண்டிய தேவை சமீபத்தில் ஏற்படும் என்று தோன்றவில்லை. அப்படி இருக்கும்போது கட்டிடம் எதற்கு? விளையாட்டுக்கூடம் அமைக்கலாம் என்ற எண்ணம் இயற்கையாகவே தோன்றியது. பிள்ளைகள் விளையாடுவதற்கும், சமயம் நேர்ந்தபோது கிராமத்து மக்கள் ஓரிடத்தில் அமர்ந்து கூட்டம் கூடுவதற்கும் அந்தக் கூடத்தைப் பயன்படுத்திக்கொள்ள உதவியாயிருக்கும். அந்தச் சம்ஸ்தானத்து மன்னருக்குத் தேகப் பயிற்சியில் விசேஷ ஈடுபாடு இருந்தது. எனவே கல்வித்துறையிலிருந்தோ, மன்னருடைய சொந்த முறையிலோ உதவி கிடைக்க வாய்ப்பு இருந்தது. நான் இந்தக் கிராமத்தின் பள்ளி ஆசிரியராகப் பணியாற்றியதற்கு நினைவுச் சின்னமாகவும் அது நிலைத்திருக்கும்.

அன்றிரவு ஒவ்வொரு வீட்டுக்கும் ராமோஷியை அனுப்பிக் கிராமத்தவர் அனைவரையும் ஒன்று கூட்டினேன். சாப்பாட்டை முடித்துக்கொண்டு கன்னக்கதுப்பில் புகையிலையை அடக்கிக்கொண்டு கம்பளியைப் போர்த்தபடி மக்கள் வந்து பள்ளிக்கூடத்துக்கு எதிரே உள்ள மைதானத்தில் உட்கார்ந்துகொண்டனர்.

நான் திண்ணையில் உட்கார்ந்திருந்தேன். என்எதிரே நாட்டாண்மை, ராமாக் கோனன், ஷேகூ, தாபூதா ஆகியோர் உட்கார்ந்திருந் தனர். வயலில் வேலை எதுவும் இல்லாதிருந்ததால் எல்லோரும் விடாப்பிடியாக வந்து குழுமியிருந்தனர்.

ஆரம்பத்தில் பொதுப்படையாக க்ஷேமசமாசாரங்களை விசாரித் துக் கொள்வது நடந்தது. கோள்மூட்டித் தாதூரவைப் பற்றியும் பேச்சு எழுந்தது. அவன் படுத்த படுக்கையிலிருந்து நகர முடியா மல் இன்னும் உடம்பெல்லாம் வலியுடன் கஷ்டப்பட்டுக் கொண்டி ருந்தானும். போலீஸில் புகார் செய்யும்படி யாரோ யோசனை கூறி னர்களாம். அதற்கு அவன், ''போலீஸ் மூலம் என்னை அடித்தவர் களைப் பிடிக்க முடிந்தால் கூட அதனல் நான் அடிபட்டதற்கு முழுமையான பரிகாரம் கிடைக்கப்போவதில்லை,'' என்று கூறி விட்டானும்.

''நியாயம் தானே?'' என்று பேசிக்கொண்டார்கள் எல்லோ ரும்.

பிறகு நான் அந்தக் கூட்டத்தைக் கூட்டியதன் கருத்தை எடுத் துரைத்தேன்: ''கிராமத்தில் ஒரு நல்ல கட்டிடம் ஏற்படவேண்டும் என்பதே என் விருப்பம். குடில், குடிசை, மண் வீடு இவற்றையெல் லாம் விட உறுதியான ஒரு கட்டிடம் தேவை. தினந்தோறும் இங்கே நாம் புழுதியில் கூட்டம் போடுகிறோம். மழை பெய்தாலோ, கடுமையான குளிர் நாட்களிலோ இங்கே யாரும் வருவதில்லை. பள்ளிக்கூடத்துக்கு யாராவது அதிகாரி வந்தால், வேறு போலீஸ் அதிகாரியோ மற்றவரோ வந்துவிட்டால், அவர்களை எங்கே தங்கச் செய்வது என்பது தொல்லையாகிவிடுகிறது. தோட்டிகள் - தோல் தொழிலாளிகளுடைய குடியிருப்புகளில் கூட வசதி நிறைந்த உறுதியான கட்டிடம் இருக்கும்போது, நம்முடைய கிராமத்தில் மட்டும் ஏன் இல்லை? ஏன் இருக்கக்கூடாது? எனவே நம்முடைய கிராமத்தில் ஒரு நல்ல விளையாட்டுக்கூடம் அமைக்கப்படவேண்டும் என்று எனக்குத் தோன்றியது. உங்களுடைய கருத்து என்ன?''

எல்லோரும் கசமுசவென்று தங்களுக்குள் பேசிக்கொண்டனர். பள்ளி ஆசிரியருக்கு ஏதோ பைத்தியம் பிடித்திருக்கிறது என்று அவர்களுக்குத் தோன்றியிருக்க வேண்டும். இந்தக் கசமுசப்பு நீடித்துக்கொண்டு போகவே நான் பொறுமையிழந்து கத்தினேன்: ''உங்களுக்குள்ளேயே பேசிக்கொண்டிருக்க வேண்டாம். என்னைக் 'கழுதை' என்று திட்டுவதானலும் வெளிப்படையாகத் திட்டுங்கள். நேராக என்னிடம் பேசுங்கள்!''

பாலாக் கோனுன் புகையிலையைக் குதப்பியவாறு கேட்டான்: ''விளையாட்டுக்கூடம் அமைப்பதற்குக் கிராமத்தில் பயில்வான்கள் எங்கே இருக்கிருர்கள்?''

''பள்ளிக்கூடம் ஆரம்பிக்கும்போதும், 'கிராமத்தில் பிள்ளைகள் எங்கே இருக்கிருர்கள்?' என்று தான் கேட்டீர்கள். ஆனுல் இப் போது பிள்ளைகள் பள்ளிக்கூடத்துக்கு வருகிருர்களா இல்லையா? பத்துப் பன்னிரண்டு பிள்ளைகள் நாளைக்குப் பெரிய பள்ளிக்கூடத்தில் சேர்ந்து ஏழாவது பாஸ் செய்யப் போகிருர்கள்.''

யாரோ ஒருவன் குறுக்கே பேசினுன்: ''பாஸ் செய்வதேது? கொஞ்சம் உருவானதுமே ஆடு மேய்க்கப் போய்விடுவார்கள். ஏழாவது பாஸ்செய்து உங்களைப்போல் வாத்தியார் வேலை பார்க்கப் போகிருர்களா யாராவது? எங்களைப் போன்றவர் யாராவது எழுதப் படிக்கக் கற்றுக்கொண்டு தாலூகாக் கச்சேரியில் உத்தியோகம் பார்க்கப் போயிருக்கிருர்களா?''

நாட்டாண்மைக் கிழவர் அவனுக்கு அறிவுறுத்தும் முறையில் கூறினுர்: ''அடே, இன்று பயில்வான் யாரும் இல்லாமல் இருக்க லாம். ஆனுலும் சிறுபிள்ளைகள் விளையாட ஆரம்பிப்பார்கள் இல் லையா? விளையாட்டுப்போக்கில் அவர்களிலிருந்தே ஒன்றிரண்டு விளையாட்டு வீரர்கள் உருவாவார்கள்.''

''உருவாகவில்லை என்றே வைத்துக்கொள்ளுங்கள். அப்போது கூடக் கிராமத்துக்கு அந்தக் கட்டிடத்தின் உபயோகம் இல்லாமல் போய்விடுமா? நீங்கள் 'கஜி' என்னும் யானை நடனம் ஆடுகிறீர்கள். அதற்கு வேண்டிய சாதனங்கள் மூலைக்கொன்ருகச் சிதறிக்கிடக்கின் றன. தம்பட்டம் ஓரிடத்தில்; ஜாலரா இன்னேரிடத்தில். இப்படி யாகச் சிலம்பம், கழிப் பயிற்சி, வாள் பயிற்சி யாராவது ஒருவர் செய்து கொண்டுதான் இருக்கிருர். அந்தச் சாதனங்கள் எல்லாம் விளையாட்டுக் கூடத்தில் வைக்கப்பட்டிருந்தால் நன்ருகத் தெரிந்த வர்கள் ஓய்வு நேரத்தில் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுக்கலாம் இல்லையா? அது வெட்டி விஷயம் இல்லையே!''

''ஆனுல் விளையாட்டுக்கூடம் அமைப்பதற்கு ஊர்ப்பட்ட பணம் பிடிக்குமே. யார் கொடுப்பார்கள்?''

''கிராமத்தார் சந்தா வசூலித்துக் கொடுக்கட்டும். ஒவ்வொரு வீடும் பத்தோ இருபதோ கொடுக்கலாம்.''

''ஹ்ம்! யாரிடம் இருக்கிறது?''

''நிறையப்பேரிடம் இருக்கிறது. எனக்குத் தெரியும். பணம் யாரிடம் இல்லையோ அவர் உடலுழைப்பைக் கொடுக்கலாம். வண்டி மாடு கொடுக்கலாம். தங்கள் நிலத்திலுள்ள மரத்தைக் கொடுக்கலாம். கிராமம் ஒருமித்துத் தீர்மானம் செய்துகொண்டால் பத்தடுக்குக் கட்டிடம் கூட நொடிப் பொழுதில் தயாராகிவிடும்.''

சொன்னதென்னவோ சொல்லிவிட்டேன். ஆனால். என்னுடைய யோசனை யாருக்கும் பிடித்தமாக இல்லை. வெளிப்படையாக எதிர்ப்புத் தெரிவிக்க யாரும் முன்வரவில்லை. ''கட்டிடம் அரைகுறையாக நின்றுவிடும், அனாவசியக் கேலிக்கு இடமாகிவிடும்.'' இம் மாதிரியே பெரும்பாலோருடைய கருத்து இருந்தது. ஆனால் நான் பேசாமலில்லை. வெவ்வேறு வழிகளில் என்னுடைய கருத்தை வலியுறுத்திக் கொண்டிருந்தேன்.

கிராமத்து முதிய பெரியவர்களை நான் மறுபடியும் ஒன்றுகூட்டி அவர்களுடன் கலந்து ஆலோசனை நடத்தினேன். பல கிராமங்களில் பள்ளிக் கட்டிடங்கள் எப்படி உருவாகியுள்ளன, அரசாங்கம் எப்படியெல்லாம் அவற்றைப் பாராட்டியிருக்கிறது, இதனால் அந்தக் கிராமங்கள் எத்தகைய புகழைச் சம்பாதிக்க முடிந்திருக்கின்றன — இவற்றை மீண்டும் மீண்டும் எடுத்துக்கூறி அந்தப் பெரியவர்களின் சம்மதத்தைப் பெற்றுவிட்டேன்.

இவர்கள் தயாரானதும் இயற்கையாகவே கிராமம் முழுவதும் தயாராகி விட்டது 'செய்துவிடலாமே' என்று ஒருவர் கூறியதும் மற்றவர்களும் 'செய்தால் போயிற்று' என்று சொல்ல ஆரம்பித்தனர். ஒவ்வொரு வீட்டுக்கும் பத்துப் பத்து ரூபாய் வீதம் கொடுப்பதற்கு எல்லோரும் ஒப்புக்கொண்டனர். வண்டிமாடு வைத்திருந்தவர்கள் உழைப்பை நல்க இசைந்தனர். அடுத்த ஐந்தாறு மாதங்களுக்குள் கட்டிடத்தைக் கட்டி முடித்து மன்னரைக் கொண்டு அதற்குத் திறப்பு விழா நடத்தச் சொல்ல வேண்டுமென்றும் தீர்மானமாயிற்று. வாத்தியாரய்யாவின் திறமையினாலும் கிராமத்தாருடைய ஒற்றுமையினாலும், இதுவரை என்றுமே வராதிருந்த ராஜா, இந்த மேய்ப்பவர் கிராமத்துக்கு விஜயம் செய்யப் போகிறார் என்ற கற்பனையே மக்கள் மனத்தில் எல்லையற்ற உற்சாகத்தை நிரப்பியது; நம்முடைய கிராமத்தில் விளையாட்டுக் கூடம் ஏற்படப்போகிறது, ராஜா நம்முடைய கிராமத்துக்கு வரப்போகிறார்—இந்தச் செய்திகள் ஒவ்வொரு வீட்டிலும் பரவின. இந்தமாதிரி எப்போதுமே நடந்ததில்லை என்று பேசிப்பேசிப் பெருமைப்பட்டு அசைபோடக்கூடிய

ப—7

ஒரு நிகழ்ச்சி விரைவிலேயே நடக்கப்போகிறது. எல்லோரும் மிகுந்த கடமையுணர்ச்சியுடன் அவரவர் கொடுக்கவேண்டிய சந்தாத் தொகையை நாட்டாண்மைக் கிழவரிடம் செலுத்தினார்கள். நான் அரசாங்கத்திடம் உதவி கோரி மனுவை அனுப்பிவைத்தேன். கொத்துவேலை செய்பவர்களையும் தச்சுவேலை செய்பவர்களையும் தேடும் படலம் ஆரம்பமாகியது. ஏனென்றால் அத்தகைய தொழிலாளிகள் இந்தக் கிராமத்தில் யாரும் இல்லை. அவர்கள் கேட்ட ஊதியத்துக்கு ஒப்புக்கொண்டு அவர்களை வரவழைப்பதைத் தவிர வேறு வழி இல்லை. மரத்துக்குத் தேவை இருந்தது. தூரத்திலிருந்த குன்றிலிருந்து கற்களைக் கொண்டுவரவேண்டியிருந்தது. முதலில் கல் உடைப்பவர்களுக்கு ஏற்பாடு செய்து, பிறகு வண்டி கட்டிக்கொண்டுபோய் எடுத்து வந்தால் அதற்கப்புறம் கொல்லத்துக்காரர்கள் கட்டுமான வேலையைத் துவக்குவார்கள். 'வீட்டைக் கட்டிப்பார்' என்ற பழமொழி பொய் அல்ல. கிராமப்புறத்தில் ஒரு சாதாரணப் பொருளுக்காக வேலையே நின்றுபோய்விடும். சாதாரணமாக நடைபெறவேண்டிய வேலையைக் கூட நீண்ட நாட்கள் இழுத்தடிப்பதற்கு இதெல்லாமே போதும்.

இவ்வளவெல்லாம் ஏற்பாடுகள் செய்து கொண்ட பிறகு கட்டிடத்துக்கான இடத்தை நிச்சயம் செய்யும் நிலை ஏற்பட்டது. இடம் எங்கு வேண்டுமானாலும் கிடைத்து விடும் என்று நான் எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் விளையாட்டுக்கூடம் அமைப்பதற்கு ஏற்ற இடமாக எதுவுமே தோன்றவில்லை. நன்றாகச் சீர்தூக்கிப் பார்த்த பிறகு, கிராமத்திலேயே எல்லோருக்கும் சௌகரியமான இடம் ஒன்றே ஒன்றுதான் எனக்குத் தென்பட்டது. ஆனால் அந்த இடத்தில் குட்டிச் சுவராக விழுந்து போயிருந்த நான்கு பகுதிகள் கொண்ட வீடு ஒன்று பூட்டப்பட்டுக் கிடந்தது. நான் மனத்துக்குள்ளேயே அந்த இடத்தை நிச்சயம் செய்து கொண்டு அன்றிரவு மற்றவர்களிடம் அதைப் பற்றிக் கூறினேன்.

''ஆனால் அந்த வீடு வேறொருவருடையதாயிற்றே!'' என்றார் நாட்டாண்மை.

''யாருடையது?''

''வேறொரு கிராமத்திலிருந்து பனியா இனத்தவன் ஒருவன் இங்கே வந்து கொஞ்ச காலம் இருந்தான். அவன் கட்டிய வீடு தான் அது.''

''அவன் இப்போது எங்கே இருக்கிறுன்? நாம் அவனிட மிருந்து வீட்டைக் கிரயம் செய்து கொள்ளலாம்.''

நான் இவ்வாறு கூறியதும் எல்லோரும் சிரித்தார்கள். ''பனியா இறந்து போய் விட்டான். டீயும் பீடியுமே அந்த வம்சத்தைத் துண்டித்து விட்டன!'' என்று விளக்கினுன் ஒருவன்.

பிறகு எல்லோரும் அந்த வீட்டுக்குச் சொந்தக்காரனுடைய கதையை எனக்குச் சொன்னுர்கள் குடியினுலும், பெண்மோகத் தாலும், சூதாட்டவெறியாலும் வீடுவாசல் நாசமாகிப் போனதைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டதுண்டு. ஆனுல் தேநீர், பீடி போன்ற சாதாரணப் பழக்கம் காரணமாக பனியா எப்படி உயிரை விட்டான்? எப்படிப் பாழாய்ப் போனுன்? அந்தப் பனியா சாப்பாடு சாப்பிடுவதே கிடையாதாம். தொடர்ச்சியாகக் கூழ் போல் தேநீர் தயார் செய்து குடித்துக் கொண்டிருந்தான். இடைவிடாமல் பீடி குடித்துக் கொண்டிருந்தான். வீட்டில் அவனுடைய கிழட்டுத் தாயார் இருந் தாள். அவள் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். ஆனுல் பனியா செவிசாய்க்கவில்லே. வேலேவெட்டி எதுவும் கிடையாது. மணிக் கொரு தரம் தேநீர் குடிக்க வேண்டியது, ஐந்து நிமிஷத்துக் கொரு முறை பீடியைப் புகைக்க வேண்டியது. தொலேகிறது, அதையாவது தான்மட்டும் செய்தானு என்ருல் அதுவும் கிடையாது. அக்கம் பக்கத்திலுள்ளவர்களே வருந்தி வேண்டித் தன் வீட்டுக்கு அழைப் பான். பத்து இருபது பேர் சேர்ந்ததும் ஒரு பெரிய பாத்திரத்தில் தேநீர் தயாரித்து எல்லோருக்கும் விநியோகித்து டம்ளர்-சாஸர் களில் ஊற்றிஊற்றிக் குடிக்கும்படி வற்புறுத்துவான். கட்டுக் கட்டாகப் பீடிகளே ஒவ்வொருவர் எதிரிலும் வீசுவான், மற்றவர் களுக்கென்ன? இலவசமாக விஷத்தைக் கொடுத்தாலும் வாங்கிக் கொள்வார்கள். தேநீரையும் குடித்து, பீடியையும் ஊதிவிட்டுத் தலேமறைவில், ''பனியா வெட்டி ஜம்பத்துக்காக இதெல்லாம் செய்கிருன். இப்படியே போனுல் ஓட்டாண்டியாக வேண்டியது தான்!'' என்று பேசிக் கொள்வார்கள்.

ஆனுல் சத்யா பனியாவுக்கு எதைப் பற்றியும் அக்கறை இருக்கவில்லே. கொடை வள்ளலாகத்தான் அவன் தர்பார் நடத்திக் கொண்டிருந்தான். வருஷக் கணக்காக இப்படியே நடந்து வந்தது. மெள்ள மெள்ளக் கையிலிருந்த பணம், அப்பன்-பாட்டன் சேர்த்து வைத்த சொத்து எல்லாமே கரைந்து போயிற்று. பிறகு சத்யா, வீட்டுக் கொட்டிலில் நின்றிருந்த அழகான பசுக்களே விற்ருன். நிலத்தை விற்ருன். இப்படியே ஒவ்வொன்ருக விற்று தேநீருக்

காகவும் பீடிக்காகவும் செலவு செய்து கொண்டிருந்தான். கடைசியில் அவனிடம் விற்பதற்கு எதுவுமே மிஞ்சியிருக்கவில்லை. முன்பு வஸ்தாதுபோல் தேகக்கட்டு வாய்த்திருந்த பனியா இளைத்துத் துரும்பாகி விட்டான். பீடிப் புகையால் அவனுடைய நெஞ்சு சல்லடைபோல் ஆகிவிட்டது. தேநீர் அருந்தி அருந்திப் பசியே செத்துப்போய் விட்டது. இழுப்பும் இருமலும் வதைத்தெடுத்தன. இதன் மத்தியில் கிழத் தாயாரும் போய்ச் சேர்ந்தாள். சத்யா தன்னந்தனியன் ஆகிவிட்டான். உழைத்துச் சம்பாதிப்பதற்கு அவனுடைய உடலில் திராணியே இல்லை. வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்தவாறு போவோர் வருவோரிடம் பீடி கொடுக்கும்படி யாசித்துக் கொண்டிருப்பான். கிராமத்துக் கிழவிகள் அவனிடம் இரக்கம் கொண்டு வெல்லம் போட்ட தேநீர் அவனுக்குக் கொடுப்பார்கள். இந்த நிலைமையில் சத்யா சில நாட்கள் ஜீவித்த பிறகு ஒருநாள் சொறி நாயைப்போல் இறந்துபோனான்.

சத்யா பனியாவின் இந்தக் கதையைக் கேட்ட பிறகு நான் கூறினேன்: ''அதாவது இப்போது இந்த இடத்திற்கு உரிமை கொண்டாடக் கூடிய வாரிசு யாரும் உயிருடன் இல்லை. விளையாட்டுக் கூடத்துக்காகக் கிராமம் அந்த நிலத்தை எடுத்துக் கொண்டால் யாரும் தடை சொல்ல மாட்டார்கள்.''

ஆனால் இந்த யோசனையை ஏற்றுக்கொள்ள யாரும் தயாராக இல்லை. பனியாவின் நிலத்தை எப்படி எடுத்துக் கொள்வது என்ற கேள்விக் குறியுடன் ஒவ்வொருவரும் வாயை மூடிக்கொண்டிருந்து விட்டனர். நான் பல தடவை சொல்லிப் பார்த்தேன். அந்தப் பாழ் மனையை இடித்துத் தள்ளிவிட்டால் விளையாட்டுக்கூடம் அமைப்பது எளிதாக இருக்கும் என்று எடுத்துரைத்தேன். ஆனால் யாரும் காதில் போட்டுக் கொண்டதாகத் தெரியவில்லை. பிறகு ஒருநாள் நானே பள்ளிப் பிள்ளைகளை உடனழைத்துக் கொண்டு சென்று அந்தக் குட்டிச் சுவர்களைத் தகர்த்துத் தரைமட்டமாக்கும் வேலையைத் துவக்கினேன். வானரசைனியம் உற்சாகத்துடன் இந்த வேலையில் ஈடுபட்டது. கடப்பாரை, மண்வெட்டி முதலியவற்றுடன் வந்து பனியாவின் சிதிலமான வீட்டை இடித்துத் தள்ள ஆரம்பித்தனர். வாத்தியாரய்யா கடப்பாரையும் கையுமாக வீட்டை இடிக்க ஆரம்பித்து விட்டார் என்று தெரிந்ததும் கிராமத்து மக்களும் வந்து விட்டனர். முதல் முதலில் கடப்பாரைப் பிரயோகம் என் கையால் நடந்துவிட்டபடியால் பாவம் முழுவதும் என் தலையில்

தான் சுமரும். பாவத்துக்குப் பொறுப்பாளி நாளுகி விட்ட பிறகு மற்றவர்களுக்கு எந்தவிதமான ஆபத்தும் இல்லை என்று உறுதி ஏற்பட்டது. கிராம மக்கள் நிறையப் பேர் வந்து சேர்ந்தனர். விரை விலேயே அந்த இடம் சுத்தமாகி விட்டது. நாலைந்து நாட்களில் பனியாவின் வீடு அங்கே இருந்ததற்கான அடையாளம் எதுவுமே மிஞ்சாமல் தரைமட்டமாக்கப்பட்டு விட்டது.

இதன்பின்பு, மரங்களைச் சேகரிக்கும் கைங்கரியம் ஆரம்ப மாயிற்று. கிராமத்திலுள்ள நாலைந்து பொறுப்பு வாய்ந்த மனிதர் களை உடனழைத்துக் கொண்டு நான் வயல்களிலும், தோப்பு துரவு களிலும் சுற்றினேன். கட்டிடத்துக்கு உபயோகப்படக் கூடிய வேப்ப மரம் யார் யாருடைய தோட்டங்களில் இருந்ததோ அவரவர் ஓரளவு முணுமுணுப்புடன் தானென்றாலும், மரம் கொடுப்பதற்கு இசைந்தனர். ஆனாலும் கூட எல்லாவற்றிலும் மோசமான மரமாக, உள்ளே பொக்கையான மரமாகவே சுட்டிக் காட்டினர். அதைப் பற்றி அவர்களிடம் மன்றாடும்படி இருந்தது. எனக்கு ஆத்திரமும் எரிச்சலுமாக வந்தது. நானென்ன என்னுடைய வீடு கட்டிக் கொள் வதற்கா மரத்தைக் கேட்கிறேன்? இருந்தாலும் மரத்தை விட்டுக் கொடுக்க மனமில்லை அநேகருக்கு. தாமாக மனமுவந்து கொடுக்க யாரும் முன் வரவில்லை என்று அர்த்தமில்லை. ஆனால் தொல்லை பெரிதாயிருந்தது. மரம் கொடுப்பதாகச் சம்மதம் கிடைத்த பிறகு, ஆட்களை அழைத்துக்கொண்டு சென்று மரத்தை வெட்டி வீழ்த்து வது, அதை அறுப்பது, யாரிடமாவது வண்டி - மாடு கேட்டு வாங்கிக்கொண்டு அறுத்த மரங்களை ஏற்றிக் கொண்டுவந்து பள்ளிக்கூடத்துக்குப் பக்கமாகப் போடுவது, தச்சரிடம் அவற்றை ஒப்புவிப்பது-இந்த வேலைகள் தொடர்ந்தன. தேவையான நேரத் துக்கு ஆட்கள் கிடைப்பதில்லை, வண்டியும் மாடுகளும் கிடைப்ப தில்லை. அதற்காக எரிச்சல்படுவது, கையைக் காலைப் பிடித்துக் கெஞ்சுவது, அச்சுறுத்துவது—எல்லாமே செய்ய வேண்டியிருந்தது. இதெல்லாம் எல்லைமீறிப் போகும்போது நான் நாட்டாண்மையிடம், ''ஐயா, போதும் இந்த விளையாட்டுக்கூடம் கட்டும் வேலை. நான் போகிறேன் விடுமுறை எடுத்துக்கொண்டு, விளையாட்டுக்கூடத்தை நீங்கள் கட்டுங்கள், கட்டாமலிருங்கள், எனக்கு அக்கறை இல்லை. உங்களில் யாருக்குமே அதைப்பற்றி அக்கறை இல்லாதபோது நான் எதற்காக என் ரத்தத்தைச் சுண்டச்செய்து கொள்ளவேண் டும்?'' என்று எரிச்சலும் புடைச்சலுமாகக் கூறுவேன்.

நாட்டாண்மை பொறுமையுடன் எனக்குப் புத்தி கூறுவார்: ''குழந்தாய், நீ போய்விட்டால் அப்புறம் கட்டிடம் ஏது! நீ பட்ட கஷ்டமெல்லாம் வீணுகிவிடும். மரம் மக்கிப்போகும், கற்களே அவரவர் எடுத்துக்கொண்டு போய்விடுவார்கள். அட, கட்டிடம் கட்டுவதென்ருல் லேசான காரியமில்லேயே! கஷ்டப்பட்டுத் தான் ஆகவேண்டும். பொதுக் காரியமென்ருல் தோட்டி வேலே கூடச் செய்யத் தயாராக இருக்கவேண்டும். இப்போது ஏற்றுக்கொண்ட வேலேயைக் கரைசேர்த்து விடுவது நம் கடமை.''

ஆனுல் நான் மட்டும் அதை அரைகுறையாக விட்டுப் போகக் கூடியவனு என்ன? அது என்னுல் இயலாத தாயிற்றே! இந்த விளே யாட்டுக் கூடம் கட்டும் விவகாரம் இப்போது என்னுடைய சொந்த வெற்றி தோல்வியை நிர்ணயிக்கும் விஷயமாகி விட்டது. அக்கம் பக்கத்திலுள்ள சிறிய கிராமங்கள் ஆவலுடன் இந்தக் கிராமத்தைப் பார்த்துக் கொண்டிருந்தன. இந்த மேய்ப்பவர் இனம், வெறும் ஆட்டு மந்தை. இவர்களால் இந்த வேலே எப்படி நடைபெற முடியும்? 'வாத்தியார் உற்சாகமுள்ளவர்தான். ஆனுல் உற்சாகத் தால் மட்டும் ஒரு காரியத்தைச் சாதித்துவிட முடியுமா?' என்று பேசிக்கொண்டனர் மற்ற ஊர் மக்கள். பக்கத்திலுள்ள பத்துப் பதினேந்து கிராமங்களில் இல்லாத அளவுக்குச் சிறந்ததான ஒரு விளேயாட்டுக் கூடத்தைக் கட்டிக் கொடுத்து அவர்களுக்கு எடுத்துக் காட்டாக என் ஆர்வத்தை நிறையச் செலுத்த வேண்டியிருந்தது.

மரம் சேகரிக்கும் தொடர்பில் ஒரு நாள் நான் பாலாக்கோனு னின் வயலுக்குப்போய்ச் சேர்ந்தேன். என்னுடன் ஆயபூவும் ஆனந் தாவும் வந்தார்கள். முக்கியமான விஷயமென்னவென்ருல் பாலாக் கோனுனின் வயலில் இருந்த அந்த மரம் எங்களுக்குக் கட்டாய மாகத் தேவைப்பட்டது. உத்தரத்துக்காக அதை உபயோகப் படுத்தத் திட்டம் போட்டிருந்தேன். வழியிலேயே ஆனந்தா, கருவ மரத்தில் உட்கார்ந்திருந்த ஒரு காடையைக் கவண் கல்லால் அடித்து வீழ்த்திஞன். அது துடிதுடித்துக் கொண்டிருந்த போதே ஆயபூ முன்னே பாய்ந்து அதைப் பிடித்துக் கொண்டான். காடை யின் கழுத்துத் தொங்கிப்போயிற்று. ஆனந்தா மறுபடியும் மரங் களே நோட்டம் விட ஆரம்பித்தான். ஆயபூ என் பின்னுல் நடந்து கொண்டே அந்த இறந்த பறவையின் இறகுகளே நீக்க ஆரம் பித்தான்.

நான் தனியாகவே வேகமாக முன்னே நடந்து சென்றேன். பிற்பகல் நான்கு, நாலரை மணி இருக்கும். நான் வயலுக்குப் போய்ச் சேர்ந்தபோது பாலா அந்த வேப்பமரத்து நிழலில் உட்கார்ந்து மாடு கட்டும் பழைய கயிறென்றைப் பிரித்துச் சரிசெய்து கொண்டிருந்தான். இடுப்பில் அணிந்திருந்த வேட்டியைத் தவிர அவன் உடம்பில் வேறு எதுவும் இல்லை. சிறிய நெற்றி, அகன்ற மூக்கு, சப்பையான மோவாய் – இந்த லட்சணங்கள். உடைய பாலா மர நிழலில் உட்கார்ந்து மாடுகட்டும் பழைய கயிற்றைச் சரிபார்ப்பதில் முழு மனத்துடன் ஈடுபட்டிருந்தான்.

என்னைப் பார்த்ததுமே நான் எதற்காக வந்திருக்கிறேன் என்பதை அவன் புரிந்துகொண்டான். எழுந்து என்னை வரவேற்கவில்லை. என்னை உட்காரும்படி கூடச் சொல்லவில்லை. ஏதாவது பேச வேண்டுமல்லவா? அதற்காக, ''எங்கே புறப்பட்டீர்கள், வாத்தியாரய்யா?'' என்று கேட்டான்

''நேரே உங்களிடம் தான் வருகிறேன்!'' என்றேன், சிரித்துக் கொண்டே. பின்பு கீழே இருந்த ஒரு கல்லின் மேல் உட்கார்ந்து கொண்டேன். அதற்கதிகமாகப் பாலா எதுவும் பேசவில்லை. நான் தான் துணிச்சலை வரவழைத்துக்கொண்டு, ''கட்டிடத்துக்கு மரம் எப்போது கொடுக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''எந்த மரம்?''

இந்த மாதிரிப் பதிலுக்கு நான் பழக்கப்பட்டிருந்தாலும் என் மனம் சற்று வேதனை அடைந்தது. அந்த வேதனை என் முகத் தோற்றத்திலும் வெளிப்பட்டிருக்க வேண்டும். மேலே வேப்ப மரத்தைப் பார்த்துக்கொண்டே நான் கூறினேன்: ''வேறு எந்த மரம்? நாம் எந்த மரத்தின் நிழலில் உட்கார்ந்திருக்கிறோமோ அதையே தான் கேட்கிறேன்.''

பாலா தலையை அசைத்தான். ''இது கிடைக்காது.''

'ஏன்?''

''என் இஷ்டம்!''

''இப்படிச் சொன்னால் காரியம் எப்படி நடக்கும்?''

''எப்படி நடக்காதென்று பார்த்து விடுகிறேன். எவன் கையில் பலம் இருக்கிறதோ, அவனால்தான் இந்த மரத்தை வெட்டி எடுத்துச் செல்ல முடியும்.''

''வலுக்கட்டாயமாக எடுத்துச் செல்லும் பேச்சே இல்லையே. இது சந்தோஷத்துடனும் சம்மதத்துடனும் நடக்கவேண்டிய விஷயம்.''

''சரி, எனக்குச் சந்தோஷமும் இல்லை, சம்மதமும் இல்லை. எனக்குக் கிராமமும் வேண்டாம், விளையாட்டுக் கூடமும் வேண்டாம். என்னுடைய வயலில் நிழலுக்காக இருப்பது இந்த ஒரு மரம்தான் என்னுடைய மாடுகள், மற்றப் பிராணிகள், குழந்தை குட்டிகள் நிழலுக்காக ஒரு நாழிகை அரை நாழிகை உட்கார்வதற்கு இருக்கும் இந்த மரத்தை நீங்கள் கொண்டுபோய் விடுவதா! நான் கொடுக்கமாட்டேன். மரத்தில் கோடரியைப் போடுவதற்கு முன்னால் அந்தக் கோடரியை என் கழுத்தில் போட்டுவிட்டுப் பிறகு நிம்மதியாக வெட்டிக்கொண்டு போங்கள் மரத்தை!''

''நல்லது!'' என்று கூறிவிட்டு நான் எழுந்து கிராமத்தை நோக்கி நடந்தேன். வழியில் ஆயபூவும் ஆனந்தாவும் எதிர்ப்பட்டார்கள்.

''வாத்தியாரய்யா, பாலாவின் மரம் கிடைத்ததா?''

''இல்லை. 'கோடரியால் முதலில் என் கழுத்தை வெட்டுங்கள், பிறகு மரத்தை வெட்டுங்கள் என்று அவன் சொல்கிறான்!'' என்றேன்.

அதற்குப் பிறகு நாட்டாண்மைக்காரர், ராமாக் கோனன் உள்ளிட்ட இன்னும் நாலைந்து பேர்களை அழைத்துக்கொண்டு நாங்கள் மறுபடியும் பாலாவிடம் சென்றோம். அப்போதும் அவன் மாட்டுத் தும்பைப் பிரித்துப் போட்டுக்கொண்டு மரத்தடியிலே தான் உட்கார்ந்திருந்தான். அவனுடைய வெள்ளாடுகள் காதுகளை ஆட்டியவாறு இங்கும் அங்குமாக உட்கார்ந்திருந்தன. பிள்ளைகுட்டிகள் உட்கார்ந்திருந்தார்கள். அதே வேப்ப மரத்தின் நிழலில் தான் அவன் தன்னுடைய இரண்டு எருதுகளையும் கட்டிவைத்திருந்தான். அவனுடைய நாயும் உடம்பைச் சுருட்டிக்கொண்டு படுத்திருந்தது. நாங்கள் அங்கே போய்ச் சேர்ந்ததுமே பாலா கையில் கோடரியை எடுத்துக் கொண்டு எழுந்து நின்றான். நாங்கள் நின்ற இடத்திலேயே நின்றுவிட்டோம். அந்த வாட்டசாட்டமான ஆள் நேரடியாக அடி உதையில் இறங்கிவிடக் கூடாதே என்ற பயத்துடன் நான் வெலவெலத்து நின்றேன். பாலாக் கோனன் கோடரியை ஏந்தியவாறு எங்களை நோக்கி வந்தான். அவன் வரும் வேகத்தைப் பார்த்துவிட்டு நாட்டாண்மைக் கிழவர் முன்னே சென்றார். வேறு யாருடைய காலும் இருந்த இடத்தை விட்டு நகரவில்லை. ஆனால் அந்தத் தள்ளாத கிழவரான நாட்டாண்மை, கஷ்டத்துடன் அடியெடுத்துவைத்து முன்னே சென்றார். பாலா சட்டென்று

கோடரியை அவருடைய கையில் கொடுத்துக் கூறினன்: ''மரத்தை வெட்டுவதற்கு முன்னல் என்னுடைய கழுத்தை வெட்டுங்கள் என்று வாத்தியாரய்யாவிடம் நேற்றுக் கூறியதையே இப்போது உங்களிடம் சொல்கிறேன்.''

இவ்வாறு சொல்லிவிட்டுத் திரும்பிய அவன், மரத்தின் அடியில் உட்கார்ந்திருந்த தன்னுடைய குடும்பத்தைச் சுட்டிக்காட்டி, ''இத்தனை பிராணிகளையும் பெண்டு பிள்ளைகளையும் கழுத்தை வெட்டிக் கொன்றுவிட்டு, பிறகு மரத்தை வெட்டிக் கொள்ளுங்கள்!'' என்ருன்.

நாட்டாண்மைக் கிழவர் அவனுடைய கையைப் பிடித்து அவனை நிழலுக்கு அழைத்துச் சென்று உட்கார வைத்த பிறகு, ''குழந்தாய், ஒன்றும் பேசாமல் நான் சொல்வதைக் கேள்,''... என்ருர்.

பாலா அவருடைய கரத்தை உதறித் தள்ளிவிட்டு எழுந்து கையை மடக்கிக்கொண்டு கூறினன்: ''நான் யாருடைய பேச்சையும் கேட்கப்போவதில்லை. நீங்களெல்லோரும் என்னை மண்ணேடு மண்ணுக்கிவிடத் திட்டம் போட்டிருக்கிறீர்கள். நான் அந்த விளையாட்டுக் கூடத்துக்கு எந்தவிதமான உதவியும் செய்யமாட்டேன். மரத்தைக் கொடுக்கப்போவதில்லை. என்ன நடந்தாலும் நடக்கட்டும்!''

நாட்டாண்மை அப்போதும் பொறுமை இழக்கவில்லை. ''அர்த்தமில்லாமல் ஆத்திரப்படாதே தம்பி, கிராமத்துக்காக ஒரு மரம் கொடுத்துவிட்டதால் உன்னுடைய குடும்பம் முழுகிப்போய் விடாது.''

''முழுகிப்போனலும் சரி, முழுகிப்போகாவிட்டாலும் சரி, நான் மரத்தைக் கொடுக்க மாட்டேன் என்ருல் மாட்டேன் தான்!''

''இந்தப் பேச்சுத்தான் முடிவானதா?''

''ஆமாம். முடிவான பேச்சு. சம்ஸ்தான அதிகாரி வந்து கேட்டாலும் கொடுக்கமாட்டேன். இங்கிலீஷ் துரை வந்து கேட்டாலும் கொடுக்கமாட்டேன். இதற்காக என்னை யார் தூக்குமேடைக்கு அனுப்பப் போகிருர்கள் என்று பார்த்துவிடுகிறேன்!''

இவ்வளவு பேச்சைக் கேட்ட பிறகு நாட்டாண்மைக் கிழவர் திடுமென்று திரும்பி, எங்களுக்குக் கையசைத்துச் சைகை செய்தவாறு, ''சரி, புறப்படுங்கள். திரும்பிப் போகலாம்!'' என்று கூறினர்.

பாலாக் கோனுனின் திமிர்பிடித்த நடத்தையால் எல்லோரும் கோபம் கொண்டார்கள். அவனுடைய வயலில் நிழலுக்கு இந்த ஒரு மரம் தான் இருந்தது என்ற பேச்சு அவ்வளவு சரியல்ல. வரப்பில் வேறு சிறிய சிறிய வேப்ப மரங்கள் இருந்தன. அவன் வெயிலிலேயே முற்றிலும் உட்கார்ந்திருக்கவேண்டும் என்ற நிலைமையே இருக்கவில்லை.

நாட்டாண்மை எங்களைப் புறப்படும்படி சொல்லிய பிறகு கூட ராமாக் கோனுன் அசையவில்லை. விறைப்பாக அவன் கூறினுன்: ''பாலா, இது சரியில்லை. நீ கிராமத்துக்கு விரோதமாகப் போய்க் கொண்டிருக்கிருய்.''

பதிலுக்குப் பாலா கூச்சலிட்டான்:''எனக்குக் கிராமமும் தேவையில்லை, சமூகமும் தேவையில்லை. எட்டு வருஷமாக நான் என் நிலத்திலேயே இருந்து கொண்டிருக்கிறேன். இன்னமும் இருப்பேன். கிராமத்தின் பெயரைச் சொல்லி என்னைப் பயமுறுத்துகிருயே, விதவையானவளுக்கு வீண் அவதூறைப் பற்றிப் பயமா? ஏண்டா ராம்யா?''

இதைக் கேட்டதும் ராமாவும் ஆனந்தாவும் பொங்கிய கோபத்துடன் பாலாவை நோக்கிப் பாய்ந்தனர். ஆனுல் நாட்டாண்மை தம் கைத்தடியைக் குறுக்கே பிடித்து அவர்களைப் பின்னுக்குத் தள்ளிஞர். அவர் பாலாவை நோக்கி உறுதியான குரலில், ''பாலா, நீ சொல்லிய வார்த்தைகளைக் கடைசிவரை கடைப்பிடிக்க வேண்டும். கிராமத்துப் பக்கம் ஒருபோதும் வரக்கூடாது!'' என்று கூறிஞர்.

பிறகு நாங்கள் ஒருவரோடொருவர் ஒன்றும் பேசாமல் வயலிலிருந்து கிராமத்துக்குத் திரும்பி வந்தோம்.

கிராமத்தை நெருங்கியதுமே நாட்டாண்மைக்கிழவர் இவ்விதம் கூறிஞர் : ''இந்தப் பாலாவை யாரும் நலம் விசாரிக்கக் கூடாது. அவனுடைய ஆடுமாடுகளை யாரும் தன்னுடைய வயலின் வழியே நடக்க விடக்கூடாது. அவனுடைய துன்ப துயரங்களைப் பற்றி நினைக்கக் கூடாது. நானும் பார்த்து விடுகிறேன், அவன் எந்த அளவு வரை போகிருனென்று.''

விரைவிலேயே இந்தச் சமாசாரம் கிராம முழுவதும் பரவி விட்டது. பாலாக் கோனுன் மீது மறியல் விதிக்கப்பட்டிருக்கிறது, அவனுக்கு நீர்-நெருப்பு நிறுத்தப்பட்டிருக்கிறது என்ற செய்தி கிராமத்திலுள்ள ஒவ்வொரு குழந்தைக்கும் கூடத் தெரிந்து போயிற்று.

உடனே மறியல் கட்டுப்பாட்டை நிறைவேற்றவும் தொடங்கி விட்டனர். பாலாவின் மகன் ஆடு வெட்டுவதற்காக ஆயபூவை அழைத்தபோது, ''நான் வரமுடியாது. உன்னுடைய வீட்டின் மேல் கிராமத்தார் மறியல் செய்திருக்கிறார்கள்!'' என்று வெளிப் படையாக மறுத்துவிட்டான்.

''ஆனால் உனக்கும் கிராமத்துக்கும் என்ன சம்பந்தம்? நீ வெளி ஆள், வீசியெறியப்படும் காசுக்கு வேலை செய்பவன்தானே! நான் உன்னை இலவசமாக வேலைக்கு அழைக்கவில்லை. ஒரு சேர் ஒண்ணரைச் சேர் தானியம் கூலியாகக் கேட்டு வாங்கிக் கொள்.''

''உன்னுடைய ஒரு சேர், ஒண்ணரைச் சேர் எனக்குத் தேவை இல்லை. நீ போகலாம்!''

இந்த விஷயம் பாலாவுக்குத் தெரிந்தபோது அவன் தன் பிள்ளையைத் தான் கோபித்துக் கொண்டான். பத்து மைல் தூரத் தில் உள்ள பட்டணக் கரைக்குப் பையனை அனுப்பி அங்கிருந்து கசாப்புக்காரனை வரவழைத்து ஆட்டை வெட்டச் சொன்னான்.

பாலாவின் வயலில் கூலிவேலை செய்வதற்குக் கிராமத்திலிருந்து யாரும் போவதில்லை. அப்போது பாலா வேறோர் ஊரிலிருந்து அதிகக் கூலி கொடுத்து ஆட்களை வரவழைத்தான். அவனுடைய கிணற்றுத் தண்ணீர் உவர்ப்பாக இருந்தது. எனவே அவனுடைய மனைவி கிராமத்துக் கிணற்றிலிருந்து இரண்டு குடம் நல்ல தண்ணீர் எடுத்துப் போய்க் கொண்டிருந்தாள். கிராமத்தார் இதைத் தடை செய்துவிட்டனர். அதன்பேரில் பாலா தினந்தோறும் மூன்று மைல் தூரம் நடந்து சென்று எங்கிருந்தோ நல்ல குடி தண்ணீர் எடுத்து வர ஆரம்பித்தான். தன் மாடுகளை மற்றவர்களின் வயல் வழியே எடுத்துச் செல்வதை அவன் நிறுத்திவிட்டான். அவனுடைய குழந்தைகள் பள்ளிக்கூடத்துக்கு, கிராமத்துக்கு வருவதும் நின்று போயிற்று. பாலாக்கோனன் கிராமத்துக்குத் தலைவணங்குவதற்குக் கண்டிப்பாக மறுத்துவிட்டான். அந்த அடம் பிடித்த ஆசாமி தன் பிடிவாதத்திலேயே உறுதியாய் நின்று கொண்டிருந்தான். அவன் எந்த அளவு வரை இந்த மறியலைப் பொறுத்துக் கொண்டிருக்கப் போகிறான் என்று கிராமம் எதிர் நோக்கியவாறு இருந்தது.

# 15

என்னுடைய கணக்கு முற்றிலும் தப்பாகிவிட்டது. எவ்வளவோ உற்சாகத்துடன் நான் மேற்கொண்ட விளையாட்டுக்கூடம் கட்டும் வேலை எறும்பு ஊர்வதைப்போல் முன்னுக்கு நகர்ந்து கொண்டிருந்தது. கட்டிடத்துக்குத் தேவையான மரத்தைச் சேகரம் செய்வதில் தான் அதிகத் தாமதம் நேர்ந்துவிட்டது. கல் உடைப்பவர்கள் மலையிலிருந்து கற்களை உடைத்துத் தள்ளினார்கள். ஆனால் அந்தக் கற்களைக் கிராமத்துக்குக் கொண்டு வருவதற்கு மிகுந்த அலைச்சலும் முயற்சியும் தேவைப்பட்டன. பூச்சு வேலைக்கான சுண்ணும்பைத் தாலூக்காத் தலைநகரிலிருந்து கொண்டு வந்து அதை அரைவையில் போட்டு அரைத்துத் தயார் செய்வது, ஆணிகளும் மற்றச் சாதனங்களும் சேகரிப்பது — இம்மாதிரிச் சிறியதும் பெரியதுமான விஷயங்கள் வெட்டியாக நேரத்தைத் தின்றுகொண்டிருந்தன. எனக்கோ எந்தவிதமான அனுபவமும் கிடையாது. எனவே நேரம் வெட்டியாகப் போய்க் கொண்டிருக்கிறது என்ற ஆத்திரத்துடன், வேலை செய்பவர்களைக் கோபித்துக் கொண்டு அதட்டி விரட்டுவேன். ஆனால் கிராமத்து மக்களுக்கு இதெல்லாம் எப்போதும் பார்த்துப் பழகிப்போன விஷயங்கள். கட்டிட வேலையோ, கிணறு வெட்டும் வேலையோ கிராமத்தில் ஆரம்பமானால் அது பூர்த்தியடைவதே ஒரு மகத்தான நிகழ்ச்சியாகக் கருதப்பட்டு வந்தது. தவறினால், இந்த மாதிரித் துணிச்சலுடனும் உற்சாகத்துடனும் ஆரம்பிக்கப் பட்ட எத்தனையோ காரியங்கள் உரிய சமயம் ஆன பிறகும் கூட அரைகுறையாக நிற்பதுதான் வழக்கம். வீடு கட்டப்பட்டால், கதவு வைக்கவேண்டியது பாக்கி நிற்கும், அல்லது ஆணிகள் முடுக்குவது பூர்த்தியாகி இருக்காது, சில சமயம் திண்ணை மேடை கட்டப்படாமல் கிடக்கும். கிணறு வெட்டப்பட்டிருக்கும், ஆனால் கிணற்றடி பூசப்படாமல் மண்ணும் கல்லுமாய் இருக்கும். இரண்டு ஜகடைகளில் ஒரு ஜகடை தான் பொருத்தப்பட்டிருக்கும். தேவையான அளவுக்கு வேலை நடந்தாயிற்று, இப்போது

கிணற்றிலிருந்து தண்ணீர் இழுக்கும் வேலைக்கு இடைஞ்சல் இல்லை, ஆகவே கிணற்று வேலை பாக்கி இருப்பதைப் பின்னால் முடித்துக் கொள்ளலாம், என்று நினைத்துத் தளர்வடைந்து விடுகிறான் கிராமவாசி. அரைகுறையாக நின்றுபோன வேலை மறுபடியும் பூர்த்தி ஆவதே கிடையாது. இப்படி அரைகுறை யாய் நின்றுபோன வேலைகளே கிராமத்தில் எத்தனையோ தென் படும். கிராமத்து மக்களுக்கு இதெல்லாம் அனுபவத்தில் தெரிந்த உண்மைகள். ஆகவே எந்த வேலையும் விரைவாக நடக்கவில்லை என்றால் அதை அவர்கள் தப்பாக நினைப்பதில்லை. தினசரி தாங்கள் கவனிக்கவேண்டிய வேலைகளைக் கவனித்து விட்டு விளையாட்டுக் கூடத்தின் வேலைகளை அவர்கள் செய்து வந்தார்கள்.

பசி, தூக்கம், எதையுமே பொருட்படுத்தாமல் நான் இந்த வேலையில் ஈடுபட்டிருந்தேன். ஏழெட்டு நாட்கள் தாடி வளர்த்து விட்டுக்கொண்டு, வேளைக்குக் குளிக்காமல், சாப்பிடாமல், இப்படிப் பெரும்பாலும் இதற்காகப் பாடுபடவேண்டியிருந்தது. விடுமுறை நாளில் கூட நான் சொந்த வீட்டுக்குப்போய் வருவது முடியாது போயிற்று. சுண்ணாம்பு அரைவை, மரம், படிகள், உத்தரங் கள், தூண்கள்—இவற்றைத் தவிர வேறு எண்ணங்களுக்கே என் மூளையில் இடம் இல்லை.

கற்களைச் சுமந்து சுமந்து கிராமத்திலிருந்த மாட்டு வண்டி களெல்லாம் ஒடிந்து நாசமாகிவிட்டன. கொத்து வேலைக்காரர் கள் கற்களைச் சமன் செய்யப் பயன்படுத்தும் உளிகளின் சத்தத் தால் கிராமத்தாரின் காதுகள் செவிடாகிவிடும்போல் ஆயின. நடக்கும் வழியெல்லாம் கல் துணுக்குகள் சிதறிக்கிடந்தன. மரம் அறுக்கும்போது குவிந்த மரப்பொடி குப்பல்குப்பலாகக் கிடந்தது.

அலைந்து அலைந்து ஆயபூவின் கால்கள் புண்ணாகிவிட்டன. எந்த வேலை கொடுத்தாலும் செய்து செய்து அவனுடைய கட்டுடல் தளர்ந்து போயிற்று. வரம்பில்லாமல் வேலைக்கு மட்டம் போடும் ஆனந்தாகூட ஓடியாடி வேலை செய்து கொண்டிருந் தான். விளையாட்டுக்கூட வேலையிலேயே மூழ்கி இருப்பதால் தன் தகப்பனார் வீட்டையே கவனிப்பதில்லை என்று ராமாவின் பிள்ளை புகார் செய்து கொண்டிருந்தான். நாட்டாண்மைக்கார ரின் வயல் வேலை கெட்டுக் கொண்டிருந்தது. விளையாட்டுக்கூடம்

அமைக்கும் வேலை மும்முரம் ஒவ்வொருவரையும் ஆட்டிவைத்துக் கொண்டிருந்தது. இந்த நிர்மாண வேலையில் ஏதாவது ஒரு விதத்தில் தொடர்பு கொள்ளாதவர் யாருமே கிராமத்தில் இருக்கவில்லை.

இதே நிலையில் இரண்டாவது அறுவடைப் பருவமும் கழிந்து போயிற்று. விரலைச் சொடுக்கும் நேரத்தில் ஒரு வருடம் கடந்து விட்டதுபோல் தோன்றியது. மேய்ப்பவர்கள் ஆடுகளின் ரோமத்தைக் களைந்தார்கள். மேய்ப்பவர் இனத்துப் பெண்கள் அந்த ஆட்டு ரோமத்தை அடித்துச் சுத்தம் செய்து தக்ளியிலும் கைராட்டினத்திலும் அதை நூற்றார்கள். நூல் சிட்டங்களை விற்றுப் பணமாக்கினார்கள். ஆண்டு முழுதுக்கும் தேவையான துணிகளை வாங்கிக் கொண்டார்கள். ஆண் பிள்ளைகளுக்குத் தேவையான தலைப்பாகைகள், வேட்டி சட்டைகள் வாங்கிக் கொண்டார்கள். சிலர் கம்பளி நூலைத் தறிகாரர்களிடம் கொடுத்து முரட்டுக் கம்பளங்களை நெய்யச் சொல்லி வாங்கிக் கொண்டார்கள். செம்மறி ஆடுகள் மீண்டும் குட்டி போட்டன. முந்திய குட்டிகள் தாய் ஆட்டின் அடையாளத்தை மறக்கத் தொடங்கின. கோடைக்காலம் முடிந்து மழைக் காலமும் வருவதற்கு ஆகிவிட்டது. அப்படியும் விளையாட்டுக் கூடத்தின் வேலை பூர்த்தியாகவில்லை. நான் என்பேரிலேயே எரிச்சல் பட்டுக் கொண்டேன். மற்றவர் மேலும் எரிந்து விழுந்தேன். ஆனால் வேலையின் வேகம் அதிகரிக்கவே இல்லை.

வெளிக் கிராமங்களைச் சேர்ந்தவர்கள் இந்த வேலை இப்போதைக்கு நடக்காது என்று வக்கணை பேசினர். இந்த வாத்தியார் வெட்டிக்காகிலும் ஆடு மேய்க்கும் அப்பாவி மக்களுக்குத் துன்பம் கொடுத்துப் பணத்தையும் பாழாக்கிவிட்டான் என்று குறை கூறினர். ''உண்மையில் இந்த விளையாட்டுக் கூடத்துக்கு என்ன தேவை இருந்தது? ஒரு கைக்குள் அடங்கக்கூடிய மக்களைக் கொண்ட ஒரு கிராமத்துக்கு விளையாட்டுக்கூடம் ஒரு கேடா? விளையாட நினைக்கும் குழந்தைகள் வயல்களில் விளையாடுவார்கள், மணலில் விளையாடுவார்கள், அவர்களிலிருந்து யாராவது விளையாட்டு வீரன் தலையெடுப்பான். கூடம் ஒன்று இல்லாத குறையால் அது நின்று போகுமா எங்காவது? இந்த வாத்தியார் பணத்தைச் சூறையாடும் நோக்கத்துடன் தான் விளையாட்டுக்கூடம் என்ற பேரைச் சொல்லி வேஷம் போடுகிறான். சம்பளப் பணம் பற்றவில்லை, அதனால்தான் இப்படி ஏதாவது சொல்லி ஏழை மேய்ப்பவர்களை ஏமாற்றித் தன்னு

டைய பையை நிரப்பிக்கொண்டிருக்கிறன் ..'' கடைசியில் நான் வெறுத்துப் போய் மேலிடத்துக்குக் கடிதம் எழுதி அனுப்பினேன். 'விளையாட்டுக்கூடம் அமைக்கும் வேலை பூர்த்தியாகிவிட்டது. சர்க்கார் கிருபை கூர்ந்து கிராமத்துக்கு விஜயம் செய்து விளையாட்டுக்கூடத்துக்குத் திறப்பு விழாச் செய்யவேண்டும்' — இந்தக் கடிதத்தைத் தபாலில் சேர்த்துவிட்டு நான் கிராமத்து மக்களிடம் அதை வெளியிட்டேன்: ''சம்ஸ்தானத் தலைவர் இந்த மாதம் கிராமத்துக்கு விஜயம் செய்யப்போகிறுர். விளையாட்டுக் கூடத்தை முடிப்பதானல் முடியுங்கள், இல்லாவிட்டால் அவரிடமே சென்று, 'தப்பு நேர்ந்துவிட்டது, இந்த வேலை முடிவடையவில்லை என்று சொல்லி விடுங்கள்'' என்று சொன்னேன்.

கோள்மூட்டித் தாதூ இன்னும் படுத்த படுக்கையாகத்தான் இருந்தான். அவனுடைய மனைவியும் வயோதிகத் தாயாரும் மந்திரவாதியை அழைத்து மந்திரிக்கச் சொல்லுவதும் தாயத்தும் ரட்சையும் கட்டச் சொல்லுவதுமாக எவ்வளவோ பாடுபட்டும் ஒரு பலனும் ஏற்படவில்லை. தாதூ அப்படியே படுத்துக் கிடந்தான். இரண்டு வேளையும் நல்ல சாப்பாடு வேண்டுமென்று கூச்சல் போட்டு ரகளை செய்து கொண்டிருந்தான். ''நன்ருகச் சாப்பிடுவேன், பாலும் தயிருமாகச் சாப்பிடுவேன், சர்க்கரை ரொட்டி சாப்பிடுவேன், ஆட்டு இறைச்சியும் கோழிக்கறியும் சாப்பிடுவேன், பிறகு மறுபடியும் வாலிப முறுக்குடன் எழுந்துவிடுவேன்'' என்று கத்திக் கொண்டிருந்தான், அவன் கேட்டபடியெல்லாம் வீட்டிலுள்ளவர் அவனுக்கு உணவு ஊட்டிக்கொண்டிருந்தனர். ஆனல் எந்தச் சாப்பாடும் நன்ருக ஜீரணமாகி உடம்பில் ஒட்டும் வழியாக இல்லை. இளமை முறுக்கை மீண்டும் பெற்று எழுந்திருக்க முடியாமலே இருந்தான் அவன்.

பாலாக் கோனன் இன்னும் கிராமக் கட்டுப்பாட்டுக்குத் தலை வணங்கத் தயாராக இல்லை. கிராமத்தார் பலவிதங்களில் அவனுக்கு இடைஞ்சல் விளைவித்தும் பாலாவின் பிடிவாதம் மாருமலே இருந்தது.

ஷேகூவும் அவனைவிட அரைமுழம் உயரமான அவனுடைய மனைவியும் வழக்கம்போல் வயலோடு போராடிக்கொண்டிருந்தனர். நாட்டாண்மை வீட்டு அஞ்ஜி துருதுருத்த விழிகளுடன் கிராமத்தில் சுற்றித் திரிந்து கொண்டிருந்தாள். ஆனந்தா சிறு சிறு திருட்டுக்களைச் செய்தவாறு பிழைப்பு நடத்திக் கொண்டிருந்தான். ராமாக்

கோனுன் எப்போதும் போல ஓய்வை அனுபவித்துக் கொண்டிருந் தான். வாடையைக் கொண்டே ஓநாயின் வருகையை உணரக் கூடிய கிழட்டுத் தகப்பன் தான் இன்னமும் ஆடுகளை மேய்த்துவரப் போய்க் கொண்டிருந்தான்.

கிராமத்திலுள்ள வாலிபப் பிள்ளைகள் அதிகாலையில் எழுந்து ஆடு மேய்க்கப் போய்க் கொண்டிருந்தார்கள். நாள் முழுவதும் வயல்களிலும் மேட்டுப் பரம்புகளிலும் சுற்றியலைந்துவிட்டு மாலை யில் வீட்டுக்குத் திரும்புவதும், தாய் ஆடுகளையும் குட்டிகளையும் சேர்த்து விடுவதும், இரவில் எச்சரிக்கையுடன் உறங்குவதுமாக இருந்தனர். மேய்ப்பவர் வீட்டுப் பெண்கள் ரொட்டி சுடுவதும், நூல் நூற்பதும் குழந்தைகளுக்குப் பாலூட்டுவதுமாக இருந்தனர்.

இவ்விதம் எல்லா வேலைகளும் ஒரே போக்கில் நடந்து கொண் டிருந்தபோது ஒரு நாள், மேலிடத்துக்கு நான் எழுதியிருந்த கடிதத்துக்குப் பதில் வந்தது. ஏப்ரல் இருபதாம் தேதி மாண்புமிகு சம்ஸ்தானத் தலைவர் பன்கர்வாடிக்கு விஜயம் செய்வாரென்று அதில் குறிப்பிடப் பட்டிருந்தது. உடனேயே சக்கரங்கள் வேகமா கச் சுழல ஆரம்பித்தன. இரண்டு நாளுக் கொருதரம் தாலூக்காத் தலைநகரிலிருந்து யாராவது அதிகாரி வருவதும் கிராமத்தைப் பார்வையிட்டுவிட்டுப் போவதுமாக இருந்தனர். தலைநகரிலிருந்து கிராமத்துக்கு வரும் பாதை செப்பனிடப்பட்டது. நெடுஞ்சாலையிலி ருந்து கிராமப் பாதை கிளை பிரியும் இடத்தில் வெள்ளையடித்த கல்லை நட்டு வைத்து, கிராமத்துக்குச் செல்லும் வழி சுட்டிக் காட்டப் பட்டிருந்தது. முனிஸிபாலிடி ஆட்கள் ஒருநாள் வந்து கிராமத்தில் சுற்றிக்கொண்டிருந்த கேட்பாரற்ற நாய்களையெல்லாம் பிடித்துக் கொன்றுர்கள். குப்பைகளையெல்லாம் அப்புறப்படுத்தும்படி உத்த ரவு போட்டார்கள். ஒவ்வொரு வீட்டாரும் அந்தக் கட்டளையை நிறைவேற்றினுர்கள். பள்ளிக்கூடக் கட்டிடத்தைச் செப்பம் செய்து அதற்குச் சுண்ணும்பு குழைத்துப் பூசினுர்கள். குப்பை கூளமும் அசுத்தங்களும் நிறைந்திருந்த இடங்களையெல்லாம் பெருக்கிச் சுத்தம் செய்தார்கள். ''மன்னர் கிராமத்துக்குள் பிரவேசிக்கும் போது முதலில் எதிர்ப்படும் ராமோஷிகளின் குடியிருப்புக்கு விஜயம் செய்தாலும் செய்யலாம். ஏதாவது வீட்டுக்குள் சென்று நலம் விசாரித்தாலும் விசாரிக்கலாம், யார் கண்டது?'' என்று அதிகாரிகள் கூறியதும் ராமோஷிப்பேட்டையைச் சுத்தம் செய்யும் வேலை பர பரப்புடன் ஆரம்பமாயிற்று. ஒவ்வொரு வீடும் நன்ருக மெழுகிப்

பூசப்பட்டுப் பளபளப்பாக்கப்பட்டது. ராமோஷிகளின் வீடுகள் பள பளப்பானதைப் பார்த்ததும் மேய்ப்பவர் இனத்துப் பெண்களுக்கு உற்சாகம் தாளுகவே ஏற்பட்டு விட்டது. அவர்களும் தங்கள் வீடுகளைப் பூசி மெழுகி ஒழுங்கு படுத்தினர். நெடு நாட்களாக வெளிப்புறம் பூசி மெழுகப்படாதிருந்த வீடுகள் இப்போது பூசி மெழு கப்பட்டன. சில வீடுகள் இடிந்து விழுந்து, அந்தக் கற்கள் வழி யெல்லாம் சிதறிக் கிடந்தன. அவற்றை ஒன்று சேர்த்து ஓரிடத் தில் ஒழுங்காகக் குவித்துப் போட்டனர். ஓரளவு மிரட்டலினுலும், ஓரளவு அவரவர் விருப்பத்தினுலும் என்றுமே நடக்காதென்றிருந்த இந்த வேலைகளெல்லாம் விரைவாக நடந்தன. நன்ருகக் குளித்துத் தலைசீவி, நல்ல உடைகள் போட்டுக் கொண்ட மேய்ப்பவர் பிள்ளை யைப்போல் பளிச்சென்று துலங்க ஆரம்பித்தது பன்கர்வாடி.

இவற்ருேடு கூடவே விளையாட்டுக் கூடத்தின் வேலையும் ஏறக் குறைய முடிந்து விட்டது. சுவர்கள் எழுப்பப்பட்டு விட்டன. சாரங் கள் அகற்றப்பட்டு விட்டன. கொத்துவேலை அநேகமாகப் பூர்த்தி யாகிவிட்டது. தச்சுவேலைதான் பாக்கி நின்றது. தச்சர்கள் இன் னும் பலகைகளை இழைத்துக் கொண்டும் சக்கைகளைச் செதுக்கிக் கொண்டும், நிலைகளைப் பொருத்திக் கொண்டும், இருந்தனர்.

சம்ஸ்தானத் தலைவரே நம்முடைய கிராமத்துக்கு வரப்போகி ருர் என்ற உணர்வு பன்கர்வாடியில் பரபரப்பான மாறுதலை உண் டாக்கிவிட்டது. மன்னருடைய வருகையைப் பற்றி ஆர்வம் காட் டாதவர் யாருமே கிராமத்தில் இருக்கவில்லை. அந்தக் கிராமத்தில் வாழ்ந்த மேய்ப்பவர்களில் ஒருவர்கூட மன்னரை நேரில் பார்த்த தில்லை. அப்படிப்பட்டவர் இப்போது தாமாகவே கிராமத்துக்கு விஜயம் செய்யப்போகிருர்! இது அருமையான நிகழ்ச்சியாயிற்றே! அதை முன்னிட்டுக் கிராமத்தில் புதியதோர் விழிப்பு ஏற்பட்டிருந் தது. அக்கம் பக்கத்துக் கிராமங்களுக்குப் பொருமை தோன்ற ஆரம் பித்தது. கிராமத்துப் பக்கமே தலைகாட்டி அறியாத அதிகாரிகள், மணியகாரர், தாசில்தார், போலீஸ் உத்தியோகஸ்தர்கள் உள்பட எல்லோரும் கட்டாயமாக இந்தக் குக்கிராமத்தைத் தேடி வந்து போய்க் கொண்டிருந்தார்கள். ஆனுல் நாள் செல்லச் செல்ல, அதிகாரிகள் வந்துபோவது அதிகமாகிவிடவே, அதற்கேற்ருற் போல் எங்களுடைய பரபரப்பும் அதிகமாயிற்று. கூட்டத்திற்கு மேஜையைக் கொண்டு வா, நாற்காலிகளை ஒழுங்குபடுத்து, மாலை-பூச்செண்டுகளுக்கு 'ஏற்பாடு செய், பள்ளிக் குழந்தைகளுக்குப்

ப—8

பளிச்சென்று உடைகள் தைத்துக் கொடு, கிராம மக்களை நன்ருக முகத்தை மழித்துக்கொண்டு வரச்சொல் — இப்படி மன்னர் வரவை முன்னிட்டுப் பல தொல்லைகளும் உடன் வந்தன. நாங்கள் ஓடியாடி ஒவ்வொன்றையும் சமாளித்துக் கொண்டிருந்தோம்.

இந்த ஓட்டசாட்டம் கடைசிக் கணம் வரையில் நீடித்தது.

மறுநாள் காலை எட்டரை மணிக்குத் திறப்பு விழா நடக்க இருந்தது. இன்னும் விளையாட்டுக்கூடத்தின் கூரை முழுவதும் வேயப் படவில்லை. பிற்பகல் மூன்று மணியாகிவிட்டது. அப்போதுகூடக் கட்டிடத்தின் மேற்பகுதி திறந்தவாறே இருந்தது. நேரமோ குறித் தாயிற்று. நான் வெலவெலத்துப் போனேன். 'குறித்த நேரத்தில் மேற்கூரை திறந்தபடியிருந்த கட்டிடத்தை மகாராஜா பார்த்தால் என்ன சொல்லுவார்? என்னுடைய கௌரவமெல்லாம் காற்றில் பறந்துபோகும். கிராமமே நகைப்புக்கு உள்ளாகிவிடும்.' இவ்வாறு எண்ணிய நான் குழம்பிய மனத்துடன் நாட்டாண்மைக்காரரிடம் சென்று, ''நாட்டாண்மை ஐயா, கிராமத்தின் மதிப்பு மண்ணோடு மண்ணுகப் போகிறது. கூடத்துக்கு இன்னும் கூரை வேயப்பட வில்லை. நாளைக் காலையே மன்னர் வரப்போகிருர்!'' என்று பதறி னேன்.

நாட்டாண்மையும் பதற்றத்துடன் எழுந்தார். ''அடடே! என்ன சொல்கிருய் தம்பி? கூப்பிடு, எல்லோரையும்! கிராமத்தை ஒன்று திரட்டு! களிமண் குழைக்கச்சொல். கூரை வேயப் பிரமாத நேரம் ஆகிவிடாது!''

ஒரே பரபரப்பு, ஓட்டசாட்டம், அல்லோல கல்லோலம்! மற்ற வேலையெல்லாம் விட்டுவிட்டுக் கிராமம் முழுவதும் ஒருங்கே திரண்டது. மண் குழைக்கப்பட்ட இடத்திலிருந்து கூரை விட்டம் வரை நூறு நூற்றிருபது பேர் நின்றுகொண்டனர். கூரை வேயும் பணி துவங்கியது. திறந்த மேனியுடன் நின்ற மேய்ப்பவர் அணி மண் உருண்டைகளை வேக வேகமாக ஒருவர் கையிலிருந்து மற்றவர் கைக்கு எறிந்தவாறிருந்தது. கூரைவிட்டங்களில் நின்றவர் அந்த மண்ணை வாங்கிக் கூரை வேய்ந்துகொண்டிருந்தனர். பக்கத்துக் கிராமத்திலிருந்து தருவிக்கப்பட்ட தோல் தொழில் இனத்தவர் தம்பட்டங்களை அடிக்க ஆரம்பித்தனர். அந்தத் தாளத்துக்கு ஏற்ற வாறு, 'ஐயா பிடி - இந்தா பிடி, ஓகோ... ஆஹா' என்று கோஷமிட்டபடி ஜனங்கள் வேலை செய்யத் தொடங்கினர். தம்பட்டமடிப் பவர் தாளத்தின் வேகத்தை அதிகமாக்கிக் கொண்டு சென்றனர். அதற்கேற்ப இருநூறு கரங்கள் துரிதமாக இயங்கின.

மாலை ஆயிற்று. இருள் கவிந்தது. முன்பே ஏற்பாடு செய்யப் பட்டிருந்ததால் கியாஸ் விளக்குகள் எரிய ஆரம்பித்தன. அவற்றின் ஒளியில் வேலை தொடர்ந்து நடந்தது. வேலையில் சிறிதளவு தேக்கம் ஏற்பட்டாலும் நாட்டாண்மை சத்தம் போடுவார், ஆயபூ அதட்டு வான். உடனே வேலை மறுபடியும் விறுவிறுப்புடன் நடக்கும். இவ் வாறு கூச்சலும் இரைச்சலும் இரவெல்லாம் நீடித்தன. கிராமம் முழு வதும் கண் விழித்திருந்தது. அங்கங்கே தோரணங்கள் கட்டப்பட்டுக் கொண்டிருந்தன. கிராமத்தின் முகப்பு வாயிலில் மன்னர் வந்ததுமே அவரை இருபத்தோர் எருதுகள் பூட்டப்பட்ட ரதத்தில் உட் கார்த்தி அழைத்து வர ஏற்பாடாகி இருந்தது. அதற்காக எருதுகள் தயாராகக் கொண்டுவந்து நிறுத்தப்பட்டன. ரதத்தை அலங்கரிக்கும் வேலை நடந்து கொண்டிருந்தது. பந்தோபஸ்து ஏற்பாடுகளுக்காகப் போலீஸ் அதிகாரிகள் முன்பே வந்து சேர்ந்திருந்தார்கள். அவர்கள் வெட்டியாக அதட்டி அதிகாரம் செய்தவாறு இருந்தனர். ''மன்னர் நாளைக்கு விஜயம் செய்யப் போகிறார். உங்களுடைய ஏற்பாடுகள் இன்னும் பூர்த்தியாகவில்லையா?'' என்று தங்கள் கவலையைத் தெரி வித்துக் கொண்டிருந்தனர். இந்தக் களேபரத்தில் கூரை வேயும் வேலையும் விளக்குகளின் வெளிச்சத்தில் நடந்து கொண்டிருந்தது.

நடுநிசிக்குப் பிறகுதான் வேலை ஒரு கட்டுக்குள் அடங்க ஆரம் பித்தது. அப்போது மேலே விளிம்பில் நின்று சேற்று உருண்டை களைப் பிடித்துப் போட்டுக் கொண்டிருந்த ஆயபூ திடீரென்று விழுந்து விட்டான். கீழே இருந்த கற்குவியலில் போய் விழுந்தான். விழும்போதே, ''ஐயோ! நான் செத்தேன்! செத்தேன்!'' என்று பயங்கரமாகக் கூச்சலிட்டுக்கொண்டே விழுந்தான். நான் பள்ளிக் கூடத்தில் உட்கார்ந்து மறுநாள் நடக்கவிருந்த விழாவின் நிகழ்ச்சி நிரலைத் தயாரித்துக்கொண்டிருந்தேன். நாட்டாண்மை ஊர்வலத்துக் கான ரதத்தைத் தயாரிப்பதில் முனைந்திருந்தார். ராமாக் கோனன் தோரணம் கட்டிக் கொண்டிருந்தான். ஆயபூ விழுந்தபோது அந்த இடத்தில் எங்களிலிருந்து யாருமே இருக்கவில்லை. அவன் விழுந்த மறுகணமே சுய நினைவை இழந்து விட்டான். கூரை வேயும் வேலை நின்று போயிற்று. எல்லோரும் தங்கள் தங்கள் இடத்தை விட்டு ஆயபூவைச் சுற்றிலும் கூடிவிட்டனர். ''கசாப்புக்காரன் செத்து விட் டான் ! கசாப்புக்காரன் செத்து விட்டான் !'' என்று கூச்சல் கிளம்பி யது. ஏற்கனவே ஏகப்பட்ட இரைச்சல் இருந்ததனாலும், நாங்கள்

யாருமே பக்கத்தில் இல்லாததனுலும் இந்தக் கூச்சலைப்பற்றி எங்களுக்கு எதுவுமே தெரியாது. ஆனந்தா ஓடிப்போய் நாட்டாண்மையிடம், ''கசாப்பு ஆயபூ கீழே விழுந்து விட்டான்!'' என்று கூறினுன்.

நாட்டாண்மை, கட்டிடவேலை நின்று போயிருப்பதைப் பார்த்து விட்டு, ''அடே, நீங்கள் ஏன் நின்று விட்டீர்கள்? கசாப்புக்காரன் விழுந்தால் விழட்டும். நீங்கள் உங்கள் வேலையைப் பாருங்கள்!'' என்று கூறினுர்.

கூறியதோடு நிறுத்தாமல் எல்லோரையும் மாட்டை விரட்டுவது போல் விரட்டி மறுபடியும் கூரைவேயும் வேலையில் பூட்டினுர். ஆயபூவைத் தூக்கிக் கொண்டு என்னுடைய அறைக்கு எடுத்துச்சென்று அங்கே அவனைப் படுக்க வைத்தனர். வேலை மறுபடியும் தொடர்ந்து நடந்தது. முதல் கோழி கூவியாயிற்று. பொழுது விடிந்துவிடும். சீக்கிரமே வெளிச்சமாகி விடும். மன்னரின் மோட்டாரும் வந்துவிடும். யாருக்கும் சாவதற்குக்கூட நேரம் இல்லாத போது அழுவதற்கு எங்கே நேரம் இருந்தது? வெங்காயத்தைக் கசக்கி ஆயபூவின் மூக்கில் பிடித்தார்கள், முகத்தில் தண்ணீர் தெளித்தார்கள். ஆனுல் ஆயபூ கண்ணைத் திறக்கவில்லை. நாட்டாண்மை கதவை இடித்துத் தள்ளிக் கொண்டு வெளியே வந்து தம் வேலையில் ஈடுபட்டுவிட்டார். கலியாணக் காரியம்தானே இதுவும்! செத்த பிணத்தைக் கூட மூடி வைத்துவிட்டு நிறைவேற்றியாக வேண்டிய காரியம்.

கூரை வேயும் வேலை பூர்த்தியாவதும் பொழுது பலபலவென்று விடிவதும் சரியாக இருந்தன. குளிப்பதற்காக, சேற்றில் ஊறிய உடம்புகளைச் சுத்தம் செய்து கொள்வதற்காக எல்லோரும் கிணறுகளையும் ஓடையையும் நாடிச் சென்றனர்.

நாலைந்து ராமோஷி இனத்தவரை மன்னர் வரும் பாதையில் முன்னே அனுப்பினேன். கொம்பு வாத்தியக்காரனை மரத்தில் உயரமான இடத்தில் உட்கார்த்தி வைத்தேன். ஒரு மைல், இரண்டு மைல் தூரத்தில் மன்னரின் மோட்டார் வருவது தெரிந்ததுமே கொம்பு ஊதி அறிவிக்கும்படி பணித்திருந்தேன்.

சரியாக எட்டு எட்டேகால் மணித் தறுவாய்க்குக் கொம்பு வாத்தியம் ஒலித்தது. ''வந்துவிட்டார்! ராஜா வந்து விட்டார்!'' என்று கூச்சல் போட்டவாறு மக்களிடையே பரபரப்புப் பரவியது. மேய்ப்பவர் இனத்துப் பெண்கள் இடுப்பில் குழந்தைகளை ஏந்தியவாறு முகப்பு வாயிலை நோக்கி ஓட ஆரம்பித்தனர். பந்தோபஸ்துக்காக நின்றிருந்த போலீஸ்காரர்கள் அவர்களை அதட்டிப் பின்னுக்குத்

தள்ளித் திருப்பி அனுப்பினர். ரதத்தில் எருதுகளைப் பூட்டி நாங்கள் தயாராக நின்றோம். கிராமத்துக்கு மன்னர் வந்ததுமே கிராமத் தலைவன் கையில் ஒரு தேங்காயும் ஒரு ரூபாயும் வைத்துக் கொண்டு மன்னரை எதிர்கொண்டு அழைப்பதுதான் வழக்கம். எங்களுடைய கிராமத்தில் முறையான கிராமத் தலைவரும் கிடையாது; கர்ணமும் கிடையாது. ராஜா வரப்போகிறார் என்பதற்காகப் பக்கத்துக் கிராமத் தலைவன் எங்கள் கிராமத்துக்கு வந்திருந்தான். அவன் இப்போது குறுக்கிட்டு மன்னரை எதிர்கொண்டழைக்கும் உரிமை தனக்குத் தான் உண்டு என்று வாதாட ஆரம்பித்தான். அவனை அதட்டி வாயடைக்கச் செய்துவிட்டு, செக்கச்செவேலென்ற தலைப்பாகையும் கஞ்சி வாடை வீசும் கோடிச்சட்டையும் அணிந்திருந்த நாட்டாண்மைக்காரர்தாம், தேங்காய்க் காணிக்கையுடன் மன்னரை எதிர் கொண்டழைக்க முன்செல்ல வேண்டுமென்று நான் ஏற்பாடு செய்தேன். கையில் ஆரத்தித் தட்டுக்களை ஏந்திய சில சுமங்கலிப் பெண்களைக் கிராமத்து எல்லையில் நிறுத்தி வைத்தேன். ஜனங்கள் எம்பிஎம்பி தூரத்து மேட்டில் கார் தென்படுகிறதா என்று பார்க்க ஆரம்பித்தனர். சத்தம் தெளிவாகக் கேட்டது. பாதையில் நான் ஏற்பாடு செய்திருந்த ராமோஷிகளின் குழந்தைகள் ஓட்டம் ஓட்டமாக வந்து மூச்சு இரைத்தவாறு, ''மோட்டார் வந்துவிட்டது. மாவலி அம்மனின் மேட்டருகே வந்துவிட்டது!'' என்று கூறினார்கள்.

எல்லோரும் தங்கள் தங்கள் தலைபாகைகளையும் தொப்பிகளையும் சரியாக வைத்துக் கொண்டனர். அதிகாரிகள் கோட்டுப் பொத்தான்களைச் சரியாகப் போட்டுக் கொண்டு சட்டையைக் கீழே இழுத்து விட்டுக் கொண்டனர். மன்னரின் பளபளப்பான சிவப்பு நிறமுள்ள பெரிய கார் முகப்பு வாயிலில் வந்து நின்றது. நான் விரைந்து முன்னே சென்றேன். கல்வித்துறை அதிகாரிகளும் உடனிருந்தனர். தலையைத் தாழ்த்தி நான் மன்னருக்கு வணக்கம் தெரிவித்ததும், உடனிருந்தவர்கள், ''இவர்தாம் இந்தக் கிராமத்துப் பள்ளி ஆசிரியர்'' என்று கூறினர்.

மோதிரங்கள் பளிச்சிடும் கரங்களைக் கூப்பியவாறு மன்னர், ''வெல்க இறைவன்!'' என்று கூறினார்.

எல்லோரும் அவசரம் அவசரமாக வணங்கினர். மேய்ப்பவர்கள் தரையைத் தொட்டுத் தங்கள் மன்னருக்கு நமஸ்காரம் செய்தனர்.

பிறகு தாசில்தார் முன் சென்று மரியாதையுடன் கூறினார்: ''இங்கிருந்து மகாராஜா ரதத்தில் உட்கார்ந்து கிராமத்துக்கு வர வேண்டுமென்று விண்ணப்பம்.''

''அப்படியே செல்வோம்!'' என்றார் மன்னர்.

சேவகன் கார்க் கதவைத் திறந்து விட்டான். மன்னர் வெளியே வந்தார். மேய்ப்பவர்கள் தங்கள் மன்னரைப் பார்த்தார்கள். சிவந்த மேனி; அழகிய வடிவம்; அவர் தலையில் சிவப்புத் தலைப்பாகை அணிந்திருந்தார். உடம்பில் வெள்ளை வெளேரென்று துலங்கிய கதர்க் கோட்டு தரித்திருந்தார். இடையில் வெளுப்பான சூடிதார் பைஜாமா; காலுக்குச் சிவப்பு ஜோடுகள். பளபளவென்று மின்னிய ஜரிகைத் துபட்டா அவருடைய அகன்ற மார்பில் இலங்கியது. பெரிய பெரிய கண்கள்; கூரிய மூக்கு; நரையோடியிருந்த அடர்ந்த மீசை. மன்னர் கைத்தடியை ஊன்றியவாறு ரதத்தை நோக்கி நடந்தார். ''மகாராஜா களைத்துப் போயிருக்கிறார். கைத்தடியை ஊன்றிக் கொண்டுதான் நடக்க வேண்டியிருக்கிறது அவருக்கு...'' என்று பேசிக் கொண்டார்கள் கிராமத்துப் பெண்கள்.

நான் நாட்டாண்மைக் கிழவருக்குச் சைகை செய்தேன். துணிச்சலுடன் அவர் முன்னே சென்று தேங்காய்த் தட்டை மன்னரெதிரே நீட்டினார். மன்னர் அதை விரலால் தொட்டுவிட்டு, நாட்டாண்மையின் தோளில் கையை வைத்து, ''கிராமத் தலைவரே, சௌக்கியம்தானே? '' என்று வினவினார்.

நாட்டாண்மை மரியாதையுடன் சிரித்துக் கொண்டே தலையை அசைத்தவாறு, ''ஆமாம் மகாராஜா, ஆமாம் மகாராஜா!'' என்று கூறினார்.

பிறகு ரதத்தில் ஏறும்போதுகூட மன்னர் நாட்டாண்மைக் கிழவரின் தோளைப் பிடித்துக் கொண்டுதான் ஏறினார். ரதத்தில் அவர் உட்கார்ந்ததுமே, எருதுகளை இழுத்துப் பிடித்துக் கொண்டிருந்தவர்கள் எருதுகளுக்குச் சைகை செய்தனர். ரதம் புறப்பட்டது. கொம்பு, ஷனாய், முரசு முதலிய வாத்தியங்கள் முழங்கின. கூடியிருந்தவர்கள் ''மன்னர் வாழ்க'' என்று ஜயகோஷம் செய்தனர். பள்ளிச் சிறுவர்கள், ''மகாராஜா நீடூழி வாழ்க!'' என்று வாழ்த்துக் கூறினர். சுமங்கலிப் பெண்கள் முன்னே சென்று மன்னருக்கு ஆரத்தி எடுத்தனர். மன்னர் கிராமத்துக்குள் பிரவேசித்தார். ஆடுமேய்ப்பவரின் முப்பது முப்பத்தைந்து குடிகளைக் கொண்ட இந்தக் குக்கிராமத்துக்கு மன்னர் விஜயம் செய்து விட்டார்!

விளையாட்டுக் கூடத்தின் மூடிய கதவை மன்னர் திறந்து வைத்தார். மீண்டும் கொம்பு வாத்தியம் ஒலித்தது. மற்ற மங்கல வாத்தியக்காரர்கள் சேர்ந்தாற்போல் தமது வாத்தியங்களை

முழக்கினர். அந்தப் பெரிய விளையாட்டுக் கூடத்தையும், குஸ்தி மேடையையும் செம்மண்ணையும் பார்த்து மன்னர் மகிழ்ச்சியடைந்தார். ''எங்கே அந்த உபாத்தியாயர்?'' என்று கேட்டார் அவர்.

நான் கரம் கூப்பியவாறு அவரெதிரே போய் நின்றேன்.

''மிகவும் நன்ருயிருக்கிறது! மிகுந்த நல்ல காரியம் செய்திருக்கிருய் மகனே, உன் பெயரென்ன?''

''ராஜாராம் விட்டல் ஸௌந்தணீகர்.''

தாசீல்தார் விளக்கினுர் : ''சமூகத்தில் வந்து போய்க் கொண்டிருக்கும் காரியஸ்தர் விட்டலுடைய குமாரர்...''

''அப்படியா? பேஷ்! பிரமாதமாக இருக்கிறது! அறிவு வளர்ச்சியோடு உடல் வலிவுக்கும் முக்கியத்துவம் கொடுக்கத்தான் வேண்டும்!''

ஆனந்த மிகுதியால் நான் தழுதழுத்துப் போனேன். என் மேனி சிலிர்த்தது. தொண்டை அடைத்துக் கொண்டது. கண்களில் ஆனந்தக் கண்ணீர் பொங்கி நின்றது.

விளையாட்டுக் கூடத்தில் மன்னர் தமது கரத்தாலேயே தேங்காய் உடைத்து ஆஞ்சநேயருக்கு நிவேதனம் செய்த பிறகு கூட்டம் துவங்கியது. நான் என்னுடைய பேச்சை எழுதி வைத்திருந்தேன். அதைத் தெளிவாகப் படித்து முடித்தேன். படிக்கும் போது என் நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டிருந்தது.

''பிள்ளைகள் விளையாடுவதற்காக இந்த விளையாட்டு அரங்கத்தில் கூட வேண்டும், விளையாட்டோடு கூடவே அவர்களுக்குப் பள்ளிப் படிப்பிலும் பற்றுதல் உண்டாக வேண்டும், இந்த நோக்கத்துடன் தான் இந்த விளையாட்டு அரங்கத்தை அமைப்பதற்கு நாங்கள் இவ்வளவு முயற்சியை மேற்கொண்டோம். இந்த அரங்கத்தை அமைப்பதில் கிராம மக்கள் காட்டிய ஒற்றுமையும், மெச்சத் தகுந்த ஊக்கமும், அவர்கள் தந்த உழைப்பும் பாராட்டுதற்குரியவை. மகாராஜா இந்த விளையாட்டு அரங்கத்தைத் துவக்கி வைத்து ஆசீர்வதிக்க வேண்டும்!'' இவ்வாறு நான் என் உரையில் கூறி முடித்தேன்.

பிறகு மன்னர் ஒரு சிறிய பிரசங்கம் செய்தார். அவர் கூறியதாவது : ''என்னுடைய இந்த ஆடு மேய்த்து ஜீவனம் செய்யும் குடிமக்கள் இவ்வளவு சிறியதான இந்தக் கிராமத்தில் இவ்வளவு அழகான விளையாட்டு அரங்கத்தை அமைத்திருப்பதைக் கண்டு என் மனம் மகிழ்ச்சியினுலும் பெருமையினுலும் பூரிக்கிறது. பாலரைப்

பேணுதல், அறிவு வளர்ச்சி இரண்டுமே நம்முடைய அரசின் நோக்கங்கள். ராஜ்யத்தின் ஒவ்வொரு மாணவனுடைய மார்பும் அகன்றதாக இருக்க வேண்டும் கைகால்கள் கட்டுமஸ்தாக இருக்க வேண்டும். அதோடு அறிவும் கூர்மையாக இருக்க வேண்டும்— இதுதான் என் தீவிரமான வேண்டுகோள். இந்த வேண்டு கோளைத்தான் நான் சமயம் கிடைத்த போதெல்லாம் வெளியிட்டுக் கொண்டிருக்கிறேன். இந்தக் குக்கிராமத்தில் வசிக்கும் மேய்ப்பவர் சமூகம் வரை என்னுடைய வேண்டுகோள் எட்டியிருக்குமென்று நான் கற்பனைகூடச் செய்ததில்லை. எட்டியதுமட்டுமல்ல; ஸ்தூல மான வடிவில் செயலாக்கப் பட்டிருக்கிறது என்பதைப் பார்த்து நான் பிரமித்துப் போனேன். உங்களுடைய இந்த மன்னனின் மார்பு பெருமையைால் மேலும் இரண்டு அங்குலம் பூரித்து விட்டது. ஜகதம்பிகை உங்களுக்கு நல்ல புத்தியைக் கொடுப் பாளாக. உங்களுக்கு மங்களத்தைச் செய்வாளாக!''

இதன் பின்பு நான் நன்றியுரை நிகழ்த்தும் போது எல்லோருக் கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டேன். பள்ளிப் பிள்ளைகள் 'வந்தேமாதர' கீதத்தைப் பாடியதும் விழா முடிவுற்றது. மகாராஜாவின் கார் புழுதியைக் கிளப்பிக்கொண்டு சென்றுவிட்டது. மற்ற அதிகாரிகள் சைக்கிள்களிலும், மாட்டு வண்டிகளிலும் புறப்பட்டுச் சென்று விட்டனர். மன்னர் எப்படி இருந்தார், எப்படிப் பேசினார், இதே பேச்சுத்தான் ஒவ்வொரு வீட்டிலும். மன்னர் சென்றுவிட்டார். விழா முடிந்து விட்டது. எனினும் மேய்ப்பவர் சமூகத்தினரின் மகிழ்ச்சிக்கு முடிவே இல்லை. அவர்கள் அங்கங்கே கூடி நின்று உரத்த குரலில் பேசிக் கொண்டிருந்தனர். இந்த மகிழ்ச்சி நீண்ட நாட்கள் வரை அவர்களுடன் கூடவே இருக்கப் போவதாயிற்றே!

இரண்டே இரண்டு பேர் மட்டும் இந்த விழாவில் முற்றிலுமே பங்கெடுத்துக் கொள்ளாதிருந்து விட்டார்கள்—பாலாக் கோனாலும் கோள்மூட்டித் தாதூவும். ராஜா வரப்போவதைப் பற்றிப் பாலா வுக்குத் தெரியும், ''நீயும் ராஜாவைப் பார்க்க வாயேன்'' என்று யாரோ அவனிடம் சொன்னபோது, ''நான் என் வேலையை விட்டு விட்டு வரமுடியாது. ராஜா வந்தால் வரட்டுமே! அவர் தயவில் தானா எங்கள் வீட்டில் அடுப்புப் புகைகிறது?'' என்று கூறினான்.

கோள்மூட்டித் தாதூ ஓயாமல் துடிதுடித்துக் கொண்டிருந்தான். ஆனால் அவனால் படுக்கையை விட்டு எழுந்திருக்கவே முடிய வில்லையே! நாட்டாண்மையைத் தன் வீட்டுக்கு வரவழைத்து

அவரிடம் மன்ருடிக் கேட்டுக்கொண்டான்: ''ராஜாவைப் பார்க்க வேண்டுமென்று எனக்கு ஆசையாக இருக்கிறது. யாருடைய முதுகிலாவது என்ஜன உட்கார வைத்து அந்த இடம் வரை கொண்டு போக ஏற்பாடு செய்யுங்களேன்...''

ஆனல் நாட்டாண்மைக்கு அச்சமாயிருந்தது. இந்தத் தரங் கெட்டபயல் தாறுமாருக ஏதாவது உளறிவிடுவான்; தான் அடிபட்டதைப்பற்றி மன்னரிடம் பிரலாபிக்க ஆரம்பிப்பான் என்று பயந்து அவஜன வர விட வில்லை. கோள்மூட்டி கூச்சல் போட்டுக் கத்தி எல்லோரையும் வாய்க்கு வந்தபடி திட்டிக் கொண்டிருந்தான். ஆனல் யாருமே சட்டை செய்யவில்லை.

விழா முடிந்த பிறகுதான் யாரோ என்னிடம் ஆயபூ கீழே விழுந்து விட்ட செய்தியைக் கூறினர்கள். ஆயபூவுக்குப் பலத்த காயம் ஏற்பட்டிருக்கிறதென்றும் நினைவிழந்த நிலையில் என்னுடைய அறையில் படுக்க வைக்கப்பட்டிருக்கிருனென்றும் அறிந்தபோது என்னுடைய மகிழ்ச்சியெல்லாம் அந்தக் கணமே சிதறிப்போயிற்று. பயமும் பதற்றமும் மேலிட நான் வீட்டுக்கு விரைந்தேன். கதவுச் சங்கிலியை நீக்கிக் கொண்டு உள்ளே சென்றேன். ஆயபூ கம்பளியில் குப்புறப் படுத்திருந்தான். என் நெஞ்சம் பதைத்தது. மன்னர் கிராமத்துக்கு விஜயம் செய்ததற்காக ஆயபூ தன்ஜனயே காவு கொடுத்து விட்டானு?

''ஆயபூ! ஆயபூ! உயிரோடிருக்கிருயா?'' என்று உரக்கக் கத்தினேன்.

குப்புறக் கவிழ்ந்த நிலையிலிருந்த அவஜன நிமிர்த்திப் புரட்டினேன். மூடிய கண்களைத் திறந்து அவன் என்ஜன உணர்ச்சியற்ற பார்வையால் நோக்கினுன். மெதுவாக இழைந்து கொண்டிருந்த அவனுடைய உஷ்ணமான மூச்சுக் காற்று என் கன்னங்களில் பட்டது. கணநேரத்துக்குத் திறந்திருந்த கண்களை அவன் மறுபடியும் மூடிக்கொண்டான். வேதஜன தாங்காமல் முனகினுன்.

''ஆயபூ, உனக்கு என்ன நேர்ந்தது? பலத்த அடிபட்டு விட்டதா? ஆயபூ! சொல்லேன்! உனக்கு எப்படி இருக்கிறது இப்போது?''

ஆயபூ கண்களைத் திறந்தான். அடங்கிய குரலில் அவன் கேட்டான்: ''வாத்தியாரய்யா, ராஜா வந்து விட்டாரா?''

''அடே, அவர் வந்து திரும்பியும் போயாயிற்றே! உனக்கு என்ன நேர்ந்தது? எப்படிக் கீழே விழுந்தாய்?''

ஆயபூவின் முகம் அளவற்ற வருத்தத்தைக் காட்டியது. ''ராஜா வந்திருந்தார். நான் அவரைப் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை...'' மறுபடியும் குப்புறப் புரண்டு படுத்து அப்படியே கிடந்தான் ஆயபூ.

# 16

மன்னர் வந்து போய்விட்டார். விளையாட்டு அரங்கம் தயாராகி விட்டது. மாதக் கணக்காக நடந்து வந்த வேலை ஒரு நிறைவை எய்திவிட்டது. விளையாட்டுக் கூடத்தால் கவரப்பட்டு எல்லாப் பிள்ளைகளும் ஒருவருக்கொருவர் பலப்பரீட்சை நடத்திக் கொண்டனர். யானை நடனத்துக்கான வாத்தியங்கள், சிலம்பப் பயிற்சிக்கான சாதனங்கள், கழிகள், கத்திகள்—இம்மாதிரி எல்லாச் சாமான்களும் விளையாட்டு அரங்கத்தின் கட்டிடத்துக்கு வந்து சேர்ந்தன. வயது வந்த பெரியவர்கள்கூடச் சும்மாவானும் வேடிக்கையாகச் சிவப்பு மண்ணில் கட்டிப் புரண்டு மல்யுத்தம் புரிந்தனர். பள்ளிக்கூடம் தழைக்க ஆரம்பித்தது. காலையும் பிற் பகலும் இருபது முப்பது பிள்ளைகள் தவருமல் பள்ளிக்கூடத்துக்கு வந்து கொண்டிருந்தனர்.

கூரை மேலிருந்து விழுந்த காரணத்தால் ஆயபூவுக்கு ஒரு கை ஒடிந்துபோய் உள்ளாகக் காயம் பட்டிருந்தது. கையைச் சரிப் படுத்துவதற்காக ஆனந்தா தன்னுடைய ஆட்களிலிருந்து ஒரு ராமோஷியை என்னிடம் அனுப்பியிருந்தான். அவனுடைய பெயர் ஜகன்யா. பார்க்கும்படியாக எடுப்பான தோற்றமுடைய அந்த ஆள் முறுக்கான வாலிபப் பருவத்தில் இருந்தான். அவன் தினந் தோறும் என் விட்டுக்கு வந்து ஆயபூவுக்கு 'மாலிஷ்' செய்துவிட்டுப் போய்க் கொண்டிருந்தான். ஒடிந்துபோன எலும்பைச் சரியாக்கும் வித்தையை அவன் தகப்பனிடமிருந்து கற்று வைத்திருந்ததாக ஆனந்தா என்னிடம் சொல்லியிருந்தான். அந்தத் தகப்பன் நல்ல வேட்டைக்காரன். மார்பு தரையில் படும்படியாக ஊர்ந்து சென்று தோட்டாத் துப்பாக்கியால் அவன் மான் வேட்டையாடுவான். நிறைய மான்களை அவன் கொன்றிருக்கிறன். நான்கு அறை களுள்ள வீடு முழுவதும் மாட்டி வைப்பதற்குப் போதுமான மான்

கொம்புகள் அவனிடம் சேர்ந்துபோயிருந்தன. கடைசியில் அவன் கிழப்பருவத்தை அடைந்தபோது படுத்த படுக்கையாகி மானைப் போலவே கத்த ஆரம்பித்தான். நூற்றுக்கணக்கான மான்களைக் கொன்ற தாத்யாபா ராமோஷி கடைசியில் மானைப்போலவே அலறியவாறு உயிரை விட்டான். அவனுடைய மகனை ஜகன்யா 'மாலிஷ்' செய்ததன் பலனாக ஆயபூவின் பிசகிய எலும்பு சரியாகி விட்டது. பூட்டுப் பூட்டாக நோவு கண்டிருந்த உடல் நோவு தீர்ந்து நலமாகி விட்டது. ஒரு மாத காலத்துக்குள் ஆயபூ நன்றாக நடமாட ஆரம்பித்து விட்டான். கசாப்புக்காரன் மகனை ஆயபூ மரணத்தின் வாயிலிருந்து மீண்டு வந்து விட்டான். ஆனால் இதன் மத்தியில் ஜகன்யாவே தோற்றுவித்த ஒரு சங்கடத்தைத் தீர்த்து வைப்பதற்குள் கிராமத்திற்குப் பெரிய தலைவலியாய்ப் போய் விட்டது.

பன்கர்வாடியிலிருந்து பத்துப் பன்னிரண்டு மைல் தூரத்தில் 'வாங்கி' என்று ஒரு கிராமம் இருந்தது. தாலுக்காவிலேயே அடாவடித் தனத்துக்குப் பேர்போன கிராமம் அது. கொலை, அடி உதை இதெல்லாம் சர்வசாதாரணமாக அங்கே நிகழும். வெளியூர் ஆள் யாரும் அந்தக் கிராமத்தில் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டுதான் இருக்க முடியும். பள்ளிக்கூட ஆசிரியர், கிராம மணியகாரர், கர்ணம் இவர்களெல்லாம் அந்த ஊருக்கு மாற்றலாவ தென்றாலே நடுங்குவார்கள். தாசீல்தார்கூட அந்தக் கிராமத்துக்கு வரி வசூலுக்காகச் செல்லும்போது பணிவுடன்தான் பேசுவார். பிச்சை கேட்பது போலத்தான் சர்க்காருக்குச் சேரவேண்டிய வரிப் பணத்தைக் கேட்பார் நம் ஜகன்யா தன்னுடைய வேலையின் காரணமாக அடிக்கடி அந்த 'வாங்கி' கிராமத்துக்குப் போய் வந்து கொண்டிருந்தான்.

ஒருநாள் பிற்பகலில் பத்துப் பன்னிரண்டு வாலிபர்கள் பன்கர் வாடி கிராமத்தில் நுழைந்தார்கள். அவர்களுடைய கைகளில் கோடரிகளும் ஈட்டிகளும் இருந்தன. பட்டுத் தலைப்பாகையும் மல் சட்டையும் அணிந்திருந்த அந்த வாலிபர்கள் கிராமத்தில் நுழைந்து நேரே ராமோஷி இனத்தவரின் பேட்டைக்குச் சென்றனர். அவசரம் அவசரமாக அவர்கள் எல்லா ராமோஷி களின் வீடுகளிலும் சோதனை போட்டனர். பெண்களை அதட்டி வெருட்டினர். இரண்டொரு ராமோஷிகளைக் கோடரிக் காம்பால் அடித்தனர். அந்தப் பேட்டையே அல்லோலகல்லோலப் பட்டது

குழந்தைகள் பயந்து நடுங்கினர். நாய்கள் குரைத்தன, ராமோஷி இனத்து ஸ்திரீகள் தங்கள் குழந்தைகளைத் தூக்கிக்கொண்டு பயந்து நடுங்கியவாறு மேய்ப்பவர் இல்லங்களில் சரண்புகுந்தனர். வேலைவெட்டிக்காரர்களும் அதிகப்பேர் ஊரில் இல்லை. இந்த நிலைமையில் அந்த உடலுறுதி வாய்ந்த இளைஞர்கள் குடிசைகளைச் சோதனையிட ஆரம்பித்தபோது ஏகக் கூச்சலும் குழப்பமும் அங்கே எழுந்தன.

நான் பள்ளிக்கூடத்தில் இருந்தேன். ஆனந்தாவும் அங்கே தான் இருந்தான். ராமோஷிப் பேட்டையில் அடிதடி ஆசாமிகள் நுழைந்து ரகளை செய்து கொண்டிருக்கிறார்கள் என்ற செய்தி எட்டியதுமே அவன் சட்டென்று எழுந்து அந்தத் திசையில் பாய்ந்தான். வகுப்பை நிறுத்திவிட்டு நானும் அங்கே ஓடினேன்.

இதற்குள் குடிசையெல்லாம் தேடிவிட்டு அந்த முரடர்கள் தெருவில் வந்து நின்றிருந்தார்கள். ஆனந்தா அவர்களருகே சென்று, "என்ன கலாட்டா இங்கே?" என்று கேட்டான்.

இவர்கள் 'வாங்கி' கிராமத்து ஆசாமிகள் என்பதை உடனேயே அவன் புரிந்துகொண்டான். ஆனந்தா இவ்விதம் கேட்டதும் ஓர் இளைஞன் அவன்மீது படையெடுத்தான். "நீயும் ராமோஷி தானே?"

ஆனந்தா 'ஆம்' என்று சொன்னதுமே அந்த வாலிபன் தன் கையிலிருந்த தடியால் ஆனந்தாவின் முதுகில் இரண்டு சாத்துச் சாத்திவிட்டு, ஏதோ திட்டியவாறு, "எங்கே அந்த ஜகன்யா ராமோஷி?" என்று கத்தினான்.

தடியால் அடிபட்ட பிறகும் ஆனந்தா அங்கிருந்து அசைய வில்லை. "ஏன்? ஜகன்யா என்ன செய்தான்?" என்று கேட்டான்.

உடனே அந்த வாலிபன் தன் கைத்தடியால் ஆனந்தாவுக்கு இன்னோர் அடி கொடுத்தான். எனக்குப் பொறுக்கவில்லை. நான் முன்னே சென்று அந்த வாலிபனைப் பிடித்துக்கொண்டேன்.

"யார் நீங்கள்? திடுதிப்பென்று கிராமத்துக்குள் நுழைந்து இப்படி அடிதடியில் இறங்கி விட்டீர்களே! இங்கே ஒரு கேள்வி முறையும் கிடையாதென்று நினைத்துக்கொண்டீர்களா?" என்று அதட்டினேன்.

நான் பூஞ்சை ஆசாமிதான். ஆனாலும் என்னையறியாமலே அளவுக்கு மீறிய அதட்டல் வார்த்தைகள் என் வாயிலிருந்து கிளம்பின. கணநேரத்துக்கு அந்த வாலிபன் தன் கையை விடுவித்துக்கொள்ளும் உணர்வுகூடத் தோன்றாமல் நின்றான்.

அப்போது கட்டைகுட்டையான ஒரு முரட்டு ஆசாமி முன்னே வந்தான். முதலாவது இளைஞனை இழுத்து அப்புறமாகத் தள்ளி விட்டு, அவன் என்னுடைய நெஞ்சோடு தன் நெஞ்சை மோதுவது போல் வந்து நின்றுகொண்டு, ''நீ யாரடா? ரொம்ப விறைப்பைக் காட்டுகிறாயே!'' என்றான்.

''நான் அரசாங்க ஊழியன். இங்குள்ள பள்ளியின் ஆசிரியன். உங்களுக்கு யார் வேண்டுமோ நேர்முகமாகக் கேளுங்கள். அடிதடியில் இறங்குவதற்கு இதொன்றும் அராஜகபுரி இல்லை.''

இதன் மத்தியில் தன்னுடைய ஒடிந்த கையில் தடியை ஏந்திய படி ஆயபூ வந்திருந்தான். நாலைந்துப் பிள்ளைகளும் விளையாட்டுக் கூடத்திலிருந்து சிலம்பக் கழிகளை எடுத்துக்கொண்டு வந்திருந்த னர்.

என்னோடு நெஞ்சைச் சேர்த்து நின்றிருந்த ஆசாமி சுற்று முற்றும் பார்த்துவிட்டுச் சற்றே இறங்கி வந்தான். மூக்கைத் துருத்திக்கொண்டு அவன் கூறினான்: ''எங்களுக்கு ஜகன்யா ராமோஷிதான் வேண்டும்.''

''நான்கைந்து நாட்களாக அவன் ஊரிலேயே இல்லை!'' என்றேன் நான்.

''இதை உண்மை என்று நம்ப வேண்டுமா?''

''நான் சொல்வதனால்.''

''அட! பலே வாத்தியார்! இந்த உடம்பிலே இவ்வளவு துடுக்கா?''

இதற்குள் கிராமத்துக் கிழவி ஒருத்தி முன்னே வந்து அந்தத் தலைப்பாகை ஆசாமியின் மோவாயைப் பிடித்துக் குழைவான முறையில் கூறினாள்: ''அடே என் மகனே, ஏழை ராமோஷிகளைக் கோடரியாலே தாக்கலாமா? நீயோ உயர்ந்த வம்சத்து மராட்டி யன். ராமோஷி உன்னுடைய கால் தூசிக்குச் சமானம். அமைதி யாக உட்கார்ந்து கொள். வெயிலில் வந்திருக்கிறாய், தண்ணீர் குடி. ஏதாவது காரியம் இருந்தால் இந்த வாத்தியாரய்யாவைக் கேள்.''

அப்போது கூவி ஓலமிட்டவாறு ராமோஷிகளின் ஸ்திரீகள் ஒன்று சேர்ந்து விட்டனர். மேய்ப்பவர் ஸ்திரீகளும் அங்கே கூடி விட்டனர். 'வாங்கி' கிராமத்து வாலிபர்கள் மீது வசைமாரி தொடுத்தனர்.

நான் அந்த இளைஞர்களைப் பார்த்து, “நீங்கள் விளையாட்டுக் கூடத்துக்கு வாருங்கள். நீங்கள் எதற்கு வந்திருக்கிறீர்கள்; உங்களுக்கு என்ன வேண்டும் என்பதைப்பற்றி யெல்லாம் அங்கே பேசிக்கொள்ளலாம். வெட்டியாக அடிதடியில் இறங்குவது கண்யமான மனிதர்களுக்கு அழகல்ல!'' என்றேன்.

அவர்களுக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை; 'சரி' என்று சொல்லிவிட்டு அவர்கள் புறப்பட்டனர். சிறுவர்களின் கும்பலும் பெண்களின் கூட்டமும் எங்களைத் தொடர்ந்து வர ஆரம்பித்தது. நான் அவர்களை அதட்டி அனுப்பினேன். அதன் பிறகு யாரும் வரவில்லை. நான், ஆனந்தா, ராமா, அந்த இளைஞர்கள் எல்லோருமாக விளையாட்டுக் கூடத்துக்கு வத்து உட்கார்ந்து கொண்டோம்.

“இப்போது சொல்லுங்கள்.”

அவர்களில் ஒருவன் பேசினான்: “நாங்கள் 'வாங்கி' கிராமத்தைச் சேர்ந்தவர்கள். உங்கள் கிராமத்து ஜகன்யா ராமோஷி எங்கள் கிராமத்திலிருந்து எங்கள் இனத்தைச் சேர்ந்த ஒரு கைம்பெண்ணைக் கடத்திக்கொண்டு போயிருக்கிறான். அவனைப் பிடித்து விசாரிக்கத்தான் நாங்கள் வந்திருக்கிறோம்.''

இந்த ஆட்கள் ஏன் திடீரென்று அடிதடியில் இறங்கினார்கள் என்பதன் காரண காரியத் தொடர்பு எனக்கு இப்போது புரிந்தது. அவர்களுடைய கோபம் இயற்கையானதுதான். ஜகன்யா இப்படி ஒரு இழிசெயலைச் செய்திருப்பான் என்று நாங்கள் சிறிதும் கற்பனை கூடச் செய்ததில்லை. ராமாக் கோனும் ஆனந்தாவும் இந்தச் செய்தியைக் கேட்டு ஸ்தம்பித்துப் போயினர்.

ஜகன்யாவைக் குறித்து ஒரு வசைமொழியை உதிர்த்த ஆனந்தா கோபத்துடன் கூறினான்: “வீட்டில் சாப்பாட்டுக்கு மணிதானியம் கிடையாது, அந்த உதவாக்கரைக்குப் பெண்பித்து வேறு கேடா? தலைவரே, நீங்கள் தயங்காமல் அந்தப் பயலைக் கொன்று போடுங்கள். இந்தக் கிராமத்திலிருந்து யாரும் குறுக்கே நிற்கப் போவதில்லை!''

ஆனந்தாவின் இந்த எதிரிடையான போக்கு அந்த ஆட்களைச் சாந்தப் படுத்தியது. நிதானத்துடன் பேச ஆரம்பித்தனர்: “அவள் கைம்பெண்ணாயிருந்தாலும், ஆதரவற்றவளாக இருந்தாலும், இந்த விஷயம் கிராமத்தின் கௌரவத்துக்கே பாதகமானது. எங்கள் இனத்துப் பெண்ணொருத்தியை ஒரு ராமோஷி இனத்தவன்

கடத்திக் கொண்டு போய்விட்டான் என்ற களங்கத்தை நாங்கள் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது!'' இவ்வாறு பேசினார்கள் அவர்கள். அது நியாயமென்றே தோன்றியது.

'' அந்தப் பயல் இங்கே இருந்திருந்தால் அவனைச் செம்மையாக உதைத்து உங்களெதிரே கொண்டுவந்து நிறுத்தியிருப்பேன். எங்கள் கையாலேயே அவன் தலையில் கற்களை எறிந்து அவன் மண்டை யோட்டைப் பெயர்த்திருப்போம், ஆமாம்!'' என்றான் ஆனந்தா.

'' எங்கே ஓடிவிடுவான் ? அவன் எங்கே இருந்தாலும் தேடிக் கண்டுபிடித்து அவனைக் கொல்லாமல் விடப்போவதில்லை !'' என்றார்கள் அந்த ஆட்கள்.

'' ஆமாம் ! அந்தப் பறைதைப்பயல் எங்கே போய்விட முடியும்? உங்களை எதிர்த்து நிற்கத் துணிச்சல் ஏது அவனுக்கு ?''

என்ன சொல்வதென்று எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. இந்தத் துஷ்டர்கள் ஒரு வெறி நாயைத் துரத்துவதுபோல் ஜகன்யாவைத் துரத்திக் கொண்டிருந்தார்கள். அவன் பிடிபட்டு விட்டால் அவனைக் கொன்றுபோடத் தயங்கமாட்டார்கள். கடைசியில் ஆனந்தா அவர்களிடம் கூறினான்: '' ஐயா, இந்த விஷயம் எப்படி உங்களுக்குத் தலைகுனிவை ஏற்படுத்தியிருக்கிறதோ, அப்படியேதான் எங்களுக்கும். நீங்கள் நிம்மதியாகத் திரும்பிப் போங்கள். பண்டரிநாதன் ஆணையாகச் சொல்கிறேன், இன்னும் எட்டே நாளில் அந்தப் பயலையும் அந்தப் பெண் பிள்ளையையும் பிடித்து வந்து நானே உங்கள் முன்னால் நிறுத்துகிறேன், போதுமா ?''

' வாங்கி ' முரடர்கள் யோசனை செய்ய ஆரம்பித்ததும், ஆனந்தா என்னைப் பார்த்து, '' சரிதானே வாத்தியாரய்யா ?'' என்று கேட்டான்.

'' சரிதான். ஜகன்யா குற்றம் செய்திருந்தால் அவனைப் பிடித்து இவர்களெதிரே நிறுத்துவதற்கு எவ்வித ஆட்சேபணையும் இருக்க முடியாது.''

ஆயபூ, கிராமம் முழுவதும் சுற்றி அலைந்து ஒரு பை நிறைய வேர்க்கடலையும் ஒரு சுமை வெல்லமும் சேகரித்துக் கொண்டுவந்து ' வாங்கி ' கிராமத்து முரடர்களெதிரே வைத்தான். சற்றுப் பொறுத்து ஒரு பானை நிறையத் தேநீர் தயார் செய்து வந்து, வேர்க்கடலையையும் வெல்லத்தையும் தின்று முடித்திருந்த

விருந்தாளிகளுக்கு வெண்கலத் தட்டுகளில் ஊற்றி ஊற்றி விநியோகம் செய்தான். வேண்டி வருந்தி அவர்களைக் குடிக்கச் செய்தான்.

ஆனந்தாவின் சபதத்தை ஒப்புக்கொண்டு, என்னை அதற்குப் பொறுப்பாளியாக்கிவிட்டு, 'வாங்கி' முரடர்கள் புறப்பட்டுச் சென்றனர். நாங்கள் ஊர் எல்லை வரை சென்று அவர்களை வழியனுப்பி விட்டுத் திரும்பினோம்.

அந்த முரடர்கள் கண்ணுக்கு மறைந்த பிறகு நாங்கள் திரும்பியபோது நான் ஆனந்தாவிடம் கேட்டேன்: "ஏன் ஆனந்தா, ஜகன்யா அகப்படாவிட்டால் என்ன செய்வது ?"

ஆனந்தா தொண்டையைக் கனைத்துக் காறி உமிழ்ந்து விட்டுக் கூறினான்: "அந்தப் பயலைப் பிடிக்காவிட்டால் நான் ராமோஷியே இல்லை. வாத்தியாரய்யா, அவன் சுடுகாட்டுக்கே போனாலும் சரி, துரத்திக் கொண்டு போய்ப் பிடிக்கிறேனா இல்லையா என்று பார்த்துக்கொண்டே இருங்கள் !"

மறுநாள் அதிகாலையில் எழுந்து ஜகன்யாவைப் பிடித்துவரப் புறப்பட்டான் ஆனந்தா. அவனுடன்கூட வேறு இரண்டு மூன்று வாலிபப் பிள்ளைகளும் சென்றார்கள். கைகளில் கோடரியும் குண்டாந்தடியும் எடுத்துக் கொண்டு மான்வேட்டையாடக் கிளம்புவதுபோல் ஜகன்யாவை வேட்டையாடப் புறப்பட்டனர். கிராமத்திலுள்ள ராமோஷிகள் வரத்துப் போக்காக இருக்கும் இடங்கள் என்னென்ன என்று ஆனந்தாவுக்கு நன்றாகத் தெரியும். ஜகன்யா இங்கிருந்து சென்று இரண்டு நாட்கள் ஆகியிருந்தன. இதற்குள் அவன் குறுக்கு வழியாக நெடுஞ்சாலையை அடைந்து மோட்டாரில் ஸ்டேஷனை அடைந்திருப்பதோ, அங்கிருந்து ரெயிலேறிப் பம்பாய்க்குச் செல்லும் ரெயிலைப் பிடித்திருப்பதோ சாத்தியமில்லை. ஏனென்றால், தன்னைக் காணவில்லை என்றதுமே எல்லோரும் தன்னைத் தேட ஆரம்பிப்பார்கள், முதலில் மோட்டார்ச் சாலை, பிறகு ஸ்டேஷன் இங்கெல்லாம் தான் சல்லடைபோட்டுத் தேடுவார்கள் என்பது அவனுக்குத் தெரிந்ததுதான். எனவே ஏகதேசம் தொலைவிலுள்ள, ஆனால் தனக்குப் பழக்கமான இடத்துக்குத்தான் அவன் ஓடியிருக்கவேண்டும். பழக்கமான இடங்கள் ஒவ்வொரு கிராமத்திலும் இருந்தன என்றாலும், முக்கியமாக இருபது இருபத்தைந்து மைல் தூரத்தில் 'நிம்ரஜ்' என்னும் கிராமத்தில் ஜகன்யாவின் தமக்கை இருந்தாள். ஆனந்தா நேரே அந்தக் கிராமத்துக்குத்தான் விரைந்தான். நடுப்பகலில் சாப்பாட்டு நேரத்துக்கு அந்த வீட்டு வாயிலில் போய் நின்றான்.

விருந்தாளிகள் வந்திருப்பதைப் பார்த்ததும் ஜகன்யாவின் சகோதரி வெலவெலத்துப் போனாள். அங்குமிங்குமாகக் கேட்டு மாவு வாங்கிவந்து சுடச்சுட ரொட்டியும் பதார்த்தங்களும் ஆக்கி விருந்தாளிகளுக்கு வயிறு நிரம்ப உணவளித்தாள். எல்லோரும் ஏப்பம் விட்டவாறு எழுந்தனர். பிறகு வெற்றிலைபாக்குப் போட்டுக்கொண்டவாறு ஆனந்தா ஜகன்யாவின் தமக்கை புருஷனை விசாரித்தான் : '' ஜகன்யா இங்கே வந்திருந்தானா?''

தமக்கை புருஷன் சற்றுத் திடுக்கிட்டான். சட்டென்று சமாளித்துக்கொண்டு, '' இல்லையே, அவன் இங்கு வரவில்லையே!'' என்றான்.

இந்தப் பதில்தான் வரும் என்பது ஆனந்தா எதிர்பார்த்தது தானே! ஆனால் அந்த ஆள் திடுக்கிட்டது அவனுடைய கூரிய விழிகளுக்குத் தப்பவில்லை. ஜகன்யா இங்கு வந்துதான் போயிருக்கிறான் என்று அவன் புரிந்துகொண்டான். தான் ஒரு பெண்ணைக் கடத்திக்கொண்டு வந்திருப்பதை ஜகன்யா தன் தமக்கை புருஷனுக்குச் சொல்லியிருக்கவேண்டும் - ஆனந்தாவுக்கு இதுவும் தெளிவாகி விட்டது. எனவே அவன் கூறினான் ; '' உங்களிடம் பொய்சொல்லுவானேன் ? ஜகன்யா கழுதைத்தனமாக நடந்து கொண்டிருக்கிறான். வாங்கி கிராமத்தைச் சேர்ந்த ஒரு கௌரவமான குடும்பப் பெண்ணைக் கடத்தி வந்துவிட்டான். அத்த கிராமத்திலிருந்து நூறு பேர் கோடரி - குண்டாந்தடிகளுடன் பன்கர்வாடிமேல் படையெடுத்து வந்துவிட்டார்கள். நான் அவர்களைக் காலைப்பிடித்துக் கெஞ்சி, ' அந்தப் பெண்ணுடன் ஜகன்யாவைப் பிடித்து வந்து உங்களிடம் ஒப்படைக்கிறேன், கிராமத்தைத் துன்பப்படுத்த வேண்டாம்'' என்று மன்றாடிக் கேட்டுக்கொண்டதனால்தான் அவர்கள் திரும்பிப் போனார்கள். இல்லாவிட்டால் நேற்று எங்கள் பேட்டையில் நாலைந்து பிணங்கள் விழுந்திருக்கும்.''

தமக்கை புருஷனுக்கு எல்லா விவரமும் தெரிந்திராது போல் இருந்தது. அவன் முகக்குறி கவலையைக் காட்டியது. உள்ளே ஜகன்யாவின் சகோதரி அமைதி இழந்து தவித்துக் கொண்டிருந்தாள். ஆனால் ஜகன்யா வந்திருந்ததைப்பற்றி ஒப்புக்கொள்ளாமல் அவளுடைய கணவன் கூறினான்: ''ஜகன்யா தப்புச் செய்து விட்டான். தாரதரம் தெரியாமல் அகலக் கால் வைத்து விட்டான். பெண்பிள்ளையைக் கடத்தி வந்தால் வரட்டும்; ஆனால் தன் இனத்தைச் சேர்ந்த பெண்ணையாவது கடத்திவந்திருக்கலாம். தொலைகிறது.

ஆனால் நான் கேட்பதென்னவென்றால், அவனைப் பிடித்து நீங்கள் என்ன செய்யப்போகிறீர்கள்? பறிபோன மானம் அந்தப் பெண் பிள்ளைக்குத் திரும்பக் கிடைத்துவிடப் போகிறதா? அவனை யாரும் ஜாதியில் சேர்த்துக் கொள்ளவும் மாட்டார்கள். ஆனால் ஜகன்யாவை அந்த ஆட்கள் சும்மா விடுவார்களா? அடித்து உதைப்பார்கள், உயிரையே பறித்துவிடுவார்கள். — அதனாலெல்லாம் நடந்துபோன விஷயத்துக்குப் பரிகாரம் கிடைத்துவிடுமா?''

''உண்மைதான். கிடைக்காது தான்,'' என்றான் ஆனந்தா.

''அப்படியிருக்கும்போது உங்களுக்கு ஏன் இந்த அனாவசிய ரத்தக் கொதிப்பு? அவர்கள் இரண்டு பேரும் சந்தோஷமாக இருக்கட்டும். ஆணும் பெண்ணும் ஒத்துப்போன பிறகு ஜாதியும் சமூகமும் என்ன செய்ய முடியும்?''

ஒருவகையில் பார்க்கும்போது அந்தத் தமக்கை புருஷனுடைய வாதம் சரியானதுதான். ஆனால் ஜகன்யா அந்தப் பெண்ணுடன் ஆனந்தக் கேளிக்கையில் ஈடுபட்டிருக்கும் அதேசமயத்தில் 'வாங்கி' கிராமத்து முரடர்கள் அவனுடைய வீட்டையே கொளுத்திவிடுவார்கள். அவனைச் சேர்ந்தவர்களை அடித்து உதைத்துத் துன்பப் படுத்துவார்கள். ஒருவனுடைய தவறுதலுக்காக ராமோஷிகள் பேட்டை முழுவதுமே தீக்கிரையாக நேரிடும். கிராமம் முழுதுக்குமே தொல்லை ஏற்படும். அந்தச் சின்னஞ்சிறு கிராமத்தில் இருந்த மனிதர்கள்தான் எத்தனை பேர், அவர்களுவடைய பலம்தான் என்ன — இந்த விஷயங்களையெல்லாம் ஜகன்யாவின் தமக்கை புருஷன் சிந்திந்துப் பார்க்கவில்லை.

இவற்றையெல்லாம் ஆனந்தா அந்த ராமோஷிக்கு விளக்கிக் கூறினான் அப்படியும் அவன் இணங்கி வரவே இல்லை. தன் மைத்துனன் எங்கே இருக்கிறான் என்ற தகவலைத் தர மறுத்தவாறே இருந்தான். நீண்ட நேரம் அவனிடம் பேசிப் பார்த்தும் அவனிமிருந்து தகவல் எதுவும் கிடைக்காமல் போகவே, ஆனந்தா எழுந்துவிட்டான். ''நல்லது. இனிமேல் என்ன செய்வதென்று நாங்களாகப் பார்த்துக் கொள்ள வேண்டியது தான். வணக்கம்.''

அந்த ஆளும் ஆனந்தாவுக்கு வணக்கம் கூறியவாறு எழுந்தான். ஆனால் இதற்குள் ஜகன்யாவின் சகோதரி உள்ளிருந்து வந்து அழுவதுபோல் முகத்தை வைத்துக் கொண்டு கூறினாள்: 'ஆனந்தா, ஜக்கு வந்திருந்தான்.''

கணவன் அவளைக் கோபக் கண்களுடன் பார்த்தும் கூட அவள் வாயை மூடிக் கொள்ளவில்லை. ''ஸ்டேஷனை நோக்கிப்

போயிருக்கிருன். அந்தப் பெண் பிள்ளையை அழைத்துக் கொண்டு 'ஸாங்க்லி' என்கிற ஊருக்குப் போகத் திட்டமிட்டிருக்கிருன்போல் இருக்கிறது. ஆனால் அவனுடைய உயிருக்கு ஆபத்து நேராமல் நீதான் பார்த்துக் கொள்ள வேண்டும். என் தலைமேல் ஆணையிட்டுச் சொல்கிறேன்''.

''பார்க்கலாம். உன் வார்த்தையைக் காப்பாற்றுகிறேன். ஏன், அவன் எங்களுக்கு மட்டும் சொந்தக்காரன் இல்லையா? அவனைக் கொல்ல விட்டு விடுவோமோ? இங்கிருந்து எப்போது போனான்?'' என்றான் ஆனந்தா.

''கருக்கலிலேயே கிளம்பிப் போய்விட்டான். இதற்குள் வண்டியைப் பிடித்திருக்க முடியாது.''

மிரஜ் பக்கமாகச் செல்லும் ரெயில் வண்டி பிற்பகல் மூன்று மணிக்குத்தான் அந்த ஸ்டேஷனுக்கு வருவது வழக்கம். அவசரம் அவசரமாக விடைபெற்றுக் கொண்டு, மீண்டும் மீண்டும் அந்தச் சகோதரிக்குத் தைரியம் கூறிவிட்டு ஆனந்தா அங்கிருந்து புறப்பட்டான். வேஷ்டியை வரிந்து கட்டிக் கொண்டு, செருப்புகளைக் கையில் எடுத்துக் கொண்டு அவர்கள் ஸ்டேஷனுக்குச் செல்லும் பாதையில் விரைந்தனர். பொரிகிற வெயிலில், பொசுக்கும் புழுதி வழியே அந்த ராமோஷிகள் விசையுறு பந்தினைப் போல் விரைந்து ஓடினர். வெகு சீக்கிரத்தில் அவர்கள் ஏழெட்டு மைல் வழியைக் கடந்து சென்று விட்டனர். தூரத்தில் பாதையோரமாக இருந்த ஒரு ஆலமரத்தடியே, ஒரு ஸ்திரீயும் ஓர் ஆடவனும் உட்கார்ந்திருப்பதைப் பார்க்க முடிந்தது.

ஜகன்யாவும் லாகவமான உடற்கட்டு உடையவன்தான். காற்றின் வேகத்துடன் கடுகி ஓடக் கூடியவன். ஆனால் அவனுடன் இருந்த அழகான ஸ்திரீ சற்று ஸ்தூல சரீரம் உடையவள். பெண் பிறவி, போதாக்குறைக்குத் தேகம் வேறு பருமன். எவ்வளவுதான் பயந்து ஓட நினைத்தாலும் விரைவாக முன்னேறுவது அவளால் முடியவில்லை. அங்கங்கே உட்கார்ந்து, நிழலில் இளைப்பாறி, அவ்விருவரும் இதுவரை பாதிவழிதான் போக முடிந்தது.

ஆனந்தா சட்டென்று நின்று விட்டான். நெற்றியில் கையை வைத்து மறைத்துக் கொண்டு அவன் இன்னும் நன்ருகப் பார்த்து விட்டு, கூட வந்திருந்த வாலிபர்களிடம் கூறினான்: ''ஜகன்யாவே தான்! சிவப்புத் தலைப்பாகை அவனுடையதே தான்! ஆனால் என்ன செய்வது? நம்மைக் கண்டுவிட்டால் ஓடி விடுவான்!''

''ஓடட்டுமே! முயலை வேட்டையாடுவது போல் துரத்தி விழப் பண்ணி விடுவோம் அவனை!''

''விழப் பண்ணி விடுவீர்களா?''

''ஆமாம். அப்படி அவன் ஓடிவிட்டாலும் அந்தப் பெண்பிள்ளை இருக்கவே இருக்கிறாள்!''

''அவளைப் பிடித்து வெட்டிச் சாப்பிடப் போகிறோமா என்ன? நமக்கு வேண்டியது ஜகன்யா!''

''அவனும் தான் எங்கே ஓடிவிட முடியும்? நீ பேசாமல் கீழே பார்த்துப் போ!''

பிறகு அந்த இளைஞர்கள் பிரிந்து போயினர். நாலுபக்கமும் சூழ்ந்து கொண்டு அவர்கள் அந்த ஜோடியை நடுவில் வைத்த வாறு ஜாக்கிரதையாக ஒளிந்து ஒளிந்து முன்னேற ஆரம்பித்தனர்.

ஜகன்யா மீண்டும் மீண்டும் சூரியனைப் பார்த்துவிட்டுக் கூறிக் கொண்டிருந்தான்—''உம், புறப்படு. வண்டி தப்பிப் போய்விடும்!''

இடைவிடாமல் நடந்து சென்றதனால் களைத்துப் போயிருந்த அந்த ஸ்திரீ தனது உலர்ந்த நாக்கை வெடித்திருந்த உதடுகளில் புரட்டியவாறு, ''கொஞ்சம் பொறுங்களேன். இல்லாவிட்டால் நான் செத்துப் போய்விடுவேன்'' என்று கூறிக் கொண்டிருந்தாள்.

இதன் நடுவில் ஜகன்யா திடீரென்று எழுந்து நின்று விட்டான். சுற்றும் முற்றும் பார்த்தான் அவன். பின்புறம் பத்துப் பதினைந்து முழத்தூரத்துக்குள் வந்து விட்டிருந்த ஆனந்தாவை அவன் கண்டு கொண்டான். சட்டென்று அவன் அந்தப் பெண் பிள்ளையின் கையைப் பிடித்து அவளை இழுத்தவாறு, 'அடீ, ஓடிவா! ஆட்கள் வந்திருக்கிறார்கள், நம்மைப் பிடித்துப் போக!'' என்று கூறி ஓட ஆரம்பித்தான்.

உயிரைப் பணயம் வைத்து இருவரும் ஒருவர் மற்றவர் கையைப் பிடித்துக் கொண்டு ஓட்டமெடுத்தனர். ஆனந்தாவும் அவர்கள் பின்னால் ஓடியபடியே, ''ஜகன்யா, ஓடாதே! ஓடாதே!'' என்று கத்தினான்.

ஆனால் ஜகன்யாவுக்குத் தன் நினைவே இல்லை. அந்த ஸ்திரீயும் தன் களைப்பையும் மறந்து ஓடிக் கொண்டிருந்தாள். நேர் வழியை விட்டுவிட்டு இருவரும் குறுக்கு வழியாகக் கரிசல் மண் நிறைந்த வயல்களில் பின்புறம் திரும்பிப் பாராமலேயே ஓட ஆரம்பித்தனர். அந்த ஸ்திரீயின் புடவை முந்தானை காற்றில் பறந்து கொண்டிருந் தது. ஜகன்யாவின் தலைப்பாகை நுனி காற்றில் பறந்துகொண்டிருந்

தது. கல்லேயோ மண்ணேயோ லட்சியம் செய்யாமல் அவர்களிரு வருமே வேகமாக ஓடிக் கொண்டிருந்தனர். ஆனந்தா அவர்களைத் துரத்தி ஓடிக் கொண்டிருந்தான்.

ஓடி ஓடிக் களைத்துப்போன அந்த ஸ்திரீ மூச்சுத் திணறியவாறு கரிசல் மண்ணில் விழுந்துவிட்டாள். ஜகன்யா திரும்பி அவளைத் தூக்க முயற்சி செய்தபோது, வேறு ராமோஷி இளைஞர்கள் அருகிலேயே தன்னை எதிர்த்து வருவதைக் கண்டான். உடனே அவன் அடிபட்டு விழுந்த பெண்மானை விட்டுவிட்டு ஓடும் கலைமானைப் போல் அந்த ஸ்திரீயை அதே நிலையில் விட்டுவிட்டு ஓடிவிட்டான். இளைஞர்கள் ஸ்திரீயின் அருகே வந்ததும் தயங்கி நின்றார்கள். ஆனல் ஆனந்தா ஜகன்யாவைத் துரத்திக் கொண்டு ஓடினன். நீண்ட நேரம் அவ்விருவரின் இந்த ஓட்டப் பந்தயம் நீடித்தது. ஆனல் வாலிபனை ஜகன்யா ஆனந்தாவின் பிடியில் சிக்காமல் ஓடிக் கொண்டிருந்தான். கடைசியில் இடைவெளி சற்றுக் குறைந்த நேரமாகப் பார்த்து ஆனந்தா தன் கையிலிருந்த கோடரியை ஜகன்யாவை நோக்கி வீசினன். ஓடும் மானைத் தாக்கி வீழ்த்துவது போலவே ஜகன்யாவைக் கோடரி வீச்சினல் வீழ்த்திவிட்டான். ஓடி ஓடி மூச்சு முட்டிப்போயிருந்த ஜகன்யா அடிப்பட்ட மிருகம் போல் அலறிக்கொண்டே கீழே விழுந்தான்.

ஆனந்தா அவ்விருவரையும் வண்டியில் போட்டுக் கொண்டு 'வாங்கி' கிராமத்துக்குச் சென்றான். காலிலிருந்து ரத்தம் பெருகிய காரணத்தால் ஜகன்யா வெளுத்துச் செத்த பிணம் போல் ஆகியிருந்தான். அந்த ஸ்திரீயும் அவமானத்தாலும் குற்ற உணர்ச்சியாலும் செத்தவள் போலத்தான் இருந்தாள்.

''இதோ உங்கள் பெண்பிள்ளை. இவன் எங்கள் பயல். இவனை நான் என் கையாலேயே வெட்டிப் போட்டிருக்கிறேன். குறை உயிரையும் நீங்கள் வாங்க நினைத்தால் வாங்கிக் கொள்ளுங்கள்!'' என்றான் ஆனந்தா.

ஜகன்யா நினைவிழந்தபடியேதான் இருந்தான். அவனுடைய வேஷ்டி சட்டை எல்லாமே ரத்தத்தில் நனைந்திருந்தன. எல்லோரும் அந்த ஸ்திரீயைத் தடியால் அடித்தவாறு அவளை வீட்டுக்குள் அழைத்துச் சென்றனர். ஆனந்தாவைப் பார்த்து, ''உங்கள் ஆளை எடுத்துப் போ. ஊருக்குப் போய்க் கொளுத்து அவனை!'' என்றனர்.

அந்த நிலையில் ஜகன்யாவை எடுத்துக் கொண்டு கிராமத்துக்கு வந்தான் ஆனந்தா. ஏதோ-மூலிகைப் பச்சிலைகளை வைத்துக் கட்டிக்

கிராமத்தவர் தங்கள் வைத்தியத்தாலேயே ஜகன்யாவின் கால் காயத்தைக் குணப்படுத்தி விட்டனர்.

'வாங்கி' கிராமத்து முரடர்கள் அந்த ஸ்திரீயின் அழகிய மூக்கை அறுத்தெறிந்து அவளை ஊரைவிட்டுத் துரத்தி விட்டனர். மூக்கில் கட்டுப் போட்டுக்கொண்டு அவள் ஜகன்யாவின் வீட்டுக்கு வந்து மிகவும் அழுதாள். ஆனால் அவளை ராமோஷிகளின் பேட்டையில் வைத்துக் கொண்டிருக்க யாரும் தயாராக இல்லை. பிறகு அவள் எழுந்து சென்று விட்டாள். அதற்கப்புறம் அவள் யார் கண்ணிலும் படவில்லை.

# 17

ஜூன் மாதம் வந்தது. மிருகசீரிஷ நட்சத்திரம் கடந்து போயிற்று. இந்த நட்சத்திரத்தில் எப்போதுமே சரியாக மழை பெய்வதில்லை. இந்த வருஷமும் பன்கர்வாடிப் பகுதியில் பெய்ய வில்லை. மற்ற வருடங்களில் சிறிது ஈரமாக்கி விட்டாவது போகும். இந்த ஆண்டு அதுவும் இல்லை. மக்கள் திருவாதிரையை எதிர் பார்க்க ஆரம்பித்தனர். இப்போது எல்லா இடங்களிலும் வறட்சி நிலையே தென்பட்டது. எங்கே திரும்பினாலும் பயிர் பச்சை இல்லாத பாழ் நிலமே காணப் பட்டது. மேய்ச்சல் காடுகளில் சுற்றியலைந்து விட்டு ஆடுகள் பசியுடனேயே திரும்பி வந்து கொண்டிருந்தன. அறுவடை நாட்களில் சேமித்து வைக்கப்பட்டிருந்த உலர்ந்த தாள் கள், தவிடு, உமி, இம்மாதிரி எதையெதையோ கொடுத்து மேய்ப்ப வர்கள் ஆடுகளின் வயிறுகளை எப்படியோ நிரப்பிக் கொண்டிருந் தனர். எப்போது மழை பெய்யும், எப்போது மீண்டும் பசுமை தோன்றும் என்று ஆவலுடன் எதிர்நோக்கி இருந்தனர் எல்லோரும்.

இந்த நாட்களில் தான் பொழுது புலரும் நேரத்தில் நாட் டாண்மை ஒரு கெட்ட கனவு கண்டார். இடுப்பில் வேப்பிலைத் தழைகளை அணிந்து, விரித்த கேசத்துடன், நெற்றியில் குங்குமத் தைப் பூசியிருந்த ஒரு ஸ்திரீ அந்தக் கனவில் தோன்றினாள்.

''நான் உன்னை அழைத்துப் போக வந்திருக்கிறேன். ஏற்பாடு செய்து கொள்!'' என்றாள் அவள்.

''எங்கே?'' என்று கேட்டார் நாட்டாண்மை.

''கடவுளின் வீட்டுக்கு. ஆயத்தமாயிரு. நாளை புறப்பட வேண்டும்..''

நாட்டாண்மை திடுக்கிட்டு எழுந்தார். உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்ட, இருட்டிலேயே படுக்கையில் நீண்டநேரம் உட்கார்ந்திருந்தார்.

அதிகாலையில், இன்னும் எனக்கு நன்ருக விழிப்பு கூட வரா திருந்த போது, அவர் என் வீட்டுக்கு வந்தார். படுக்கை விளிம்பில் உட்கார்ந்து அவர் என் காலைத் தொட்டு வணங்கினுர்.

எனக்கு ஒன்றுமே புரியவில்லை. நாட்டாண்மை கூறினுர்: ''கடைசி வணக்கத்தைச் சொல்ல வந்தேன். நான் புறப்படு கிறேன்.''

நான் இங்கு வந்ததிலிருந்து நாட்டாண்மை என்றுமே கிரா மத்தை விட்டு வெளியே சென்றதில்லை.

''எங்கே புறப்படுகிறீர்கள்? எப்போது திரும்பி வருவீர்கள்?''

''இப்போது கிளம்பி யாயிற்று. திரும்பி வர மாட்டேன்.''

''அதாவது?''

''நாளைக்குப் பொழுது விடிவதற்குள் நான் இறந்து போய் விடுவேன்.''

நாட்டாண்மை வேடிக்கைக்காகச் சொல்லவில்லை. உண்மை யிலேயே ஆழ்ந்து சிந்தித்துத்தான் பேசினுர். ஆனல் நான் சிரித்து அவரைக் கேலி செய்தேன். உடனே அவர் தாம் கண்ட கனவைப் பற்றிக் கூறினுர்.

''நாட்டாண்மை ஐயா, உங்களுக்கென்ன பைத்தியமா? கனவு கள் எங்காவது உண்மையாக நடப்பதுண்டா?'' என்றேன் நான்.

''நடப்பதுண்டு தம்பி. என் கனவுகள் பலித்திருக்கின்றன.''

''சீசீ! நீங்கள் குழந்தைத்தனமாய் வெட்டியாக எதையோ மண்டையில் போட்டுக் குழப்பிக் கொண்டிருக்கிறீர்கள். அறிவாளி கள் இப்படிச் செய்ய ஆரம்பித்தால் எப்படிக் காரியம் நடக்கும்?''

ஆனல் கிழவர் எல்லா விவகாரத்தையும் இறுதியாக ஒழுங்கு படுத்த நினைப்பவர் போலத்தான் பேசினுர். ஆனல் அவர் பேச்சு எதையும் நான் ஏற்றுக் கொள்ளவில்லை.

கடைசியில் அவர், ''என்னுடைய சொத்து எல்லாவற்றையும் அஞ்ஜிக்குத்தான் கொடுக்கப் போகிறேன். ஷேகூபாவிடம் அவளை ஒப்படைக்கப் போகிறேன். அவன் அவளைக் கவனித்துக் கொள் வான். அவளுக்குக் கலியாணம் செய்துவைப்பான். நீங்களும் கவனித்துக் கொள்ள வேண்டும்...'' என்று கூறிவிட்டு எழுந்து வெளியே சென்ருர்.

நாள் முழுவதும் நாட்டாண்மை கிராமத்தில் சுற்றி அலைந்து எல்லோரிடமும் இந்த விஷயத்தைக் கூறினர். எல்லோரிடமும் விடை பெற்றுக்கொண்டார். பெரும்பாலோர் சிரித்துப் பரிகாசம் செய்தனர். கிழவரின் பேச்சை யாருமே ஏற்றுக் கொள்ளவில்லை. அறிவே இல்லாத அப்பாவி ஷேகூ கூட, ''தாத்தா, சாகும்படியாக அப்படி என்ன கஷ்டம் வந்து விட்டது உங்களுக்கு? இன்னும் ஐந்து வருஷத்துக்கு நீங்கள் அசைந்து கொடுக்க மாட்டீர்கள். போங்கள் வீட்டுக்கு!'' என்று கூறினன்.

யார் என்ன சொன்னுலும் சரி, கேலி செய்து சிரித்தாலும் சரி, தாம் அன்பு வைத்திருந்த எல்லோரையும் நேரில் போய்ப் பார்த்து ஒவ்வொருவரிடமும் விடை பெறுவதற்காக நாட்டாண்மை நாள் முழுவதும் சுற்றி அலைந்து கொண்டிருந்தார்.

மாலையில் ஆடுகள் மேய்ச்சலிலிருந்து திரும்பிய தருவாயில், ஒருவன் என்னிடம் வந்து செய்தி சொன்னுன்: ''நாட்டாண்மைக்கு வாந்தி பேதி கண்டிருக்கிறது.''

ஓட்ட ஓட்டமாக நான் சென்றேன். கிழவரின் நிலைமை முற்றிலும் மோசமாகி விட்டிருந்தது. குடல்கள் சுருட்டிக் கொண்டு விட்டன. முகம் உலர்ந்து போயிருந்தது. தெளிவாகப் பேசக் கூட இயலாமல் இருந்தார் நான் சென்றதுமே அவர் வாய்க்குள்ளேயே கூறிக் கொண்டார்—'' பொய் இல்லை அப்பனே. எனக்கு அழைப்பு வந்து விட்டது.''

''ஹூம்! அழைப்பு ஒன்றும் வரவில்லை. நாளை பொழுது விடிவதற்குள் முற்றிலும் சொஸ்தமாகி விடுவீர்கள்!'' என்று அதட்டினேன் நான்.

வீட்டு வைத்தியம் தான் தடைபெற்றது. ''இதைச் சாப்பிடச் சொல்லு, அதைக் குடிக்கச் சொல்லு; இதை நாக்கில் தடவு... ஆனுல் நடுநிசியாகியும் ஒரு வித குணமும் தென்படவில்லை. அனைவரும் தைரியம் இழந்து விட்டனர். அஞ்ஜியும் ஷேகூபாவும் அழத் தொடங்கினர். கிழவரின் உறவினர்களுடைய கண்களெல்லாம் கண்ணீரால் நிரம்பின. அதைப் பார்த்து விட்டு, அழுகைக் குரலைக் கேட்டு விட்டு, கிழவர் கணீரென்று பேசினுர்—''அடே, ஏன் அழுகிறீர்கள்? எனக்கு என்ன குறை? அவ்வளவு பெரிய மகாராஜாவே என்னைப் பார்த்து 'சௌக்கியமா, கிராமத்தலைவரே!'' என்று கூறினுரே! என் தோளில் கையை வைத்தாரே! எனக்கு ஒரு குறையும் இல்லை, இனிமேல்!''

சூரியோதயத்துக்கு நாட்டாண்மைக் கிழவரின் ஆவி பிரிந்தது.

ஒரு கிழவரின் மரணத்தால் பன்கர்வாடியே சூனியமாகி விட்டது போல் தோன்றியது. எனக்கு ஆதரவானவர் யாரும் இல்லை என்ற எண்ணம் ஏற்பட்டது. அந்தப் பள்ளிக்கூடம், விளையாட்டுக் கூடம், இவை பற்றி அலட்சிய உணர்வு உண்டாயிற்று. சொந்த ஊருக்குப் போனால் ஒரு வாரம் பத்து நாள் வரை பள்ளிக் கூடத்துக்குத் திரும்ப மனமே இல்லாமலிருந்தது.

# 18

ஒருநாள் எதிர்பாராதவிதமாக ஷேகூபாவைவிட அரைமுழம் அதிக உயரமுள்ள அவனுடைய மனைவி என் வீட்டுக்கு வந்தாள். உச்சிப்பொழுது. நான் உட்கார்ந்து ஏதோ படித்துக்கொண்டிருந் தேன். ஷேகூவின் மனைவி வந்து வாயில் நிலையருகே ஒண்டினாற் போல் நின்றுகொண்டாள். நான் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டேன்.

''என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள், மாஸ்டர்ஜி?'' என்று கேட்டாள் அவள்.

''ஒன்றுமில்லை. சற்று முன்புதான் சாப்பிட்டேன். அப்படியே உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்தேன். உட்காருங்களேன்!''

அவளுடைய சங்கோசம் சிறிது குறைந்தது. முந்தானை யில் போட்டுக்கொண்டு வந்திருந்த ஒரு சேருக்குக் காணக்கூடிய வேர்க்கடலையை அவள் என்முன்னே கொட்டிவிட்டுக் கூறினாள்: '' வேர்க்கடலை சாப்பிடுங்கள். வேறு கொடுப்பதற்கு எங்களிடம் என்னதான் இருக்கிறது ?''

'' உபாத்தியாயருக்கு ஏதாவது கொடுத்துத்தான் ஆகவேண்டு மென்று ஒன்றுமில்லையே ! உட்காருங்க.''

அப்படியும் கூட ஷேகூவின் வீட்டுக்காரி உட்காரவில்லை. அவள் ஏதோ கூற விரும்புகிறாள் என்பதை நான் புரிந்து கொண் டேன். நாட்டாண்மைக் கிழவர் இறந்தபோது அஞ்ஜியை ஷேகூ பாவிடம் ஒப்படைத்துவிட்டுப் போனார். '' இவளுக்குத் திருமணம் செய்துவை '' என்று சொல்லியிருந்தார். கிழவர் இறந்து போன பிறகு அஞ்ஜி ஷேகூபாவின் வீட்டில்தான் இருந்துவந்தாள். அவனுடைய வீட்டில் இருந்து கொண்டே அஞ்ஜி அவனைத் தன்

வலையில் சிக்கவைத்து விட்டாள். முப்பத்தைந்து வயதைத் தாண்டிய ஷேகூ அஞ்ஜிப்பித்துப் பிடித்து அலைந்து கொண்டிருந்தான் என்று பராபரியாக என் காதில் விழுந்திருந்தது. ஆனால் என்னால் அதை நம்ப முடியவில்லை. யாரோ வேண்டுமென்றே இந்த வதந்தியைக் கிளம்பியிருக்கிறார்கள் என்றுதான் எனக்குத் தோன்றியது. ஒருவேளை அதைப்பற்றிப் பேசத்தான் இந்த ஸ்திரீ வந்திருப்பாளோ என்று சந்தேகம் தட்டியது எனக்கு. ஆனால் வேற்று மனிதர்களிடம் இந்தமாதிரி விஷயங்களைப்பற்றி யாராவது பேசுவார்களா?

ஷேகூபாவின் வீட்டுக்காரி உட்காரவும் இல்லாமல் எதுவும் பேசவும் பேசாமல் தயங்கிக் கொண்டிருந்தாள், என் நிலைமை தர்ம சங்கடமாகிவிட்டது. நானாக எப்படிப் பேச்சை ஆரம்பிப்பதென்றும் எனக்குப் புரியவில்லை. கடைசியில் சும்மாவாவது கேட்டு வைத்தேன்:'' பயிர் வேலையெல்லாம் எப்படி நடக்கிறது ?''

அதற்கப்புறம் தான் ஷேகூவின் மனைவி ஒருவிதமாகச் சமாளித்துக் கொண்டாள். நிலைப்படியருகே குந்தினாற்போல் உட்கார்ந்து கன்னத்தில் கையை வைத்துக்கொண்டு கூறினாள் : ''என்னுடைய வீட்டுக்காரரை எப்படித் திருத்துவது, வாத்தியாரய்யா ?''

'' ஏன்? என்ன நடந்தது ?''

உண்மையில் எனக்கு எல்லாம் தெரியும் என்று நான் எப்படி அவளிடம் சொல்ல முடியும் ? நாலுபேரிடையே இந்தச் சமாசாரம் பரவவில்லை என்ற திருப்தியாவது அவளுக்கு இருக்கட்டுமே !''

பார்வையைத் தரையில் பதித்தவாறு அவள் பேசினாள்: ''பெருமையை மற்றவரிடம் சொல்லிக்கொள். சிறுமையை மனத்திலேயே வைத்துக்கொள் என்று சொல்வார்கள். ஆனால் இவர் சமாசாரம் எல்லைமீறிப் போய்விட்டது. இவர் இப்படி நடந்து கொள்வது சரியா ? நீங்களே சொல்லுங்கள்!''

'' ஏன்? ஏதாவது வாக்குவாதம் நடந்ததா ?''

'' நடக்காமல் என்ன செய்யும்? இரண்டாம் கலியாணம் செய்துகொள்ளப் போவதாகச் சொல்கிறார்.''

போலியான வியப்பை வெளிப்படுத்தியவாறு நான் கேட்டேன்: '' ஷேகூபாவா! திடீரென்று என்ன நேர்ந்துவிட்டது அவருக்கு ?''

'' திடீரென்று ஒன்றுமில்லை. நாட்டாண்மைக்காரர் கண்ணை மூடினார். பாவம், நல்லவர்தான். ஆனால் சாகும்போது என் வீட்டில் நெருப்பை அள்ளிக் கொட்டிவிட்டுப் போய்விட்டார்!''

அந்த ஸ்திரீயின் தொண்டை அடைத்துக் கொண்டது. கண்களில் கண்ணீர் பொங்கியது. முந்தானையால் கண்களைத்

துடைத்துக் கொண்டு, கூட்டி விழுங்கித் தொண்டையைச் சரிப் படுத்திக்கொண்ட பிறகு, அவள் அடங்கிய குரலில் பேச ஆரம்பித் தாள்: ''எப்போதும் அந்தக் குட்டியின் பின்னலேயே சுற்றிக் கொண்டிருக்கிறார். அவளும் ஒரு வாலிபனிடம் காட்டவேண்டிய தளுக்கும் குலுக்கும் காட்டிக் கொண்டிருக்கிறாள். இதையெல்லாம் பார்த்துக்கொண்டு நான் எப்படி என் வாயை மூடிக்கொண் டிருக்க முடியும்? அவளுக்குப் புத்தியில்லை என்று சொல்லலாம். அவளென்ன அறியாதவளா? குளித்து முழுகுகிறாளா இல்லையா? வெட்கம் கெட்டவள், அவ்வளவுதான்! ஆனால் இவர் ஏன் அவள் பின்னல் பித்துப்பிடித்து அலையவேண்டும்? மற்றவரை மதிக்கா விட்டாலும் தன் மனச்சாட்சியை மதிக்கவேண்டாமா? உங்களைப் போன்றவர்கள் என்ன சொல்வீர்கள்? 'அந்தக் கிழவனார் தம் பேத்தியைக் கவனித்துக்கொள்ளும் பொறுப்பைக் கொடுத்துவிட்டுப் போனார். ஒரு நல்ல பையனைப் பார்த்து அவளுக்குக் கலியாணம் செய்துவைத்து நல்ல பெயர் வாங்கியிருக்க வேண்டும். அதைவிட்டு அவளைக் கழுத்தில் கோத்துக் கட்டிக்கொண்டு அலைவதா?' – வேலை வெட்டி எதுவும் பார்ப்பதில்லை. 'புடைவை வாங்கிக் கொடுங்கள்; ரவிக்கை வாங்கிக் கொடுங்கள்' – இப்படி அந்தக் குட்டி ஆட்டி வைக்கிறபடியெல்லாம் ஆடிக் கொண்டிருக்கிறார். இது சரியா? நீங்களே சொல்லுங்கள்!''

நான் வியப்படைந்தவன் போல் பாசாங்கு செய்தேன். கோபம் கொண்டவன் போல் நடித்தேன்.

'' இந்த விஷயத்தை நீங்களாகவே சொல்வதனால்தான் நம்ப வேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால் ஷேகூபா காய்ந்த இலை களின்மேல் கால் வைக்கக்கூடத் தயங்கும் ஆசாமி ஆயிற்றே! அவனாவது இப்படிச் செய்வதாவது? ஆனால் எப்போது நீங்களே சொல்கிறீர்களோ, உண்மையாகத்தான் இருக்கவேண்டும்.''

'' நான் எதற்காகப் பொய் சொல்லப் போகிறேன்? இதனால் அவருடைய கௌரவம் மட்டுமா பாழாகிறது? என்னுடைய கௌரவ மும்தானே பாழாகிறது! கழுத்தளவு வராதவரையில் இந்தமாதிரி விஷயங்களை யாராவது மற்றவர்களிடம் சொல்வார்களா?''

'' சீ! ஷேகூபா இத்தனை நாளாகச் சம்பாதித்துக் கொண் டிருந்த நல்ல பெயரை யெல்லாம் இழக்கத் துணிந்து விட்டாரே! முட்டாள்தனம்!''

நான் இப்படிச் சொன்னதால் ஷேகூபாவுக்குக் கெட்ட பெயர்

சூட்டுகிறேன் என்று நினைத்தாளோ என்னவோ, அந்த ஸ்திரீ உடனே விஷயத்தைத் தெளிவு படுத்தினாள்.

"வீணுக்காவது அந்தப்பெண்ணைப் பாழடித்துவிட அவர் நினைக்கவில்லை. அவளைக் கலியாணம் செய்துகொள்ளப் போவ தாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார்..."

"இருந்தாலும், கலியாணம் செய்து கொள்வதற்கு வரை முறை எதுவும் கிடையாதா? இரண்டாவது கலியாணம் செய்து கொள்ளும்படி அப்படி என்ன அவசியம் நேர்ந்திருக்கிறது இப்போது!"

"எனக்குப் பிள்ளைகுட்டி பிறக்கவில்லையே, குழந்தை வேண்டு மென்று செய்துகொள்கிறாராம்!"

இதற்குப் பதில் சொல்ல முடியாமல் நான் வாயடைத்துப் போனேன். என் திகைப்பை என் முகமே பிரதிபலித்து விட்டது. நான் சொல்லியிருக்க வேண்டியதை ஷேகூபாவின் அந்த விவேக முள்ள வீட்டுக்காரியே சொல்லிவிட்டாள்: "குழந்தை இல்லை, சரி. ஆனால் அப்படி என்ன ஆஸ்தி பாழாய்ப் போகிறது இங்கே? நாம் கொடுத்துவைத்திருந்தால் கடவுள் கொடுக்காமலிருப்பாரா? என்ன நான் சொல்வது?"

"ஆமாம். அப்படியே வேண்டியிருந்தால் தகுந்த பெண்ணைப் பார்த்து முறைப்படி கலியாணம் செய்துகொள்ளட்டுமே" என்றேன்.

"எதற்காக? இரண்டுபேருக்கே வயிற்றுக்குப் பற்றாமல் இருக்கிறது. எப்படி நடக்கிறதென்று நீங்களே தான் பார்த்துக் கொண்டிருக்கிறீர்களே! இன்னொருத்தி வந்தாலும் அவளுக்குக் குழந்தை பிறக்கும் என்று யார் சொல்ல முடியும்? பகவான் கிருபை இருந்தால் பட்ட மரத்தில் கூட பழம் தோன்ற முடியும்."

நான் கேட்டுக் கொண்டிருந்தேன். நடு நடுவே எனக்குத் தோன்றியதைக் கூறிக் கொண்டிருந்தேன். நெற்றியில் பெரிதாகக் குங்குமத்தை இட்டுக் கொண்டு உருவ அழகு இல்லாதிருந்த அந்த ஸ்திரீ பேசிக் கொண்டே இருந்தாள். கணவனுக்குச் சரியாக வயல் வேலை செய்யும் இந்த ஸ்திரீ, மாட்டுக்கு இணையாக நின்று ஏரி இழுக்கத் தயங்காத நெஞ்சுறுதி படைத்த இந்த ஸ்திரீ, கணவ னுடைய சீர் கெட்ட நடத்தையால் எப்படிப்பட்ட சங்கடத்தில் சிக்கிக் கொண்டு மனம் கலங்கிப் போயிருந்தாள்! அந்த அஞ்ஜியினு டைய சிண்டைப் பிடித்து அவளை வெளியே தள்ள இவளுக்கு எவ்வளவு நேரம் பிடிக்கும்! ஆனால் அப்படி எதுவும் செய்யாமல்

இந்த ஸ்திரீ ஒரு பள்ளி ஆசிரியனின் எதிரே உட்கார்ந்து புலம்பிக் கொண்டிருந்தாள். அவளுடைய கண்களில் நீர் பொங்கி நின்றது. நாசி விளிம்புகளும் உதடுகளும் துடித்துத் கொண்டிருந்தன. என் மனத்தில் என்ன எண்ணங்கள் எழுந்தனவோ அவையே அவள் மனத்திலும் எழுந்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை. அஞ்ஜி பேரில் குற்றமில்லை. அவள் பருவமெய்திவிட்ட துடியான பெண். நல்லது கெட்டதை ஆராயும் மனப்பக்குவம் அவளுக்கு இருக்க முடியாது. எவ்வளவுதான் சொன்னாலும் ஷேகூபா அவளால் கவரப்பட்டது இயற்கைதான் என்பதையும் மறுக்க முடியாது. இந்தத் தர்மசங்கட மான விஷயத்தில் பலப் பிரயோகம் பயனற்றது என்பது இந்த ஸ்திரீக்குத் தெரிந்தது தான். அப்படி இல்லாவிட்டால் இவள் ஓர் அந்நியனிடம் இப்படி மனம் திறந்து பேசியிருக்க மாட்டாள்.

''ஷேகூபாவின் நடத்தை சரியில்லை தான். அவனுக்குப் புத்தி சொல்லித் திருத்த வேண்டும்...'' என்று நான் திரும்பத்திரும்பக் கூறிக் கொண்டிருந்தேன்.

கடைசியில் ஷேகூவின் மனைவி கூறினாள் : ''வாத்தியாரய்யா, நீங்கள் இந்தக் கிராமத்தில் அறிவாளியான மனிதர், மேலிடத்தில் எல்லாம் கூட உங்களுக்குச் செல்வாக்கு இருக்கிறது. நீங்கள் தான் அவரிடம் கண்டித்துச் சொல்ல வேண்டும். ஏதாவது நல்ல பலன் ஏற்படுவதாயிருந்தால் நீங்கள் சொல்லித் தான் ஏற்பட முடியும்.''

''ஆனால் இது உங்கள் வீட்டு விஷயமாயிற்றே அம்மணி. நான் ஏதாவது சொல்லப் போக, அவர், ''நீ யார் என்னைக் கேட்பதற்கு? என்று பதிலுக்குக் கேட்டால், என் மரியாதை கெட்டுப் போகுமே!'' என்று நான் கூறியதும் அவள் கைகளை நெரித்தவாறு, ''ஹூம்! அவர் என்ன கேட்பது? கைக்கு விலங்கு விழுந்து விடும் என்று அவருக்கு நன்றாகத் தெரியுமே!'' என்றாள்.

இவ்வாறு பேச்சு நடந்து கொண்டிருந்த போதே பள்ளிக்கூடத் தில் மணி அடிக்கும் சத்தம் கேட்டது. ஆயபூ, சதா முதலி யவர்கள் வர ஆரம்பித்ததும் ஷேகூவின் மனைவி எழுந்து என்னிடம் விடை பெற்றுக் கொண்டு சென்று விட்டாள்.

அவள் கொண்டு வந்து போட்ட வேர்க்கடலைக் குவியல் இன்னும் அப்படியே இருந்தது. அதைப் பார்த்து விட்டு ஆயபூ, ''வாத்தியாரய்யா, ஆயா வேர்க்கடலை கொண்டு வந்து கொடுத்ததா?'' என்றான்.

''ஆமாம், ஏன் கேட்கிறாய்?''

''ஒன்றுமில்லே, இன்று வரை ஒரு நாளும் வந்ததில்லேயே, இன்று எதற்கு வந்தாள் என்று யோசித்தேன்.''

ஆயபூ இவ்வளவுதான் சொன்ஞன். ஆனல் அவன் என்ன சொல்ல விரும்பிஞன் என்று நான் புரிந்து கொண்டேன். அவன் வேர்க்கடலேயை அள்ளி உள்ளே வைத்துவிட்டுக் கதவை இழுத்துப் பூட்டியதும் நான் பள்ளிக்கூடத்துக்குச் சென்றேன். ஒரு வேளே ஆயபூவுக்கு ஒன்றுமே 'தெரியாதிருக்கலாம் என்றுகூடத் தோன்றி யது. அவன் சாதாரணமாகச் சொல்லியிருக்கலாம், அதை நான் விபரீதமாக ஏன் எடுத்துக் கொள்ள வேண்டும்?

இதன் பிறகு, போகிற வருகிற பாதையில் இரண்டு மூன்று தடவை ஷேகூ எதிர்ப்பட்டான். ஆனல் எப்போதும் போல்அவன் என்னேப் பார்த்துச் சிரிப்பதில்லே. ''என்ன தகராறு, வாத்தியா ரய்யா?'' என்று கேட்கக்கூட இல்லே. தூரத்தில் நான் வருவதைப் பார்த்ததுமே தலேயைத் தொங்கப் போட்டுக் கொண்டு அவன் வேகமாக என்னேக் கடந்து சென்று கொண்டிருந்தான். நான் என் மனத்தில் தீர்மானம் செய்து கொண்ட பிறகும் கூட, அவனுடைய இந்த விபரீதமான நடவடிக்கையால் அஞ்ஜியைப் பற்றி அவனிடம் ஏதேனும் கேட்பதற்கு எனக்குத் துணிச்சல் உண்டாகவில்லே. இதன் மத்தியில் அஞ்ஜி-ஷேகூடபா இருவரைப் பற்றியும் கிராமத்தில் கச முசப்பு அதிகரித்து விட்டது. தினந்தோறும் இருவரும் ஒன்ருகவே ஆடு மேய்ப்பதற்குச் செல்லுகிருர்கள்; தெருவில் நடக்கும்போது கூட அஞ்ஜி ஷேகூவுடன் ஒட்டிக் கொண்டு தான் நடக்கிருள்— என்றெல்லாம் கிராமத்தார் பேசிக் கொண்டார்கள். 'இன்று அவ்விரு வரையும் தொலேவில் வாய்க்கால் கரை ஓரமாக உள்ள மரத்தடியில் பார்த்தேன்; 'நேற்று இரண்டு பேரும் மாவலி அம்மனின் கோயி லுக்குச் சென்று சபதம் செய்து கொண்டார்கள்; 'அஞ்ஜி மாவலி அம்மனின் ரவிக்கை பேரில் ஆணேயிட்டு ஷேகூவுக்குத் துரோகம் செய்வதில்லே என்று சத்தியம் செய்தாள்; 'முந்நா நாள் ஷேகூ ஆட்டை விற்று அஞ்ஜிக்குக் காப்புப் பண்ணுவதற்குக் கொடுத்திருக் கிருன்'—இவ்வாறு ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாகப் பேசினர். ஷேகூபாவின் இந்தக் காதல் விவகாரம் இளேஞர்களுடைய நகைப் புக்கும் கேலிக்கும் உரிய விஷயமாகியிருந்தது. விவேகமுள்ளவர் களிடையே அதைப்பற்றி அருவருப்பும் ஆட்சேபமும் பரவியிருந்தன.

பிறகு ஒரு நாள் ஷேகூபாவுக்கும் அவன் மனேவிக்கும் பலத்த சண்டை நடந்து விட்டது. என்ன நடந்தது என்று யாருக்கும் தெரி

யாது. ஏனென்றால் இருவரும் நடுநிசியில் தங்கள் வீட்டுக்குள்ளேயே சண்டை போட்டுக் கொண்டார்கள். மறு நாள் காலையிலிருந்து ஷேகூவின் வீட்டுக்காரி கிராமத்திலேயே தனியாக இருக்க ஆரம் பித்தாள். துலாக் கோனின் வீட்டையடுத்திருந்த கொட்டில் காலி யாக இருந்தது. அதில் ஓர் அடுப்புப் போட்டுக் கொண்டு அவள் இருக்க ஆரம்பித்தாள். பயிர் வேலையில் சிறிதும் கவனம் செலுத்தா மல் கூலி வேலை செய்து ஜீவனம் செய்யத் தொடங்கினாள். ஷேகூ பாவின் பேச்சை எடுப்பதையே நிறுத்தி விட்டாள்.

அஞ்ஜியும் ஷேகூவும் ஒன்றாக இருந்து வந்தனர். ஷேகூ கலி யாணத்துக்கு ஏற்பாடு செய்வதில் முனைந்தான். ஆடுகளை விற்றுக் கொஞ்சம் ரொக்கப் பணம் சேர்த்துக் கொண்டான். உணவுத் தானியங்களும் சேகரம் செய்து கொண்டான்.

ஷேகூவின் வயல் கிராமத்திலிருந்து கொஞ்ச தூரத்தில் இருந்தது. அவனுடைய வயலை அடுத்தாற்போல் உள்ள நன்செய் நிலம் பன்கர்வாடிக்குப் பக்கத்துக் கிராமமான 'ஏடசி' கிராமத்தைச் சேர்ந்தது. அந்த நிலத்தில் உரத்துக்காக ஆடுகளைக் கொண்டு வந்து அடைத்திருந்தார்கள். நிலத்துச் சொந்தக்காரன் வேறொரு கிராமத்திலிருந்து ஆட்டுக்காரர்களை வரவழைத்திருந்தான. இளைஞர்களான அந்த இரண்டு மூன்று ஆட்டுக்காரர்கள் இரவு முழுதும் கணப்பை மூட்டிக் கொண்டு பஜனைப் பாட்டுக்களைப் பாடியவாறு காவல் காத்துக் கொண்டிருந்தார்கள். தாளம் போட்டுக் கொண்டு அவர்கள் பாடிய பாட்டுக்களை அஞ்ஜி தன் வயலில் இருந்தவாறு கேட்டுக் கொண்டிருந்தாள்.

ஒருநாள் நட்ட நடுப்பகலில் அந்த ஆட்டுக்காரர்களில் ஒருவன் இரண்டு வயல்களுக்கும் பொதுவான வரப்பில் வளர்ந்திருந்த வேலிகாத்தான் மரத்தின்மேல் ஏறிக் கிளைகளை ஒடித்துப்போட்டு மரத்தை உலுக்க ஆரம்பித்தான். அவனுடைய ஆடுகள் மரத்தின் கீழே வந்து கூடி முட்களை விட்டுவிட்டு இலைகளைச் சாப்பிடத் தொடங்கின. பச்சையும் வெள்ளையுமாக உதிர்ந்திருந்த காய்களைச் சாப்பிடத் தொடங்கின.

இதைப் பார்த்துவிட்டு அஞ்ஜி வேகமாக அந்த இடத்துக்கு வந்தாள். மரத்தினடியில் நின்று மரத்தின்மேல் ஏறியிருந்த ஆளைப் பார்த்து அதட்டினாள்: ''யாரய்யா, மரத்தை இப்படி உலுக்குவது ?''

மேலே உட்கார்ந்திருந்த ஆட்டுக்கார வாலிபன் கீழே பார்த்து, ''ஏண்டி, உனக்கு என்னடி ஆட்சேபணை அதிலெ?'' என்று கேட்டான்.

எடுத்த எடுப்பிலேயே அந்த இளைஞன் தன்னை 'ஏண்டி?' என்று விளித்ததைக் கேட்டு அஞ்ஜி புளகாங்கிதமடைந்தாள். மரத்திலிருந்து மஞ்சள் நிறமுள்ள சிறிய மலர்கள் அவளுடைய உடல் மீது பொல பொலவென்று உதிர்ந்தன. மறுகணம் ஆட்டுக்கார இளைஞன் மரத்திலிருந்து குதித்து அவளெதிரே நின்றான். வாலிப மிடுக்கும் எடுப்பான தோற்றமும் கொண்டு கன்னங் கறேலென்றிருந்த அந்த ஆட்டுக்காரன் நேருக்கு நேர் நின்று அவளைப் பார்த்த போது அஞ்ஜியின் விழிகள் அவன் விழிகளைச் சந்திக்கத் துணிவில்லாமல் படபடத்தன. அவளுடைய நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது. அக்கம் பக்கத்தில் யாரும் இருக்கவில்லை. மரத்தின் நிழலில் ஆடுகள் கீழே விழுந்திருந்த கொப்புகளை மேய்ந்து கொண்டிருந்தன. அந்தக் கட்டுமஸ்தான இளைஞன் புன்சிரிப்புடன் அஞ்ஜியின் எதிரே நின்றிருந்தான். பிறகு அவன், ''விருந்தாளிகளிடம் இப்படியா அதட்டிப் பேசுவது? இந்த வயல் உன்னுடையதா?'' என்று கேட்டான்.

விழிகளைத் தாழ்த்தியவாறே அஞ்ஜி, ''என்னுடைய வயல் இல்லாதிருந்தால் சொல்லுவேனா?'' என்றாள்.

''தளிர் விட்டிருந்த மரத்தைப் பார்த்ததும் உலுக்க வேண்டுமென்று ஆசையாயிருந்தது'' என்று கூறிய ஆட்டுக்கார வாலிபன் துணிச்சலாக அவளுடைய கையைப் பிடித்துக்கொண்டான். அஞ்ஜி கத்தவில்லை, கூச்சலிடவில்லை. அவள் சிறிது திமிறினாள். ஆனால் ஆட்டுக்கார இளைஞனின் பிடியிலிருந்து தன் கரத்தை விடுவித்துக் கொள்ள அவளால் முடியவில்லை.

உடனே அவள் அவன் விழிகளில் தன் விழிகளைப் பதித்தவாறு கெஞ்சும் குரலில், ''கையை விட்டு விடேன்! என் வளையல் உடைந்து போயிற்று!'' என்றாள்.

## 19

பிறகு மாவலி அம்மனின் திருவிழா வந்தது. பன்கர்வாடியில் இந்தத் திருவிழா ஒவ்வோர் ஆண்டும் நடைபெற்று வந்தது. கிரா

மத்திலிருந்து சுமார் ஒரு மைல் தூரத்தில் ஒரு சிறிய மேடு இருந்தது. அதன் உச்சியில் சாதாரணமாக வயல்களில் அமைப்பது போன்ற சிறிய குடில் ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அதில்தான் மாவலி அம்மன் அமர்ந்திருந்தாள். நான்கு புறமும் பாறைகள் இருந்தன. ஓரடி இரண்டடி உயரமுள்ள தாழம் புதர்கள், காய்ந்துபோன இரண் டொரு கள்ளி மரங்கள் இவை தவிர அங்கு வேறொன்றும் இல்லை. ஆடு மேய்ப்பவர்களின் வேண்டுதலை நிறைவேற்றும் தேவி இவள் தான். இத்தனை நாளும் அவள் அந்தக் குடிசையில் தான் குடி கொண்டிருந்தாள். கிராம மக்கள் அவளுக்கு ஒரு சிறிய கோயில் ஏன் அமைக்கவில்லை? அம்மாதிரி முயற்சி நடக்கத்தான் நடந்தது. ஆனால் பூசாரியின் கனவில் தேவியே தோன்றி, ''கோயில் கட்ட வேண்டாம். நான் இருக்கிறபடியே ஆனந்தமாகத்தான் இருக்கி றேன்'' என்று கூறிவிட்டாள்.

நேர்த்தியான உடைகள் அணிந்து கிராமத்து மக்கள் எல்லோ ரும் அந்த ஜனநடமாட்டமற்ற இடத்தில் ஒன்று திரண்டனர். அக் கம் பக்கத்துக் கிராமங்களிலிருந்தும் சில பக்திமான்கள் வந்தார்கள். நூறு நூற்றைம்பதுபேர் கூடிவிட்டார்கள். பூசாரி பூஜையை நடத் தினர். வந்திருந்தவர்களுக்குப் பிரசாதக் கும்குமம் இட்டு விட்டார்.

கிராமத்தோடு மல்லுக்கு நின்ற பாலாக் கோனனும் திருவிழா வுக்கு வந்திருந்தான். மனைவி, குழந்தை குட்டிகளுடன் வந்திருந் தான். அவனைப் பார்த்ததுமே கிராமத்து மக்களிடையே கசமுச வென்று பேச்சுக் கிளம்பியது. ''அவனைத்தடுத்து நிறுத்து! தேவி அருகே அவனைப் போக விடாதே!'' என்று இரைச்சல் போட்டனர் எல்லோரும். ஆனால் யாரையும் லட்சியம் செய்யாமல் பாலாக் கோனன் தேவி அருகே வந்து தேவியின் காலில் விழுந்து வணங்கி ஞன். பின்பு பிரசாதக் குங்குமம் இட்டுவிடச் சொல்லிப் பூசாரி எதிரே தன் நெற்றியைக் காட்டினன். அப்போது பூசாரி, ''நீதான் கிராம சமுதாயத்தை மதிப்பதில்லையே! நான் உனக்குப் பிரசாதக் குங்குமம் இட்டுவிட முடியாது!'' என்று கூறி மறுத்துவிட்டான்,

ஆஜானுபாகுவாய் உடல் வலிவும் நெஞ்சுறுதியும் படைத்த பாலா, இப்போது பூசாரி பிரசாதம் வழங்க மறுத்தவுடன் அப்படியே சோர்ந்து போய்விட்டான். பேயறைந்தமாதிரி அவன் முகம் வெளுத்துப் போயிற்று. வாயடைத்துப்போய் நின்ருன். பிறகு மக்கள் பக்கம் திரும்பி நின்று கொண்டான். கடந்த பல மாதங் களாக அவன் நிறையத் துன்பங்களை அனுபவித்திருந்தான். கிரா

மத்தைச் சேர்ந்த யாரும் அவனிடம் ஒரு வார்த்தைகூடப் பேசுவது கிடையாது. குஷ்டரோகியை ஒதுக்கி வைப்பது போல் கிராமத்தவர் அவனை ஒதுக்கி வைத்திருந்தனர். இன்று அந்த மறியல் கட்டுப் பாடு உச்சநிலையை எட்டிவிட்டது. தேவியின் பிரசாதம்கூட அவ னுக்குக் கிடைக்கவில்லை. ஜனங்களுடைய கட்டுப்பாட்டுக்கும் மறி யலுக்கும் பணியாத பாலாக்கோனன் இந்த அலட்சியத்தைத் தாங்க முடியாமல் இடிந்து போனான். செருகியிருந்த வேஷ்டியின் கச்சத்தை அவன் 'சர்'ரென்று வெளியே இழுத்து கிராமத்தார் எதிரில் விரித்துப் பிடித்தவாறு உரத்த குரலில் கூறினான்: ''என்னு டைய கிராம சமுதாயத்தின் எதிரே என் முந்தானையை விரித்து என் தவறுகளை எல்லாம் மன்னிக்கும்படி மன்றாடிக் கேட்டுக் கொள் கிறேன். என்னை உங்களுடன் சேர்த்துக் கொண்டு எனக்குக் குங்கு மப் பிரசாதம் வழங்குங்கள். நீங்கள் என் மரத்தை எடுத்துக் கொள் ளுங்கள்; வீட்டை எடுத்துக்கொள்ளுங்கள்; உயிரை வேண்டுமானா லும் எடுத்துக் கொள்ளுங்கள். ஆனால் இப்படி என்னை விலக்கி ஒதுக்காதீர்கள்!''

பாலாக்கோனனுடைய திண்மையான குரல் நடுங்க ஆரம் பித்தது. அவனுடைய கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாகப் பெருகியது. அவ்வளவு பெரிய கூட்டத்தில் கண நேரத்துக்கு நிச்சப்தம் குடிகொண்டது.

அப்போது ராமாக் கோனனின் கிழத் தந்தையான காகூபா கிராமத்தின் சார்பில் பேசினான்: '' அடே, குழந்தை மடியில் ஈரமாக்கிவிட்டால் தொடையையே வெட்டி எறிவார்களா? குங்குமப் பிரசாதம் அவனுக்கும் வழங்குங்கள்!''

ஜனங்கள் கசமுசவென்று பேசிக் கொண்டனர். எல்லோரும் ஒருங்கே கூறினர்: '' இட்டுவிடுங்கள்!''

அப்போது பூசாரி எழுந்து கிராமத்தார் எதிரே முந்தானையை ஏந்தி நின்ற பாலாக் கோனனின் நெற்றியில் குங்குமத்தை இட்ட வாறு, '' மாவலி அம்மனுக்கு ஜே!'' என்று கோஷமிட்டார்.

ஜனங்களும் ஜயகோஷம் இட்டபடியே குங்குமத்தை வாரி இறைத்தார்கள். பிடிப் பிடியாக அள்ளிக் காற்றில் பறக்க விட்டார் கள். சர்க்கரைவள்ளிக் கிழங்குகளையும் பிற கிழங்குகளையும் வாரி இறைத்தார்கள். இந்தப் பிரசாதங்களை எடுத்துக் கொள்வதற்காகக் கூட்டம் கூட்டமாக மக்கள் கீழே குனிந்தார்கள், இடித்துத் தள்ளிக் கொண்டு இரைச்சலும் கூச்சலும் போட்டவாறு சிதறிய பிரசாதங் களைத் தேடினார்கள்.

வாத்தியக்காரர்கள் தம்பட்டத்தை அடித்தார்கள், ஷனாய் வாத்தியத்தை ஊதினார்கள். ஒவ்வோர் ஆண்டும் நிகழ்வதுபோல் துலாக் கோனன் மீது தேவியின் ஆவேசம் வந்துவிட்டது. 'ஹா ! ஹூ ' என்று கத்திக்கொண்டு குதித்தான். கைகால்களை முறுக்கிக் கொண்டான். வாத்தியக்காரர்கள் துரித கதியில் வாத்தியங்களை முழக்கியதும் துலாக் கோனன் இன்னும் அதிகமாக ஆடினான். தன்மேல் போர்த்தியிருந்த கம்பளியைத் தூக்கி எறிந்தான். தலையில் இருந்த தலைப்பாகையை எடுத்தெறிந்தான். அரை நிர்வாண நிலையில் 'ஹா ஹூ ' என்று கூவினான். பூசாரி அவனுடைய நெற்றியில் குங்குமத்தை அப்பினார். மைக்கறுப்பான நெற்றியில் அவர் அப்பிய சிவப்புக் குங்குமம் வியர்வையில் கரைந்து மூக்குவழியே வழிந்தது. துலாக்கோனன் தொடர்ந்து ஆட்டம் போட்டான்.

''தேவி வந்து விட்டாள்! தேவி வந்துவிட்டாள்!'' என்று கூறியவாறு எல்லோரும் அவனைச் சூழ்ந்து கொண்டனர். பிறகு ஷேகூ கேட்டான்: ''தாயே, இந்த வருஷம் மழை – தண்ணீர் இல்லையே. என்ன குற்றம் நேர்ந்தது ?''

'தாயார்' கோஷமிட்டவாறு கூறினாள்: ''நிறையப் பாபம் நேர்ந்திருக்கிறதடா! கேவலமான செயல்கள் அதிகரித்துவிட்டன! அதனால்தான் மழை பெய்யவில்லை !''

''ஆனால் தாயே, மழைபெய்யாவிட்டால் ஆடுகள் எதைச் சாப்பிடும் ? நாங்கள் எப்படி உயிர் வாழ்வோம் ?''

கண்களை மூடியவாறே 'தேவி' பேசினாள்: ''என்னுடைய உற்சவத்தைச் சரியாக நடத்துங்கள். முறைப்படி எனக்குத் தேங்காய் உடைத்து நைவேத்தியம் செய்யுங்கள். எல்லாம் சரியாகிவிடும் ?''

''மழை பெய்யுமா ?''

''ஆமாம், பெய்யும் !''

''ஆனால் தாயே, எப்போது பெய்யும்? மிருகசீரிஷ நட்சத்திரம் கழிந்துவிட்டது, உலகமெல்லாம் மழை பெய்திருக்கிறது. ஆனால் எங்கள் கிராமத்தில் கனத்த மேகம்கூடச் சூழவில்லையே !''

''அடே ! உங்களுக்குப் பாடம் கற்பிக்க வேண்டுமென்று தான் இப்படி ஆகி இருக்கிறது. ஆனால் இப்போ மழை பெய்யும். இந்த நட்சத்திரத்திலேயே பெய்யும்.''

ஷேகூ தன் கன்னங்களில் அறைந்துகொண்டவாறு கூறினன்: "தாயே, எங்கள் குற்றங்களை யெல்லாம் மன்னித்து விடு. உன்னுடைய உற்சவத்தைச் சிறப்பாக நடத்துகிறோம். நைவேத்தியங்களெல்லாம் நிறையச் செய்கிறோம். எல்லாம் எங்களுக்குச் சம்மதம், சம்மதம்!" — இவ்வாறு கூறிய ஷேகூ துலாக் கோனுனின் கால்களில் தலையை வைத்து நமஸ்காரம் செய்தான்.

இதன் பிறகு தேவியின் ஆவேசம் மலையேறிவிடவே, துலாக் கோனுன் 'தொப்பென்று' தரையில் விழுந்தான்.

பிறகு உற்சவம் நடந்தது. ஒவ்வொரு வருஷமும் செய்வது போலவே தேவிக்கு ஆடு பலி கொடுக்கப்பட்டது. கசாப்புக்கார ஆயபூ கத்தியைப் பாய்ச்சினுன். ஷேகூ தேவிக்கு ரத்தத்தைப் படைத்த பிறகு அறுத்த ஆட்டை நைவேத்தியம் செய்து துண்டு போட ஆரம்பித்தனர். சுற்றிலும் ஜனங்கள் சூழ்ந்து கொண்டனர். குழந்தைகளும் பெரியவர்களுமாகக் கூட்டம் கூடி வேடிக்கை பார்க்க ஆரம்பித்தனர். அப்போது ஆயபூ எல்லோரையும் அதட்டிக் கூறினுன்: "அவரவர் வீட்டுக்குப் போங்கள். ரொட்டி சுட்டு எடுத்துக் கொண்டு விருந்து சாப்பிட வாருங்கள்!"

"எங்கள் வீட்டுக்குப் போய் ரொட்டி எடுத்துக் கொண்டு, சாப்பிடுவதற்கு இங்கே வரவேண்டுமா! ஆமாமாம், கறிக்குழம்பு இங்கே கிடைக்குமே! பன்கர்வாடியால் ஆடுதான் தர முடியும். சோளம் எங்கிருந்து கொண்டு வருவது?"

மெள்ள மெள்ள எல்லோரும் சென்று விட்டனர். சில குறிப்பிட்ட மனிதர்கள் எஞ்சி நின்றனர். அவர்கள் நீண்ட குழியைத் தோண்டி அதில் நெருப்பு மூட்டினர். அதன்மீது அண்டாவை வைத்தார்கள். இரண்டு மூன்று ஆடுகளின் மாமிசம் அண்டாவில் வேக ஆரம்பித்தது. அதன் மணம் எங்கும் நிறைந்தது.

நிலவு தோன்றியது. தீவட்டிகள் கொளுத்தப்பட்டன. செம்புகளையும், சிறிய குழிவான தட்டுக்களையும், ரொட்டிகளையும் எடுத்துக் கொண்டு ஆட்டுக்காரர்கள் வந்தார்கள். வரிசை வரிசையாக உட்கார்ந்தார்கள். முட்டுக்கொடுத்து வைக்கப்பட்ட தட்டுக்களில் சுடச்சுட, மிகுந்த காரமுள்ள கறிக்குழம்பு பரிமாறப்பட்டது. 'தேவிக்கு ஜே!' என்ற கோஷம் எழுந்தது. எல்லோரும் கறியையும் ரொட்டியையும் சாப்பிடப் பாய்ந்தனர். மிகுந்த சத்தத்துடன் அள்ளி அள்ளிச் சாப்பிட்டனர். அந்தக் காரமான கறிக்குழம்பினுல் அவர்கள் வாயெல்லாம் எரிந்தது, மூக்கிலிருந்து தண்ணீர் கொட்ட ஆரம்பித்தது.

# 20

மாவலி அம்மன் அபயமளித்தாளே ஒழிய, ஒவ்வொரு நட்சத்திரமாகக் கழிந்து சென்றும் பன்கர்வாடியில் ஒரு சொட்டு மழைகூட விழவில்லை. கொதித்துப்போன வயல்கள் குளிர வில்லை. மரம் செடிகள் ஒரேயடியாக உலர்ந்து போயின. பசித்த ஆடுகள் வயல்களிலும் மேட்டு நிலங்களிலும் ஒரு துரும்பு மிச்சம் வைக்காமல் மேய்ந்து விட்டன. புழுதி சூடேறிப் போயிற்று. சுழற்காற்று அடிக்க ஆரம்பித்தது. கிணறுகளில் தண்ணீர் வற்றிப் போயிற்று. ஓடை வறண்டு விட்டது. சேற்றினால் கலங்கிய தண்ணீரைச் சுரண்டிச் சுரண்டி எடுத்தும் கூடக் குடம் நிரம்பவில்லை. காலையிலும் பிற்பகலிலும் மக்கள் தண்ணீருக்காக ஓடையில் கூட்டம் கூட ஆரம்பித்தனர். மாலையாவதற்குள் குருவிகளுக்குக் கூடக் குடிக்கத் தண்ணீர் மிச்சம் இருப்பதில்லை. இரவு முழுவதும் கசிந்து சிறிதளவு தண்ணீர் சேர்ந்தது. அதை நிரப்பிக் கொள்வதற்காக ஸ்திரீகள் அதிகாலையிலேயே எழுந்து வரத் தொடங்கினர். காகம் கண் விழிப்பதற்கு முன்னால் மனிதர்கள் எழுந்து தண்ணீருக்காகச் சண்டையிட ஆரம்பித்தனர்.

கால்நடைகள் எலும்பும் தோலுமாக ஆயின. அவற்றின் விலா எலும்புகள் புடைத்துத் தெரிந்தன. உடம்பில் கரடியைப் போல் ரோமம் அதிகமாக வளர்ந்து விட்டதால் அவை அழுக்காகத் தோற்றமளித்தன. ஆடுகளோ ஏற்கனவே ரோமம் வெட்டப் பட்டு விட்டதால் கூழையாகி யிருந்தவை இப்போது ஒரேயடியாக மெலிந்து போயின. அவற்றின் கொழுப்பு முற்றிலும் வற்றிப் போய் விட்டது. கூரையிலிருந்து பழைய மக்கிப் போன புல்லையும் கோரையையும் உருவி எடுத்துக் கால்நடைகளுக்குப் போட ஆரம்பித்தனர். தண்ணீருக்காக ஆடுகளை நெடுந்தூரம் ஓட்டிச் செல்லவேண்டியிருந்தது. குருவிகள், காகங்கள், காடை கவுதாரி கள் எதுவுமே கண்ணுக்குத் தென்படாமல் மறைந்துபோயின. வயல் களிலிருந்து பசியால் தவித்த எலிகள் கிராமத்துக்குள் வந்து ரகளை செய்ய ஆரம்பித்தன. அவை ஆட்டுக்காரர்களின் கம்பளிகளைக் கடித்துக் குதறின. மாவின் வாசனையால் கவரப்பட்டு முறங்களைக் கடித்துப் போட்டன. கூடைகளைக் கத்தரித்து எறிந்தன.

மக்களின் முகங்கள் ஒளியிழந்து சாம்பிப் போயின. கண்கள் பஞ்சடைந்து தோன்றின. வீட்டில் சேகரம் செய்து வைத்திருந்த தானியம் குறையலாயிற்று. அவரவர் ஒரு ரூபாய் இரண்டு ரூபாய் எடுத்துக்கொண்டு கடைத்தெருவுக்குச் செல்லத் தொடங்கினர். கெஞ்சிக் கேட்டு அதிக விலைகொடுத்து உணவுத் தானியங்களை வாங்கிவந்து சாப்பிட்டனர். அன்றுட உழைப்பை நம்பி ஜீவனம் செய்துவந்தவர்கள் பட்டினி கிடந்தார்கள். ராமோஷி இனத்தவரின் நிலைமை மிகுந்த மோசமாகிவிட்டது. அவர்கள் வீடுகளில் சேர்ந்தாற்போல் இரண்டு மூன்று நாட்களுக்கு அடுப்பே எரியாமலிருந்தது. விளையாட்டுக்கூடத்தில் விளையாட வந்துகொண்டிருந்த பிள்ளைகள் இப்போது உணவு தேடித் தொலைதூரம் சென்றுகொண்டிருந்தனர். பள்ளிக்கூடத்துக்குப் படிக்க வந்துகொண்டிருந்த குழந்தைகள் உணவு வேண்டிப் பக்கத்துக் கிராமங்களில் சுற்றத் தொடங்கினர். விளையாட்டுக்கூடம் வெறும் கூடமாயிற்று, பள்ளிக்கூடம் பாழடைந்து தோன்றியது. அன்ன விசாரத்தால் அனைவரும் ஆலாய்ப் பறந்து கொண்டிருந்தனர். மாவட்டம் முழுவதுமே பஞ்சத்தில் அடிபட்டுக் கொண்டிருந்தது. அந்தப் பிரதேசத்து இயற்கையின் சாபக் கேடான பஞ்சம் வந்துவிட்டது.

மக்கள் கலவரமடைந்தனர். ராமாக் கோனுனின் முகம் கறுத்துப் போயிற்று. தினந்தோறும் பள்ளிக்கூடத்துக்கு வந்து போகும் வழக்கம் தவறலாயிற்று. மூன்று நான்கு நாட்கள் அவன் வராமலே கழிந்தன. வந்தாலும் அவனுடைய பேச்சில் பஞ்சத்தைத் தவிர வேறு விஷயமே இருப்பதில்லை.

"வாத்தியாரய்யா, இதைப்பற்றி ஒரு கதை சொல்வார்கள். ஒருதடவை ராமலக்ஷ்மணர்கள் பகவான் பெயரை ஜபித்தவாறு சுற்ற ஆரம்பித்தார்கள். சுற்றிக் கொண்டே நம்முடைய பகுதிக்கு வந்துவிட்டார்கள். நடுப்பகல் ஆகிவிட்டதால் இருவரும் ராமகட்டத்தில் நிழல் இருப்பதைப் பார்த்துவிட்டு அங்கே சாப்பாடு சாப்பிடுவதற்காக உட்கார்ந்தார்கள். உடனே மழை வந்துவிட்டது. பலத்த மழை. சாப்பாட்டில் தண்ணீர் விழ ஆரம்பித்தது. ராமருக்குக் கோபம் வந்துவிட்டது. உடனே ஒரு அம்பை எய்து அவ்வளவு மழையையும் உயர்ந்த மலைச்சரிவுக்கு விரட்டிவிட்டார். அன்றிலிருந்து இந்தப் பிரதேசத்துக்கு வராமலிருக்க ஆரம்பித்த மழை இன்னும் வராமலே இருக்கிறதாம். நீங்களே பாருங்கள், ராமகட்டத்தில மழை பெய்கிறது. ஆனுல் நம்முடைய தலைக்கு

மேலே கறுத்த மேகங்கள் கடந்து செல்வதோடு சரி, அவ்வளவும் போய் மறுபடியும் மழையாய்ப் பெய்வது அந்த உயர்ந்த மலைப் பகுதியில்தான்!''

அவன் கூறியது உண்மைதான். சரியாக இந்த நடுவாந்தரப் பிரதேசம்தான் மழையின் கருணைப் பார்வை படாமல் தவறிப் போய்க் கொண்டிருந்தது.

தீனி கிடைக்காமல் ஆடுகள் மெலிந்து போயிருந்தன. வலிவற்றுப் போன அவற்றின் உடல்களில் நோய்கள் தொற்றிக் கொண்டன. அவற்றுக்கும் பெரியம்மை கண்டுவிட்டது. ஆடுகளின் முகங்களிலெல்லாம் அம்மை விளையாடியிருந்தது. காய்ச்சல் காரணமாக அவற்றால் எழுந்திருக்கக்கூட முடியவில்லை. தீனமான கண்களுடன் அவை இங்குமங்கும் பார்த்தவாறு அப்படியே உட்கார்ந்திருந்தன சிலவற்றுக்கு ஜுன்னி கண்டுவிட்டது. வெறிபிடித்தாற் போல் அவை தம்மைத்தாமே சுற்றிச் சுற்றித் தரையில் விழுந்து உயிர் துறந்தன. சிலவற்றுக்குக் கால் முடமாகிவிட்டது. நொண்டிக் காலை இழுத்தவாறு அவை நடக்க ஆரம்பித்தன. ஆட்டைப் பருந்து அடித்துவிட்டது என்று ஜனங்கள் பேசிக் கொண்டார்கள். ஆட்டின் முதுகின்மேல் உட்கார்ந்த பருந்து, பறந்து செல்லும் போது இறக்கையால் அடித்துவிட்டது என்றும், அந்தக் காயத்தினுல்தான் ஆடு நொண்டியாகி விட்டதென்றும் பேசிக்கொண்டார்கள். சில ஆடுகளுக்கு மூக்கடைப்பான் நோய் கண்டது. மூக்கு ஒழுக ஆரம்பித்தது. காகங்கள் அவற்றின் மூக்குகளைக் கொத்திக் குதறின. ஆட்டுக்காரர்கள் கவண் வைத்து அடித்துக் காகங்களை விரட்டிக் கொண்டிருந்தனர். சிலவற்றின் கடைவாயிலிருந்து உமிழ் நீர் ஒழுகியவாறு இருந்தது. அவற்றின் கால்கள் அழுக ஆரம்பித்தன. அந்த ஆடுகள் நடக்க முடியாமல் திணறின. எதையும் முகர்ந்துகூடப் பார்க்காமலிருந்தன.

இந்த நோய்கள் எல்லாவற்றினுலும் ஆடுகள் அவ்வளவாக மடியவில்லை, ஆனுல் சில மந்தைகளில் காலரா நோய் கண்டு ஆடுகள் மளமளவென்று மாண்டு போயின.

பிராக்கோனுவின் மந்தையில் இந்த நோய் தொற்றிக் கொண்டது. பட்டியில் எங்கே பார்த்தாலும் அசுத்தம். ஆடுகளின் உடலெல்லாம் அந்த அசுத்தத்திலேயே புரண்டது. ஈக்கள் மொய்த்தவாறு இருந்தன. ஆடுகள் மளமளவென்று மடிய ஆரம்பித்தன. தினந்தோறும் பத்துப் பன்னிரண்டு ஆடுகள்

மாண்டு கிடந்தன. பாவம், அந்தச் சிறுவன் சதாதான் அவற்றை இழுத்துக்கொண்டு போய்க் கிராமத்துக்கு வெளியே போட்டுவிட்டு வந்துகொண்டிருந்தான். தோலின் விலை மிகவும் இறங்கிவிட்டது. அக்கம் பக்கத்திலுள்ள தோல் தொழிலாளர்கள் ஒரு தோலுக்கு நாலணா ஆறணா என்ற கணக்கில் விலை கொடுத்து வாங்கிக் கொண்டு போனார்கள். ஆரம்பத்தில் செத்துப் போன ஆடுகளை அப்படியே எடுத்துப் போய்க்கொண்டிருந்தார்கள், ஆனால் பிறகு அவர் களுக்கே அருவருப்பு வந்துவிட்டது. தோலுரித்த ஆடுகளின் உடல்கள் வயல்களில் அங்கங்கே அப்படியப்படியே கிடந்தன. எங்கெங்கிருந்தெல்லாமோ கழுகுகள் அங்குவந்து கூட ஆரம்பித்தன. கிராமத்து நாய்கள் முதலில் அந்தப் பறவைகளைத் துரத்துவதற் காகப் பாய்ந்தன, ஆனால் பிறகு பறவைகளும் நாய்களும் ஒன்றாகவே அந்த மாமிசத்தைப் புசிக்க ஆரம்பித்தன. கிராமத்தை அடுத்த ஆலமரத்தைக் கழுகுகள் தங்கள் பாசறையாக ஆக்கிக் கொண்டன. நாள் முழுவதும் ஆடுகளை உண்டுவிட்டு அந்தப் பறவைகள் மாலையில் ஆலமரத்துக் கிளைகளில் எச்சமிட்டு இட்டு எங்கும் சுண்ணாம்பு அடித்ததுபோல் ஆக்கிக் கொண்டிருந்தன.

ஏழெட்டு நாட்களுக்குள்ளேயே பிராக் கோனனின் இருநூறு ஆடுகளைக் கொண்ட மந்தையில் ஓர் ஆடுகூடப் பாக்கியில்லா மல் மாண்டு போயின. பிராக் கோனன் தன் விதியைத்தான் நொந்து கொண்டான். வேண்டாத தெய்வங்களை யெல்லாம் வேண்டிக் கொண்டான். அவனுடைய மனம் அமைதி இழந்து தவித்தது. பாவம் சதா, தன்னுடைய பிரியமான ஆடுகள் மரிப்ப தைப் பார்த்து அழுது புலம்பினன், ஆனால் நடப்பது நடந்தே தீர்ந்தது. பிராக் கோனன் நொடித்துப் போய்விட்டான். அவ னுடைய மந்தை ஒரேயடியாக நாசமாகிவிட்டது.

மக்கள் பட்டினியும் பசியுமாகத் தவித்துக் கொண்டிருந்தனர். இயன்ற வரையில் அவர்கள் கால்நடைகளுக்குத் தீவனத்தை விலை கொடுத்து வாங்கிப் போட்டார்கள். தங்களுடைய சாப்பாட்டைக் குறைத்துக் கொண்டு அவைகளுக்கு மாவும் தவிடுமாகக் கொடுத்தார் கள். ஆனால் நாளடைவில் சமாளிப்பது கஷ்டமாகி விட்டது. பசியால் மெலிந்த கால்நடைகள் தீவனத் தொட்டியருகே சோர்ந்து படுத்துப் பரிதாபமாகப் பார்ப்பதை அவர்களால் சகிக்க முடிய வில்லை.

ராமோஷி இனத்தவர் முன்பிருந்தே தாங்கள் செய்துவந்த சாராயம் காய்ச்சும் தொழிலை இன்னும் மும்முரமாகச் செய்யத் தொடங்கினர். ஆனால் சாராயத்தை வாங்குபவர் அரிதாகி விட்டனர். 'வாங்கி' கிராமத்துப் பெண்ணைக் கடத்திச் சென்றதிலிருந்து ஜகன்யா ராமோஷி பசியை மறப்பதற்காகச் சாராயம் குடிக்க ஆரம்பித்தான். கட்டுமஸ்தான அவனது உடல் நாளடைவில் கொழுப்பையெல்லாம் இழந்து காய்ந்து போயிற்று. துன்பம் தாங்க முடியாமல் அவன் தனியாளாகவே முப்பது முப்பத்தைந்து மைல் தூரம் கால்களைத் தேய்த்துக் கொண்டு நடந்து சென்று நேரே 'மஹூத்' கிராமத்தை அடைந்தான். அவனுக்கு முன்பே அவனைப் போன்ற எத்தனையோ பேர் அங்கே போய்ச் சேர்ந்திருந்தனர். அந்தக் கிராமத்து விவசாயிகள் அவர்களுக்குத் தங்கள் வயலில் வளர்ந்து போயிருந்த களைகளை எடுக்கும் வேலையைக் கொடுத்தனர். இவ்வாறு வந்தவர்கள் எப்போது கிளம்பிப் போய் விடுவார்கள் என்று ஒரு நிலையில்லாத காரணத்தால் மூன்று நாட்கள் கழித்து வேலை பூர்த்தியானதும் ஊதியத்தைக் கொடுப்பதாக விவசாயிகள் அவர்களுக்கு வாக்களித்திருந்தார்கள். ஜகன்யா ராமோஷி வேஷ்டியால் வயிற்றை இழுத்துக்கட்டிக்கொண்டு மூன்று நாட்களும் வேலை செய்தான். பசிக் கொடுமையைத் தாங்கிக் கொண்டு களையெடுக்கும் வேலையைச் செய்தவன், மூன்றாம் நாள் களைகள் நிறைந்த அந்த வயலிலேயே சுருண்டு விழுந்துவிட்டான். பிறகு அவன் எழுந்திருக்கவே இல்லை.

பசியால் எலும்பும் தோலுமாகியிருந்த ஒற்றை எருதை இழுத்துக் கொண்டு கிராமத்தை விட்டு வெளியே சென்றுகொண்டிருந்த ஷேகூவைப் பார்த்து நான் கேட்டேன்: "எங்கே புறப்டாய் ஷேகூபா?"

ஷேகூ சற்று நின்றான். "சமாளிக்க முடியவில்லை வாத்தியாரய்யா! சந்தையில் விற்றுவிடப் போகிறேன். போகிற இடத்தில் வயிறாரப் புல்லாவது தின்னும் இல்லையா?"

மாலையில் அவன் திரும்பி வந்தபோது எருதும் அவன் கூடவே தான் இருந்தது.

அவன் வருகைக்காகக் காத்திருந்த மனைவி கேட்டாள்: "ஏங்க! விற்கவில்லையா?"

ஷேகூ வருத்தத்துடன் தலையை அசைத்தான். "யாரும் வாங்க முன்வரவில்லை. கசாப்புக்காரன் ஏழு ரூபாய்க்குக் கேட்

டான். அவனுடைய கத்தியால் வெட்டப்பட்டுச் சாவதைவிட இது நம் வீட்டு வாயிலிலேயே செத்தால் என்ன கெட்டுப்போயிற்று ?''

ஆடுகளைக் கொடுத்து உணவு தானியம் வாங்கி வருவதற்காக மக்கள் தொலைதூரத்திலுள்ள சந்தைகளுக்குப் போய்க் கொண்டிருந்தனர். நாலைந்து ஆடுகளைக் கொடுத்து எட்டுப்படி, பத்துப்படிச் சோளம் வாங்கி வந்து கொண்டிருந்தனர். அந்தச் சோளம் தொண்டைக்குக் கீழே இறங்க மறுத்தது. ஆரம்பத்தில் சென்றவர்களுக்காவது ஆடுகள் விலைபோயின. பின்பு சென்றவர்கள் வெறும் கையுடன்தான் திரும்பும்படி ஆயிற்று. எந்தச் சந்தையிலும் ஆடுகளை வாங்குவதற்கு ஆட்கள் இல்லை. வாங்கினால் அதற்கு என்ன தீனி கொடுக்க முடியும் ?

குச்சியாய் உலர்ந்துபோன ஆனந்தா ஒருநாள் என்னிடம் விடைபெற்றுப் போக வந்தான். ''உயிர்வாழ்ந்திருக்கப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன் வாத்தியாரய்யா !''

நான் என்ன சொல்லமுடியும் ? ''எங்கே போகிறாய் ?''

''காலிழுத்த போக்கில், எங்கு வழி கிடைக்குமோ அங்கு. தண்ணீரும் பயிர் பச்சையும் உள்ள இடத்துக்குப் போய் அங்கே வேலை செய்து பிழைத்துக் கொள்வேன். உயிரோடிருந்தால் திரும்பி வருவேன்.''

ஆனந்தா சிறிது தயங்கி நின்றான். பின்பு மெதுவாகக் கூறினான்: ''வாத்தியாரய்யா, அந்தக் கோள்மூட்டியை நானும் ஆயபூவும் சேர்ந்துதான் அடித்துப் போட்டோம். உங்களுக்கு ரொம்பவும் தொந்தரவு கொடுத்தான் இல்லையா ? அதற்காகத்தான் அடித்தோம்.''

''உண்மையாகவா ?''

''என் தலைமேல் ஆணையாக.''

''ஆனால் ஆயபூ அன்றிரவு என் பக்கத்திலேயே தானே தூங்கிக் கொண்டிருந்தான் !''

''அடித்துவிட்டுத் திரும்பிவந்து ஓசைப்படாமல் படுத்து விட்டான் !''

''உம் !''

உண்மையை ஒப்புக்கொண்ட பிறகு ஆனந்தா ராமோஷி புறப்பட்டுச் சென்றுவிட்டான்.

வீட்டுக் கதவுகளைப் பூட்டிவிட்டு ராமோஷி இனத்தவர் அனைவரும் கிராமத்தை விட்டே போய்விட்டார்கள். அந்த இருபது

இருபத்தைந்துபேரும் முதுகில் மூட்டை முடிச்சுகளைச் சுமந்து கொண்டு, திரும்பித் திரும்பித் தங்கள் வீடுகளைப் பார்த்தவாறு கிராமத்தை விட்டுப் போய்க் கொண்டிருந்தனர். உயிரைக் காப்பாற்றிக்கொள்ளும் ஒரே நோக்கம் அவர்களை உந்தித் தள்ளிக்கொண்டிருந்தது. அவர்களுடைய வெள்ளாடுகள் அவர்களுடன் சென்றன. தோள்களில் குழந்தைகள். பெண்கள், முதியவர்கள் எல்லோருமே புறப்பட்டுவிட்டனர். ஏதோ வேட்டைக்குப் புறப்பட்ட வேடர் பரிவாரம்போல் இந்த ராமோஷிகள் கொதிக்கும் புழுதி நிறைந்த பாதையில் கால்களை இழுத்தவாறு உணவு வேட்டைக்குப் புறப்பட்டு விட்டனர். ராமோஷிப் பேட்டை ஒரேயடியாகக் காலியாகி விட்டது.

பிறகு மெள்ள மெள்ள ஆட்டு மந்தைகளை ஓட்டிக்கொண்டு ஆட்டுக்காரர்கள் புறப்பட்டுச் சென்றனர். அவர்களுடைய சடை நாய்களும் சென்றுவிட்டன. எந்த ஆடுகளை நம்பி ஆட்டுக்காரர்களின் வாழ்க்கை நடந்துவந்ததோ, அந்த ஆடுகள் பட்டினியால் மடியத் தொடங்கியதும் ஆட்டுக்கார இளைஞர்கள் நெஞ்சைக் கல்லாக்கிக் கொண்டு கிராமத்து மண்ணை உதறிவிட்டுப் புறப்பட்டனர். அவர்கள் குடும்பத்தவரும் உடன் சென்றனர். பஞ்சத்தால் பீடிக்கப்பட்ட பிரதேசத்தைக் கடந்து எவ்வளவு தூரமானாலும் சரி, எந்த இடமானாலும் சரி, அவர்கள் போய்த்தான் ஆகவேண்டும். எவ்வளவு சாமானை எடுத்துச் செல்ல முடியுமோ அவ்வளவையும் முதுகில் சுமந்தவாறு அந்த ஆட்டுக்காரர்கள் புறப்பட்டுச் சென்றனர். ' மே...மே ' என்று கத்திக் கொண்டிருந்த ஆடுகளை ஓட்டிக் கொண்டு, அவற்றின் நடக்கமுடியாத குட்டிகளை தூக்கிக்கொண்டு அவர்களின் பிரயாணம் துவங்கியது.

ராமாக் கோனான் புறப்படுவதற்கு முன்னால் என்னைக் கட்டித் தழுவிக்கொண்டான். '' மோர்ச்சாபூர் நோக்கிப் போகிறேன். அங்கே சொந்தக்காரர்கள் இருக்கிறார்கள். பெரியவர் இங்கிருந்து கிளம்பத் தயாராக இல்லை. அவரைக் கவனித்துக் கொள்ளுங்கள்,'' என்று கூறினான்.

கிழட்டுக் காகூபாக் கோனார் கிராமத்திலேயே தங்கிவிட்டார். மகன் எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். ஆனால் அவர் சம்மதிக்கவில்லை. ''நான் ஏன் போகவேண்டும்? நீ ஆடுகளை ஓட்டிக் கொண்டு போகிறாய். அவற்றை வாழவைப்பதற்காகப் போகிறாய். எனக்கு இனிமேல் என்ன இருக்கிறது? ஓடியாடி உயிரைக்

காப்பாற்றிக் கொள்ளும் நிலையில் நான் இல்லை இப்போது. நீ போ. என்னுடைய கட்டை இந்த மண்ணிலேயே கரைந்து போகட்டும்.''

பிறகு ராமாக் கோனன் கொஞ்சம் தானியம் சேகரம் செய்து வைத்தான். கிழவருக்குச் சமைத்துப் போடுவதற்குத் தன்னுடைய வீட்டுக்காரியை அங்கேயே விட்டுவிட்டு ஆடுகளை ஒட்டிக்கொண்டு புறப்பட்டான். அப்போது கிழவர் கூறினார்: '' நீ எல்லா ஆடுகளையும் ஒட்டிக்கொண்டு போய்விட்டால் இங்கே நான் என்ன செய்வது ? இரண்டு ஆடுகளையாவது விட்டுவிட்டுப் போ. என்னுடைய சாப்பாட்டில் கொஞ்சம் மிச்சம் பிடித்து அவைகளுக்கும் கொடுக்கிறேன். சமாளிக்க முடியாவிட்டால் ஒன்றாகவே மடிந்துபோகிறோம்.''

கிழவரிடம் இரண்டு ஆடுகளை விட்டு வைத்துவிட்டு ராமாக் கோனனும் அவனுடைய வாலிப மைந்தனும் புறப்பட்டுச் சென்று விட்டார்கள். ஏதாவது ஓரிரு வீடுகளில்தான் பின்தங்கியவர் யாராவது இருந்தார்கள். மற்ற வீடுகளில் யாருமே இல்லை. எல்லோரும் அவசரம் அவசரமாகப் புறப்பட்டுச் சென்றுவிட்டார்கள். கலங்காமல் கண்ணீர் வடிக்காமல் அவர்கள் தத்தம் வழியே சென்றனர்.

விரல் விட்டு எண்ணக்கூடிய விவசாயிகள் தாங்கள் சேமித்து வைத்திருந்த தானியத்தின் பலத்தில் மேலும் ஒரு மாதம் தங்கியிருந்தார்கள். பின்பு அவர்களும் புறப்பட்டுப் போய்விட்டார்கள். பாலாக் கோனன் சென்றுவிட்டான். ஒற்றை எருதை ஓட்டிக் கொண்டு ஷேகூவும் அவனுடைய மனைவியும் போய்விட்டனர். துலாக் கோனன் சென்றுவிட்டான். கிராமத்து விவசாயிகள் நடையைக் கட்டினர். அவர்கள் வீடுகள் மூடப்பட்டன. கதவுகளில் பூட்டுத் தொங்கியது. பாலாக் கோனனின் முதுகில் உட்கார்ந்து கொண்டு கோள்மூட்டித் தாதூவும் சென்றான். போகும்போதே பள்ளிக்கூடத்தின் அருகில் வந்ததும் அவன் உரக்கக் கத்தினான்: '' ஏ வாத்தியார்! நான் போகிறேன். ஆனால் உயிரோடு திரும்பி வந்து உன்னைக் கவனித்துக் கொள்கிறேன். அடே ! எனக்கு நன்றாகத் தெரியும் ! நீதான் என்னுடைய கைகால்களை ஒடித்துப் போட்டாய் !''

காலையும் மாலையும் ஆயிரக் கணக்கில் கிராமத்திலிருந்து வெளியே சென்று மீண்டும் கிராமத்துக்குத் திரும்பிவரும் ஆட்டு மந்தைகள் எல்லாம் சென்றுவிட்டன. ஆட்டுக்கார வாலிபர்கள்

அகன்றனர். கிராமமே பாழடைந்து போயிற்று. மேய்ச்சலிலிருந்து திரும்பிவரும் தாய்ஆடுகளின் அலறலை இனிக் கேட்க முடியாது. கிராமம் ஊமையாகிவிட்டதுபோல் தோன்றியது. குடிசைகளிலிருந்து புகை கிளம்பவில்லை. பள்ளிக்கூடத்தின் எதிரே ஜனங்கள் கூட்டம் போடுவதில்லை. ஆட்டுப் பிழுக்கைகளும் சிறுநீரும் சேர்ந்து கிளப்பும் உக்கிரமான நெடி மறைந்துபோயிற்று. கிராமம் உயிரிழந்ததாகி விட்டது. கலகலப்பாயிருந்த கிராமம் வாயடைத்து ஸ்தம்பித்துப் போயிற்று. ஒருதடவை மழை பெய்யாமல் ஏமாற்றியது, வருண பகவானின் தரிசனம் கிடைக்கவில்லை என்றதுமே கிராமம் படுத்து விட்டது! அந்த ராமாக் கோனன், அந்த ஷேகூபா, அந்த ஆனந்தா, கோள்மூட்டி, பாலா — எல்லோரும் மறைந்து போனார் கள். நல்லவர், கெட்டவர் எல்லோரும் போய்விட்டார்கள். பள்ளிக் கூடம் அப்படியே இருந்தது; விளையாட்டுக்கூடம் அப்படியே இருந்தது; இந்த வீடுகளும் மரங்களும் முன்பு இருந்தபடியே இருந்தன. ஆனல் ஆட்கள் கிளம்பிச் சென்றுவிட்டார்கள்!

பலத்த காற்று இரைந்தவாறு வீசிக்கொண்டிருந்தது. அந்தக் காற்றுக் கிளப்பிய புழுதி வீட்டுக் கதவுகளிலும் சுவர்களிலும் படிந் தது. ஆட்டுக்காரர்களின் வீடுகளில் சுத்தமாக மெழுகி வைக்கப் பட்டிருந்த முற்றங்களில் தூசியும் தும்பும் குப்பை கூளங்களும் நிறைந்துபோயின. புல்வேய்ந்த கூரைகள் காற்றில் அலைந்து குலைந்து அங்கங்கே திறந்துகொண்டன. அந்தக் கூரைத் துரும்பு கள் எல்லா இடங்களிலும் பரவி விழுந்தன. அங்கங்கே ஏற்பட்ட சந்துகள் வழியே புகுந்து அடித்த காற்று விசித்திரமான ஒலிகளை எழுப்பியது. கூரையின் மீது எறியப்பட்டிருந்த ஒடிந்த கருவிகள் கீழே முற்றத்தில் விழும் ஒலிகள் கேட்டவாறிருந்தன. வீடுகளின் அடைத்த கதவுகள் மீது காற்று மோதி முட்டியது. கதவுகள் தட தடவென்றும் கடகடவென்றும் அடித்துக் கொண்டன. விளையாட்டுக் கூடத்தில் புழுதி சேர்ந்துபோயிற்று. குஸ்தி மேடையின் செம்மண் ணின் மீது புழுதிப்படலம் படிந்தது. சிலந்திகள் வலை பின்னின, யானை நடனத்துக்கான தம்பட்டத்தை எலிகள் கடித்துப் போட்டன. நிறைய நாட்களாக மெழுகப்படாத காரணத்தால் பள்ளிக்கூடத் தரை பாளம் பாளமாகப் பெயர்ந்து போயிற்று. பலகைமீது, மேஜைமீது, பெட்டியின் மீதெல்லாம் புழுதி படிந்தது. ஆஞ்சநேயர் கோயிலில் புழுதி சேர்ந்துபோயிற்று. ஆஞ்சநேயரின் சிவந்த மேனி புழுதியில் குளித்தாற்போல் ஆகியது.

கிராமத்தில் ஜன நடமாட்டமே காணப்படவில்லை. தினந் தோறும் மாலையில் வேப்பமரக் கிளை நுனியில் வந்து உட்காரும் கொக்குகள் வருவதையே நிறுத்திவிட்டன. பள்ளிக்கூடத்தில் இரைச்சல் போட்டுக் கொண்டிருக்கும் குருவிகளும் மற்றப் பறவை களும் இப்போது காணப்படவே இல்லை. பூனைகள் எங்கே பார்த்தா லும் சுற்றியலைந்து கொண்டிருந்தன. பூட்டியிருந்த வீடுகளுக் குள்ளே எலிகளை வேட்டையாடிக் கொண்டிருந்தன.

இரவில் காகூபாவின் ஆடுகள் 'மே...மே' என்று கத்தியவாறு தனிமையில் தவித்தன. துணிச்சலடைந்த ஓநாய் கிராமத்தில் புகுந்து இங்குமங்கும் மோப்பம் பிடித்துக்கொண்டு திரிந்தது. விளையாட்டு அரங்கின் புழுதியில், கோயிலின் புழுதியில், ஆட்டுக் காரர் வீட்டு முற்றங்களில் படிந்திருந்த புழுதியில் – இங்கெல்லாம் ஓநாயின் கால் தடங்கள் பதிந்திருந்தன.

காலை நேரத்தில் அந்த இரண்டே ஆடுகளை அழைத்துக் கொண்டுக் கிழட்டு காகூபாக் கோனார் வயல்புறங்களில் செல்வார். பசித்திருக்கும் ஆடுகள் பரம்பு நிலத்தில் இங்குமங்கும் ஓடியவாறு இருக்கும். முகத்தை உயர்த்தி மூக்கைச் சிலிர்ப்பிக் கொண்டு வறண்ட காற்றை மோப்பம் பிடிக்கும். வயல்களில் அவற்றுக்கு உணவாகக் கூடிய எதுவுமே மிஞ்சியிருக்கவில்லை. மந்தையிலிருந்து பிரிந்து தனியாகிவிட்ட காரணத்தால் அவை தீனமான குரலில் கத்தும். உடனே காகூபா அவற்ரோடு உரையாடுவார். உழுது போட்டிருந்த வயல்களில் புற்களின் வேர்கள் மேலே வந்திருந்தன. அந்த வேர்க் கட்டைகளைப் பிடுங்கியெடுத்து வேஷ்டி மடியில் சேர்த்துக் கொண்டுவந்து அந்த ஆடுகளுக்கு ஊட்டுவார் காகூபா. நாள் முழுவதும் அவர் இவ்வாறு அந்த வேர்களைச் சேகரம் செய்வ தற்காக அலைந்து கொண்டிருப்பார். ஆடுகளும் 'மே...மே' என்று குரல் கொடுத்தவாறு அவர் பின்னாலேயே சுற்றிக் கொண்டிருக்கும். மாலை நேரம் ஆனதும் கிழவர் 'ஹா... ஹா' என்று குரலெழுப்பி அந்த இரண்டு ஆடுகளையும் ஓட்டிக்கொண்டு கிராமத் துக்குத் திரும்பிவந்து சேர்வார்.

கிராமத்திலேயே தங்கி விட்டிருந்த ராமாக் கோனின் வீட்டுக் காரி காலையில் ஒரு வெற்றுக் கூடையைத் தலையில் வைத்துக் கொண்டு மண் வெட்டியை இடுப்பில் சொருகியவாறு வெளியே புறப்பட்டுச் செல்வாள். ஆறு ஏழு மைல் தூரம் கால் தேய அலைந்து விட்டு அவள் திரும்பி வரும்போது அவளுடைய கூடையில் நாலைந்து

காரட் கிழங்குகள், அடுப்பெரிக்கச் சுள்ளிகள், ஆடுகளுக்கு உண வாகக்கூடிய சிறிது தவிடு இதெல்லாம் இருக்கும். அங்கங்கே கெஞ்சிக் கேட்டு வாங்கிவந்த இந்தச் சம்பாத்தியத்துடன் அவள் மாலையில் வீட்டுக்குத் திரும்பி வருவாள். சிறிது நேரத்துக்கு அவர்க ளுடைய குடிசையில் சிவந்த ஜ்வாலையுடன் அடுப்பு எரியும். கறுப்பும் வெண்மையுமான புகை கூரைக்கு மேலே கிளம்பும். சில சமயம் பேச்சுக் குரலும் கேட்கும்.

நடுநடுவே நான் என் சொந்தக் கிராமத்துக்குப் போய் வந்து கொண்டிருந்தேன். இங்கு நடந்த விஷயங்களைப்பற்றி நான் அரசாங்கத்துக்கு அறிக்கை அனுப்பியிருந்தேன். வாரத்தில் இரண்டு மூன்று நாட்கள்தான் பன்கர்வாடியில் கழித்தேன். பகற் பொழுதில் நாங்கள் இரண்டுபேர்தான் கிராமத்தில் இருந்துகொண் டிருந்தோம். ஆயபூ குந்திறைற்போல் உட்கார்ந்து முழங்காலைக் கைகளால் வளைத்துப் பிடித்துக்கொண்டு எங்காவது அமர்ந்திருப் பான். எப்போதாவது மனம் வைத்தால் பள்ளிக்கூடம், விளையாட் டுக் கூடம் எங்கும் பெருக்குவான். நான் நாள் முழுவதும் படுத்த படியே இருப்பேன். எப்போதாவது ஏதேனும் படிப்பதோ எழுது வதோ செய்வேன். நடுவிலேயே ஆயபூ என்னிடம் சொல்லிக் கொள் ளாமல் எங்கே போவானோ தெரியாது. புழுதி படிந்த கால்களுடன், அலுத்துச் சலித்துப்போய் அவன் மாலையில் திரும்பி வருவான். தலை யைக் கவிழ்த்துக்கொண்டு உட்கார்ந்திருப்பான். எங்கே போயிருந் தாய் என்று கேட்டால் ‘சும்மா சுற்றிவிட்டு வந்தேன்’ என்று கூறி மௌனமாகிவிடுவான் ஆயபூ.

பகல் பொழுதாவது எப்படியோ ஒருவிதத்தில் கழிந்துபோய்க் கொண்டிருந்தது. ஆனால் இரவு நேரமோ கடிக்க வருவதுபோல் பயங்கரமாகத் தோன்றியது. இம்மாதிரி நேரத்தில் எப்போதாவது காகூபாக் கிழவர் வந்து சேர்வார். சுவரில் சாய்ந்துகொண்டு உட் கார்ந்திருப்பார் அவர். அறையில் மங்கலான சிமிணி விளக்கின் ஒளி பரவியிருக்கும். நான் என்னுடைய எண்ணங்களில் மூழ்கி இருப் பேன். ஆயபூ தனது செயலற்ற தவிப்பில் மூழ்கியிருப்பான். காகூபா இங்குமங்கும் பார்த்துக் கொண்டிருப்பார். மூவரும் மூன்று திசை களில் உட்கார்ந்திருப்போம்.

“காகூபா, ராமாவிடமிருந்து ஏதேனும் செய்தி உண்டா?” என்று நான் கேட்பேன்.

“இல்லை.”

'' போனவர்கள் எப்போது திரும்பி வருவார்கள் ?''

'' மழை பெய்த பிறகு வருவார்கள்.''

நான் என் வீட்டிலிருந்து கொண்டு வந்த ரொட்டிகளில் இரண்டு மூன்று நாட்கள் பழையதான ரொட்டிகளை ஆயபூவுக்குக் கொடுப்பேன். சிலசமயம் வாங்கிக் கொள்வான், சில வேளைகளில் மறுத்துவிடுவான். அதிகமாக வற்புறுத்தினால் அவன் வெளியே சென்று விடுவான். நான் தனிமையிலேயே உட்கார்ந்து அந்தக் காய்ந்த ரொட்டிகளைச் சாப்பிட்டுவிட்டுத் தண்ணீரையும் குடித்துவிட்டுப் படுத்துக் கொள்வேன்.

இவ்வாறு சில நாட்கள் கழிந்து சென்றன. பிறகு ஒருநாள் எனக்கு மேலிடத்திலிருந்து கடிதம் வந்தது. பன்கர்வாடிப் பள்ளிக் கூடத்தை மூடிவிட்டு தாலூகாத் தலைநகரத்தில் உள்ள ஆரம்பப் பள்ளிக்கு வந்துவிடும்படி அதில் எழுதப்பட்டிருந்தது.

ஆயபூ என்னுடைய சாமான்களை ஒன்று சேர்த்துக் கட்டினான். நான் இருந்த இடத்தைக் காலி செய்தான். பள்ளிக்கூடத்தை இழுத்துப் பூட்டினான். விளையாட்டுக் கூடத்தையும் பூட்டினான். நான் அப்படியே காகூபாவின் வீட்டுக்குப் போனேன்.

'' பெரியவரே, போகிறேன். அரசு என்னைத் திரும்ப அழைத்திருக்கிறது...''

காகூபா கண்ணிமைக்காமல் என்னையே பார்த்தார். ' ஹ்ம் ' ' ஹ்ம் ' என்று கூறியவாறு இரண்டு மூன்று முறை தலையை ஆட்டினார். '' சரி !''

கிழவர் அதிகம் பேசவில்லை. அவருடைய மருமகள் ஒன்றுமே பேசவில்லை. வேற்று மனிதன் என்ற உணர்வில் ஆடுகள் இரண்டு மூன்று முறை கத்தின. நான் காகூபாவிடம் விடை பெற்றுக் கொண்டு வெளியே வந்தேன்.

ஆட்களோ கால்நடைகளோ எந்தப் பிராணியும் தென்படவில்லை. நாங்கள் கிராமத்தைப் பின்னால் விட்டுவிட்டு ஒற்றையடிப் பாதை வழியே திரும்பிப் போய்க் கொண்டிருந்தோம். சாமான் நிரம்பிய ஒரு சாக்கு மூட்டையைத் தலையில் சுமந்துகொண்டு ஆயபூ என் பின்னாலேயே வந்துகொண்டிருந்தான். சில சாமான்கள் என் கையில் இருந்தன.

நடுவில் ஆயபூ சற்று நின்று தலைமீது வைத்திருந்த மூட்டையைச் சரிசெய்து கொண்டபிறகு, என் பக்கம் பார்க்காமலே கூறினான் : '' இந்த மூட்டையை உங்கள் வீட்டில் போட்டுவிட்டு நான் திரும்பிப் போய்விடுவேன்.''

'' எங்கே போவாய், என்ன செய்யப் போகிறாய்?'' -- எதுவுமே நான் கேட்கவில்லை. இந்தத் திக்கற்றவனுக்கு எங்கே புகலிடம் கிடைக்கும் என்ற எண்ணம்கூட என் மனத்தில் எழவில்லை. என்னுடைய நிழல் எனக்கு முன்னே நழுவி நழுவிப் போய்க்கொண்டிருந்தது. புழுதி அதிகரித்துக் கொண்டிருந்தது. எதிரே கண்ணுக்கெட்டிய தூரம் வரை பரவியிருந்த அந்த மேட்டுப் பரம்பில் ஒரு பிராணியும் கண்ணுக்குப் புலப்படவில்லை. பாழடைந்த பனைகர்வாடி பின்தங்கிவிட்டது. நான் திரும்பப் போய்க் கொண்டிருந்தேன்.



